ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பரமகாருணிகரான பிள்ளைலோகாசார்யர்

திருவாய்மலர்ந்தருளின

# முமுக்ஷுப்படியும்,



இதற்கு

மணவாளமாமுனிக ளருளிச்செய்த

திருமந்த்ரார்த்தமென்கிற வ்யாக்யாநமும்,

ப்ரமாணத்திரட்டும்

ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதிஸாகேத

ராமாநுஜஜீயர்ஸ்வாமி அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

கா. வெ. திருக்கச்சிநம்பி தாஸரால

சென்னை:

பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்தில்

பதிப்பித்து பிரசுரம் செய்யப்பட்டது.

---

பராங்குச திருவவதாராதி, ௫0௪௬ - வது

ஸம்வத்ஸரமான விரோதிகிருது ஞூ

இதன் விலை 1911. ரூபா 1—0—0.

# புஸ்தக விளம்பரம்.

| | | |
|---|---|---|
| நாலாயிர திவ்ய ப்ரபந்தம் 10 விஷயங்களடங்கியது படங்களுடன் உயர்ந்த பயிண்டு ... ... | 2 | 0 |
| திருப்பாவை 30 பாசுரமும் பதவுரையும் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த மூவாயிரப்படிவ்யாக்யானமும் அரும்பதவிளக்கமும், ஸ்வாபதேசவ்யாக்யானமும் ப்ரமாணத்திரட்டுடன் ... ... | 1 | 4 |
| ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்ரப்ரதிபத வ்யாக்யானமும் ... | 0 | 8 |
| துலாக்காவேரி மகுத்துவம் வசனம் ... ... | 0 | 6 |
| சர்வோபாயநிர்ணயம் .. ... ... ... | 0 | 3 |
| திருக்கச்சிநம்பிப்ரபாவம் ... ... ... | 0 | 2 |
| ஸ்ரீரங்க மகுத்துவம்கிரந்தஸ்லோகம் தமிழ்வ்யாக்யானம் | 0 | 8 |
| திருக்கோட்டியூர் நம்பிவுடையவருக்கு அருளிச்செய்த 18-குட்டிரகசியம் ... ... ... | 0 | 3 |
| உடையவர் அருளிச்செய்த 82-வார்த்தை ... ... | 0 | 1 |
| கோயில்கந்தாடை பெரிய அண்ணன் ஸ்வாமி தனியன்களும் வாழித்திருநாமங்களுடன் ... ... | 0 | 2 |
| முதலாயிரம் தனி ... ... ... ... | 0 | 12 |
| பெரிய திருமொழி தனி ... ... ... | 0 | 12 |
| இயற்பா தனி ... ... ... ... | 0 | 10 |
| திருவாய்மொழி தனி ... ... ... ... | 0 | 12 |
| நித்யாநு சந்தானம் முன்னடி பின்னடியுடன் வுயர்ந்த பயிண்டு ... ... ... ... | 0 | 8 |
| ஷை மட்ட பயிண்டு ... ... ... ... | 0 | 6 |
| 108-திருப்பதிதிவ்ய தேசவிவரமும் ஆழ்வார்கள் மங்களாஸாசனம் செய்தருளின பாசுரங்களின் தலப்பும் ரெயில்வே டேஷன் விவரமும் டேசனிலிருந்து இன்னதிக்கில் இத்தனைமைல் என்றும் விவரமாக அச்சிடபட்டது... ... ... ... | 0 | 4 |
| 12000-ப்படி குருபரம்பரை ... ... ... | 1 | 8 |
| யதீந்த்ரப்ரவணப்ரபாவம் ... ... ... | 1 | 0 |
| விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம் ... ... | 0 | 12 |
| வுபதேச ரத்னமாலைவ்யாக்யானம் ... ... | 0 | 8 |
| ஸப்த்தகாதை வ்யாக்யாணம் ... ... ... | 0 | 8 |

இன்னும்வேண்டிய ஸ்ரீகோசங்கள் கிடைக்கும்.

☞ கா. வெ. திருக்கச்சிநம்பி நாயர்,
ஸ்ரீ வைஷ்ணவ சம்பரதாய புஸ்தகசாலை,
23, நாண்டவராய முதலிவீதி,
ஸ்ரீ பார்த்தசாரதி கோவில்சமீபம்,
திருவல்லிக்கேணி, சென்னை



ஸ்ரீ மணவாள மாமுனிகள்.

ANANDA PRESS, MADRAS.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருமந்த்ரார்த்தம்.

---

தொடங்கும்போதநுசந்திக்கும்படியான

## தனியன்கள்.

மணவாளமாமுநிகளருளிச்செய்த ரஹஸ்யார்த்த ஸம்ப்ரதாயபரம்பரையின்

ஒட்டுத்தனியன்.

𑌲𑍋𑌕𑌗𑍁𑌰𑍁𑌂𑌗𑍁𑌰𑍁𑌭𑌿𑌸𑍍𑌸𑌹 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌕𑍂𑌰𑌕𑍁-
𑌲𑍋𑌤𑍍𑌤𑌮𑌦𑌾𑌸𑌮𑍁𑌦𑌾𑌰𑌮𑍍 । 𑌶𑍍𑌰𑍀𑌨𑌗𑌪𑌤𑍍𑌯𑌭𑌿𑌰𑌾𑌮𑌵𑌰𑍇𑌶𑍌 𑌦𑍀𑌪𑍍𑌤𑌶-
𑌯𑌾𑌨𑌗𑍁𑌰𑍁𑌂𑌚 𑌭𑌜𑍇𑌹𑌮𑍍 ॥

லோககுரும் குருபிஸ்ஸஹபூர்வை: கூரகுலோத்தமதாஸமு
தாரம் | ஸ்ரீநகபத்யபிராமவரேஶௌ தீப்ரஶயாநகுரும் ச பஜே
ஹம் ||

ஈயுண்ணிபத்மநாபரருளிச்செய்த பிள்ளைலோகாசார்யர் விஷயமான

தனியன்

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌯 𑌗𑍁𑌰𑌵𑍇𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌾𑌦𑌸𑍍𑌯 𑌸𑍂𑌨𑌵𑍇 ।
𑌸𑌂𑌸𑌾𑌰𑌭𑍋𑌗𑌿𑌸𑌂𑌦𑌷𑍍𑌟 𑌜𑍀𑌵𑌜𑍀𑌵𑌾𑌤𑌵𑍇 𑌨𑌮𑌃 ॥

லோகாசார்யாயகுரவேக்ருஷ்ணபாதஸ்யஸூநவே |
ஸம்ஸாரபோகி ஸந்தஷ்ட ஜீவஜீவாதவேநம: ||

பூர்வோக்தகுருபரம்பரைக்கு ப்ரத்யேகதனியன்கள்

திருவாய்மொழிப்பிள்ளை யருளிச்செய்த கூரகுலோத்தமதாஸர் விஷயமான

தனியன்.

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌕𑍃𑌪𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌕𑍌𑌣𑍍𑌡𑌿𑌨𑍍𑌯𑌕𑍁𑌲𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ।
𑌸𑌮𑌸𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌵𑌾𑌸𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇𑌕𑍂𑌰𑌕𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥

லோகாசார்யக்ருபாபாத்ரம் கௌண்டிந்யகுலபூஷணம் |
ஸமஸ்தாத்மகுணாவாஸம் வந்தே கூரகுலோத்தமம் ||

மணவாளமாமுனிகளருளிச்செய்த திருவாய்மொழிப்பிள்ளை விஷயமான
தனியன்.

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌨𑌗𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 ।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌲𑌬𑍍𑌧𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ॥
நமஶ்ஶ்ரீஶைல நாதாய குந்தீநகரஜந்மநே |
ப்ரஸாதலப்த்த பரம ப்ராப்ய கைங்கர்யஶாலிநே ||

மணவாளமாமுனிகளுக்குமாதாமஹரான கோட்டூரழகியமணவாளப்பெருமாள்
பிள்ளை தனியன்.

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌜𑌰𑌾𑌜𑌹𑌂𑌸𑌾𑌯𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌜𑌲𑌧𑌿𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑍌𑌮𑍍𑌯𑌵𑌰𑌂 𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 ॥
லோகாசார்ய பதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம் |
ஜ்ஞாந வைராக்யஜலதிம் வந்தே ஸௌம்யவரம் குரும் ||

மணவாளமாமுனிகளருளிச்செய்த திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான்
தாதரண்ணரையன் விஷயமான தனியன்.

𑌶𑍍𑌰𑍀𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌵𑌦𑌧𑍀𑌶𑌦𑌾𑌸𑌮𑌮𑌲𑌮𑌶𑍇𑌷𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑌮𑍍 ।
𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌵𑌰𑌗𑍁𑌰𑍁𑌕𑌰𑍁𑌣𑌾𑌕𑌨𑍍𑌦𑌲𑌿𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑍍𑌦𑌿𑌰𑌂 𑌕𑌲𑌯𑍇 ॥
ஸ்ரீஜிஹ்வாவததீஶதாஸமமலமஶேஷஶாஸ்த்ரவிதம் |
ஸுந்தரவரகுருகருணாகந்தளித ஜ்ஞாநமந்திரம்கலயே ||

சாற்றும்போதநுஸந்திக்குந் தனியன்கள்.
வானமாமலைஜீயரருளிச்செய்தது.

கோதிலுலகாசிரியன் கூரகுலோத்தமதாதர்
தீதில்திருமலையாழ்வார் செழுங்குரவைமணவாளர்
ஓதரியபுகழ்த்திருநாவீறுடையபிரான்றாதருடன்
போதமணவாளமுனிபொன்னடிகள்போற்றுவனே. (௧)

வாழியுலகாசிரியன் வாழியவன்மன்னுகுலம்
வாழிமுடும்பையென்னுமாநகரம்-வாழி
மனஞ்சூழ்ந்தபேரின்பமல்குமிகுநல்லா
ரினஞ்சூழ்ந்திருக்குமிருப்பு. (௨)

ஓதுமுடும்பையுலகாசிரியனரு
ளேதுமறவாதவெம்பெருமான்- நீதிவழி
வழுவாச்சிறுநல்லூர் மாமறையோன்பாதந்
தொழுவார்க்குவாராதுயர். (௩

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளேஶரணம்.
ஜீயர் திருவடிகளேஶரணம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# திருமந்த்ரார்த்தம் - அவதாரிகை.

ஸ்ரிய:பதியாய் ஸ்ரீவைகுண்ட நிகேதநனாய் நித்யமுக்தாநுபாவ்யனாய் நிரதிசயாநந்த யுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரன், அந்த நித்யஸூரிகளோபாதி தன்னை யநுபவித்து நித்யகைங்கர்யபரராய் வாழுகைக்கு ப்ராப்தியுண்டா யிருக்கச்செய்தேயும், அத்தை யிழந்து * "அஸந்நேவ" (அஸந்நேவ) என்கிறபடியே அஸத்கல்பராய்க்கிடக்கிற ஸம்ஸாரிசேதநருடைய விழவையநுஸந்தித்து, அத்யந்தவ்யாகுலசித்தனாய், இவர்கள் கரணகளேபரங்களை யிழந்து இறகொடிந்தபக்ஷிபோலே கிடக்கிற தசையிலே, கரணாதிகளைக்கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யபிசரியாதே, தன்னையாச்ரயித்துஜ் ஜீவிக்கைக்குடலாக, அபௌருஷேயமாய் நித்ய நிர்தோஷமாய் ஸ்வத:ப்ரமாணமான வேதத்தையும், தது பப்ரும்ஹணங்களான ஸ்ம்ருதிதிஹாஸபுராணாதிகளையும் ப்ரவர்த்திப்பித்த விடத்திலும், அந்த சாஸ்த்ராப்யாஸத்துக்கு அநேகயோக்யதை வேண்டுகையாலே அவ்வழியாலே ஜ்ஞாநம்பிறந்து சேதநர் உஜ்ஜீவிக்கை யரிதாயிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி, ஸகலசாஸ்த்ரதாத்பர்யங்களையும், ஸங்க்ரஹமாக இவர்களறியலாம்படி பண்ணவேணுமென்று, ஸ்வரூபோபாயபுருஷார்த்த யாதாத்ம்ய † ப்ரதிபாதகமான ரஹஸ்யத்ரயத்தையும். ஸ்வயமேவ ஆசார்யனாய்நின்று ப்ரகாசிப்பித்தருளினன். அதில் திருமந்த்ரத்தை ஸ்ரீபதரிகாச்ரமத்திலே ஸ்வாம்சபூதனான நரன்விஷயமாக ப்ரகாசிப்பித்தான். த்வயத்தை ஸ்ரீவிஷ்ணுலோகத்திலே ஸ்வமஹிஷியான பிராட்டி விஷயமாக ப்ரகாசிப்பித்தான். சரமச்லோகத்தை திருத்தேர்த்தட்டிலே ஸ்வாச்ரிதனான அர்ஜ்ஜுநன்விஷயமாக ப்ரகாசிப்பித்தான். ஆகையாலிறே † "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" (லக்ஷ்மீநாதஸமாரம்பாம்) என்று, குருபரம்பராதியிலே ஈச்வரனையநு

---

* தைத். உப. க. ப்ர-அ-அ.  † ப்ரகாசக

† கூரத்தாழ்வானருளிச்செய்தது.

ஸந்திக்கிறது. இனியிந்தரஹஸ்யத்ரயந்தான், ஶப்தஸங்க்ர ஹமாயிருந்ததேயாகிலும் அர்த்தமுபதேஶகம்யமாகையாலு ம், அதறிந்தே எல்லார்க்கும் உஜ்ஜீவிக்க வேண்டுகையாலும்; அந்தரஹஸ்யத்ரயத்திலும் பூர்வாசார்யர்களுடைய வுபதேஶ பரம்பராப்ராப்தமான அர்த்தவிஶேஷங்களை, ஸர்வர்க்கும் ஸு க்ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும், பிள்ளைலோகாசார்யர் தம்மு டைய பரமக்ருபையாலே இப்ரபந்தமுகேந வருளிச்செய்கிறார்.

முன்பே, ரஹஸ்யத்ரய விஷயமாக மூன்றுப்ரபந்தமிட்ட ருளி யிருக்கச்செய்தேயும், அதில், யாத்ருச்சிகப்படி அதிஸங்க் ரஹமாகையாலும், பரந்தபடி அதிவிஸ்த்ருதமாகையாலும், ஸ்ரீ யஃபதிப்படி, உபயதோஷமுமின்றிக்கே யிருந்ததேயாகிலும், ஸம்ஸ்க்ருதவாக்ய பஹுளமாகையாலே பெண்ணுக்கும் பேதை க்கும் அதிகரிக்கப்போகாமையாலும், த்ரிவிததோஷ மில்லாத படி யின்னமும் ஒரு ப்ரபந்தமிடவேணுமென்று, திருவுள்ளம் பற்றி, எல்லாத்துக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப்ரப ந்தமிட்டருளிற்று. ஆகையிறே, அல்லாதப்ரபந்தங்கள்கிடக்க, இத்தை யெல்லாரும் அதிகரித்துப்போருகிறது. இன்னமும் பூர்வப்ரபந்தங்களில் அநுக்தமான அர்த்தவிஶேஷங்களும் இப் ரபந்தத்திலே உண்டாகையாலும், இதுவே எல்லார்க்கும் ஆதர ணீயமாயிருக்கும்.

அவதாரிகை முற்றும்.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

முமுக்ஷுப்படி வ்யாக்யாநம்.

# திருமந்த்ரப்ரகரணம்

## உபோத்காத:.

### ரூ(க) முமுக்ஷுவுக்கறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று

(க) (வ்யாக்யாநம்) (முமுக்ஷுவுக்கறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று) முமுக்ஷுவாகிறான் மோக்ஷத்திலே இச்சையுடையனானவன் *“முச்லு மோக்ஷணே” (முசில் மோக்ஷணே) யிறேதாது இத்தால், ஸம்ஸாரவிமோசநத்திலிச்சை பிறந்தவனுக்கென்றபடி. ஆத்மப்ராப்திகாமனுக்கும் முமுக்ஷுத்வமுண்டேயாகிலும், இவ்விடத்தில் அவன் விவக்ஷிதனன்று. அவனுக்கு ரஹஸ்யத்ரயஜ்ஞாநாபேக்ஷையில்லையிறே. ஆகையால் இவர் முமுக்ஷுவென்கிறது, பகவத்ப்ராப்திகாமதயா ஸம்ஸார நிவ்ருத்தியிலிச்சைபிறந்தவனை. ஏவம்பூதனானவனுக்கு (அறியவேண்டும் ரஹஸ்யம்மூன்று) என்றது, இவனுக்கவச்யம் ஜ்ஞாதவ்யமாயுள்ளது ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களாகையாலும், அவற்றையிந்த ரஹஸ்யத்ரயம் உள்ளபடி ப்ரதிபாதிக்கையாலும், ரஹஸ்யத்ரயமுமே அறியவேண்டுவதென்கை. “ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி:। ஜ்ஞாநத்ரயமுபாதேயம் ஏததந்யந்ந கிஞ்சந (ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி:-ஜ்ஞாநத்ரயமுபாதேயம் ஏததந்யந்நகிஞ்சந.) என்னக்கடவதிறே, (ரஹ

*ஶப்-வி-துத்.

ஸ்யம்மூன்று) என்றிவ நுத்தேஶிக்கிறது, திருமந்த்ரமும் த்வயமும் சரமஶ்லோகமுமாகிற விவற்றை யென்னுமிடம், மேலே ஸுஸ்பஷ்டம். இவற்றை ரஹஸ்யங்களென்கிறது, ஸகலவேதாந்தஸாரார்த்தப்ரதிபாதகதயா பரமகுஹ்யங்களாகையாலே. ஆகவிவ்வாக்யத்தால், அதிகாரி நிர்தேஶம் தத்ஜ்ஞாதவ்ய நிர்தேஶமும் பண்ணி யருளினாராய்த்து.

இனி அந்தரஹஸ்ய த்ரயத்திலும் ப்ரதமரஹஸ்யமேதென்னும் ஆகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார்,

## மூ (உ) அதில் ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்.

(உ) (வ்யா) (அதில்ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்) என்று. அதாவது, அந்தரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக்கொண்டு, இவ்வதிகாரிக்கு ப்ரதமம் ஜ்ஞாதவ்யமானரஹஸ்யம், ஸ்வரூபயாதாத்ம்யபரமாய் த்யாஜ்யோபாதேய விபாகஜ்ஞாநத்தைப் பரிபூர்ணமாகப் பிறப்பிக்குமதான திருமந்த்ரமென்கை. அநந்யார்ஹஶேஷத்வம்; அநந்யஶரணத்வம், அநந்யபோகத்வமாகிற வாகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கையாலே சேதநஸ்வரூப யாதாத்ம்ய ப்ரதிபாதநபரமாய், ததநுகுணமான த்யாஜ்யோபாதேய விபாகத்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதியா நின்றுள்ள இம்மந்த்ரத்தாலே ஸுஶிக்ஷிதமான ஸ்வரூபத்தையுடையவனுக்கிறே, மற்றைரஹஸ்யங்களிரண்டாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற உபாயோபேயங்களில் அபேக்ஷை ஜநிப்பது. ஆகையால் ஸ்வரூபயாதாத்ம்யபரமான திருமந்த்ரம், ப்ரதமரஹஸ்யமென்னக் குறையில்லை. இன்னமும், ப்ரணவத்துக்கு மந்த்ரஶேஷம் விவரணமானாப்போல மந்த்ரஶேஷத்துக்கு த்வயம் விவரணமாய், த்வயத்துக்கு சரமஶ்லோகம் விவரணமாயிறே யிருப்பது. அந்தந்யாயத்தாலும் இதினுடைய ப்ராதம்யம்ஸித்தமிறே. ஆக இவை யெல்லாத்தையும் திருவுள்ளம் பற்றியாய்த்து, (ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்) என்றிவரருளிச்செய்தது. இத்தை மந்த்ரமென்கிறது, † மநநாத்த்ராயதஇதிமந்த்ர: (மநநாத் த்ராயத இதிமந்த்ர:) என்கிறபடியே ஶப்தஶக்தியாலும் அர்த்தபோதநத்தாலும் தன்னையநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமாகையாலே. ஶப்த

† ஸஹஸ்ரநாமபாஷ்யம்.

ஶக்தியாலே ரக்ஷகமாம், ஜபஹோமாதிகளாலே கார்யங்கொள்ளும் உபாஸகர்க்கு. அர்த்தபோதகத்தாலே ரக்ஷகமாம், ஈஶ்வரனே உபாயோபேய மென்றிருக்கும் ப்ரபந்நர்க்கு. அர்த்தபோதகத்தாலே ரக்ஷகமாகையாவது, *“𑌦𑍇𑌹𑌾𑌸𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑌦𑌿 𑌭𑌵𑌤𑌿 𑌪𑌦𑌂 𑌸𑌾𑌧𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌧𑍋 𑌯𑌦𑌿 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌥𑌮𑌮𑌿𑌤𑌰𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌧𑍀𑌶𑍍𑌚𑍇𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍 । 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌰𑌾𑌣𑍋𑌨𑍍𑌮𑍁𑌖𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌚 𑌪𑌦𑌂 𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌭𑌾𑌸𑌲𑍋𑌲𑌃 𑌶𑌬𑍍𑌦𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌖𑍍𑌯𑌂 𑌵𑌿𑌷𑌯𑌚𑌪𑌲𑌧𑍀𑌶𑍍𑌚𑍇𑌚𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍀𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌃” (தேஹாஸக்தாத்ம புத்திர்யதி பவதிபதம் ஸாதுவித்யாத்த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தோ யதிஸ்யாத் ப்ரதமம் இதர சேஷத்வதீஶ்சேத் த்விதீயம்-ஆத்மத்ராணோந்முகஶ்சேந்நம இதிசபதம் பாந்தவாபாஸ லோலஶ் ஶப்தம் நாராயணாக்யம் விஷயசபலதீஶ்சேத் சதுர்த்தீம் ப்ரபந்ந:)

என்று பட்டரருளிச்செய்தபடியே தன்னை அநுஸந்திப்பார்க்கு தேஹாத்மாபிமாநமும், ஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமும், அபந்துஸங்கமும், விஷயப்ராவண்யமும் மேலிடாதபடி பண்ணி ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி நோக்குகை.

இனிமேல் இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை விஸ்தரேண ப்ரதிபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதினுடைய அநுஸந்தாநக்ரமகதநமுகத்தாலே இதின் வைபவத்தையருளிச்செய்கிறார்,

**சூ (௧) திருமந்த்ரத்தினுடைய ஶீர்மைக்குப் போருப்படிப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்க வேணும்.**

(௧)(வ்யா) (திருமந்த்ரத்தினுடைய) என்று தொடங்கி. திருமந்த்ரத்துக்குச்சீர்மையாவது †𑌋𑌚𑍋 𑌯𑌜𑍂𑌂𑌷𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌿 𑌤𑌥𑍈𑌵𑌾𑌥𑌰𑍍𑌵𑌣𑌾𑌨𑌿 𑌚 । 𑌸𑌰𑍍𑌵𑌮𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌂(ருசோயஜூம்ஷி ஸாமாநி

* அஷ்டச்லோகி-௨-ச்லோகம்.

† 𑌋𑌚𑍋 𑌯𑌜𑍂𑌂𑌷𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌿 𑌤𑌥𑍈𑌵𑌾𑌥𑌰𑍍𑌵𑌣𑌾𑌨𑌿 𑌚 । 𑌸𑌰𑍍𑌵𑌮𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌨𑍍𑌤𑌃𑌸𑍍𑌥𑌂 𑌯𑌚𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌦𑌪𑌿 𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌮𑍍 ॥

நைதவாதர்வணுநிச- ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம்) என்கிறபடியே ஸகலவேத ஸங்க்ரஹமாய், (க) "மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகமாய் *"மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம் । பவித்ரஞ்ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ்ஸநாதந:" மந்த்ராணும் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்ய முத்தமம் பவித்ரம் ச பவித்ராணும் மூலமந்த்ரஸ்ஸநாதந:) என்கிறபடியே மந்த்ரங்களில்வைத்துக்கொண்டுபரமமானமந்த்ரமாய், குஹ்யங்களில் வைத்துக்கொண்டு உத்தமமானகுஹ்யமாய், பவித்ரங்களுக்கும் பவித்ரமாயிருக்கிற கௌரவம். (சீர்மைக்குப் போரும்படி)என்றது, தகும்படி யென்கை. (ப்ரேமத்தோடே பேணியநு ஸந்திக்கை) யாவது, இத்தை யநுஸந்திக்குமளவில் ஶுஷ்கஹ்ருதயனுயிருந்தநுஸந்திக்கை யன்றிக்கே, இதின் வைலக்ஷண்யஜ்ஞாநமடியாக இதின்பக்கல் தனக்குண்டான ப்ரேமத்தோடே, குஹ்யாநாம் குஹ்யமானவிது †அநதிகாரிகள் செவிப்படாதபடி ‡"மந்த்ரம் யத்நேந கோபயேத்" (மந்த்ரம்யத்நேநகோபயேத்) என்கிறபடியே பேணிக்கொண்டநுஸந்திக்கை. இப்படி யநுஸந்திக்க வேணுமென்கையாலே ப்ரகாராந்தரேண அநுஸந்திக்கலாகாதென்கிற நியமம் தோற்றுகிறது.

இப்படி, தன்பக்கல் ப்ரேமமுண்டாகவே இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாமோ வென்ன வருளிச்செய்கிறுர்.

---

மூ (ச) மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனுன ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கநக்க வுண்டானுல் கார்யகரமாவது.

---

(ச) (வ்யா) (மந்த்ரத்திலும்)என்று தொடங்கி. அதாவது, ஜ்ஞாதவ்யார்த்தஜ்ஞாபகமான இம்மந்த்ரந்தன்னிலும், ஶேஷித்

---

(க) பெ-திருமொழி-அ-கய-ங.

*விஷ்வக்ஸேநஸம்ஹிதா.

† அசலறியாத.

‡[illegible] மந்த்ரம் யத்நேந கோபயேத் ।
அப்ரகாஶப்ரகாஶாப்யாம் க்ஷீயேதே ஸம்பதாயுஷீ ॥

ஸௌலப்யத்வப்ராப்யத்வங்களாகிற வாகாரத்ரயயுக்ததயா இம்மந்த்ரத்துக்கு வாச்யவஸ்துவாயிருக்கிற ஈஶ்வரவிஷயத்திலும் *"தந்மந்த்ரம் ப்³ராஹ்மணாதீ⁴நம்" (தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம்) என்கிறபடியே இம்மந்த்ரம் ஆசார்யாதீநமாயிருப்பதொன்றாகையாலே இத்தை யதாப்ரதிபத்தியுக்தனாய்க்கொண்டு தனக்குபகரித்த ஆசார்யவிஷயத்திலும் தத்தத்வைலக்ஷண்யாநுரூபமாகப்ரேமமதிஶயேந வுண்டானாலிவனுக்குக் கார்யகரமாவதென்கை. § "மந்த்ரே தத்³தே³வதாயாஞ்ச ததா² மந்த்ரப்ரதே³ கு³ரௌ । த்ரிஷு ப⁴க்திஸ்ஸதா³ கார்யா ஸா ஹி ப்ரத²மஸாத⁴நம் ॥ (மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததாமந்த்ரப்ரதே குரௌ-த்ரிஷுபக்திஸ்ஸதாகார்யா ஸாஹி ப்ரதமஸாதநம்) என்னக்கடவதிறே.

இனி இம்மந்த்ரத்தினுடைய அவதரணப்ரகார கதநமுகத்தாலே இதினுடைய அப்ரதிமவைபவத்தை யருளிச்செய்கிறார்,

**௫ (௫) ஸம்ஸாரிகள் தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து, ஈஶ்வர கைங்கர்யத்தையும் இழந்து.**

(௫) வ்யா (ஸம்ஸாரிகள்) என்றுதொடங்கி. ஸம்ஸாரிகளாகிறார்; அநாத்யசித்ஸம்பந்தத்தாலே ப்ரவாஹரூபேணவருகிற அவித்யாகர்மவாஸநாருசிவிவஶராய் ஜந்மமரணாதிக்லேஶபாகிகளாய்த் திரிகிற பத்தசேதநர்.

(தங்களையுமீஶ்வரனையும்மறந்து) என்றது †"தா³ஸபூ⁴தாஸ்ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: । நாந்யதா² லக்ஷணம் தேஷாம் ப³ந்தே⁴ மோக்ஷே ததை²வ ச" (தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வேஹ்யாத்மாந: பரமாத்மந:- நாந்யதாலக்ஷணம் தேஷாம் பந்தேமோக்ஷே ததைவச) என்கிறபடியேஸ்வதஸ்ஸித்தமான பகவச்சேஷத்வத்தை லக்ஷணமாகவுடையராயிருக்கிற தங்களையும் ‡"பதிம்

* தை³வாதீ⁴நம் ஜக³த்ஸர்வம் மந்த்ராதீ⁴நஞ்ச தை³வதம் । தந்மந்த்ரம் ப்³ராஹ்மணாதீ⁴நம் ப்³ராஹ்மணா தை³வதம் ॥

§ விஷ்ணுதத்வம்.

† பகவச்சாஸ்த்ரம். ‡ உத்தரநாராயணத்தில்.

விஜ்ஞஸ்ய" (பதிம்விஶ்வஸ்ய) *"ஸ்வாமித்வம்ப்ரஹ்மணிஸ்தித௨ ॥ (ஸ்வாமித்வம்ப்ரஹ்மணிஸ்த்திதம்) இத்யாதிகளிற் சொல்லுகிற படியே தங்களுக்கு நிருபாதிகஶேஷியாயிருக்கிற ஈஶ்வரனையும் அறியாதேயென்கை. ஆனாலறியாமலென்னாதே மறந்தென்பா னேன், முன்பொருக்கால் நினைத்துப்பின்பு அந்நினைவுக்கு ப்ரச்யுதி வந்தவிடத்திலேயிறே மறந்து என்னலாவதென்னில், (உ) "மறந்தேனுன்னை முன்னம்" என்கிறபடியே ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தத்தையுணர்ந்தால், முன்பு நினைத்திருந்த வர்த்தத்தை மறந்தாப்போலே இருக்கும் ஸம்பந்தத்திலுறைப்பை நினைத் தருளிச்செய்தாராமித்தனை.

(ஈஶ்வர கைங்கர்யத்தையும் இழந்து) என்றது, கீழ்ச்சொ ன்ன அஜ்ஞாநத்தாலே வருத்த ஶேஷியான ஈஶ்வர விஷயத்தில் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்தத்தையும் ப்ராபிக்கப்பெறாதே யென்கை. புருஷார்த்தத்தினுடைய கௌரவத்தையும், அதுக் கிட்டுப்பிறந்துவைத்து கிட்டப்பெறாமல் கிடந்தபடியையும் நினை த்து, (இழந்து) என்கிறார்.

---

## மூ(௩) இழந்தோமென்கிற விழவுமின்றிக்கே,ஸம் ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர் வேஶ்வரன் தன் க்ருபையாலே.

---

(வ்யா)(௩) (இழந்தோமென்கிறவிழவுமின்றிக்கே) என்றது-ஸ்வ ஸ்வரூப பரஸ்வரூப ஜ்ஞாநமும் புருஷார்த்த ஜ்ஞாநமும் இல்லா மையாலே ஸ்வஶேஷத்வாநுரூபமான ஶேஷிவிஷயகைங்கர்ய ரூப புருஷார்த்தத்தை இழந்தோமென்கிற வலாபக்லேஶந்தானு மின்றிக்கே யென்கை.

(ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலேவிழுந்து நோவுபட) என் றது-†"ஸம்ஸாரஸாகரம்கோரம் அநந்தக்லேஶபாஜநம்" ஸம்ஸா

---

*விஷ்ணுர்தேவ ஸர்வஶாஸ்த்ரநிஸம்ஜாதம்ஸ்வாமித்வம்ப்ரஹ்மணிஸ்தி தம் । உஸேயோஶேஷஸம்ப்ரோக்தஸ்ஸோஹம்தோஷதத ॥

[உ) பெ-திருமொழி-௩-உ-உ.

†ஸம்ஸாரஸாகரம்கோரம் அநந்தக்லேஶபாஜநம் । த்வாமேவ ஶரணம்ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண: ॥

ரஸாகரம் கோரமநந்தக்லேசபாஜநம்) என்கிறபடியே அநந்தக்லேஶபாஜநமாய், ஒருவராலும் ஸ்வயத்நத்தால் கரைகாணவரிதாம்படி யிருக்கிற ஸம்ஸாரமாகிற மஹா ஸமுத்ரத்துக்குள்ளே விழுந்து *தாபத்ரயாபிபூதராய் கொண்டுக்லேஶப்படவென்கை. இத்தால், தங்களையும் ஈஶ்வரனையும் அறியாமையாலும், புருஷார்த்தத்தை யறியாமையாலும், ஸம்ஸார ஸமுத்ரத்துக்குள்ளே கிடந்து நோவுபடாநிற்க, விரோதியான ஸம்ஸாரந்தன்னையும், தந்நிஸ்தரணோபாயத்தையு மறியாமையாலும், ஜ்ஞாதவ்யமான வர்த்தபஞ்சகத்திலும் ஒன்றையும் அறியாமற்கிடந்தார்களென்கை. †"𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂" ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம் இத்யாதிப்படியே ஸகல ஶாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்பது அர்த்தபஞ்சகத்தையுமிறே. அவ்வர்த்தங்களை யிவர்களுக்கு ஸங்க்ரஹமாக வறிவிக்கைக்காக, ஸகலஶாஸ்த்ர ஸங்க்ர

---

*ஸ்ரீவைஷ்ணவபுராணே - 𑌆𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑍋 𑌮𑍈𑌤𑍍𑌰𑍇𑌯 𑌶𑌾𑌰𑍀𑌰𑍋 𑌮𑌾𑌨𑌸𑌸𑍍𑌤𑌥𑌾 । 𑌶𑌾𑌰𑍀𑌰𑍋 𑌬𑌹𑍁𑌭𑌿𑌰𑍍𑌭𑍇𑌦𑍈𑌰𑍍𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑌾𑌂 𑌚 𑌸𑌃 ॥ 𑌶𑌿𑌰𑍋𑌰𑍋𑌗 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑍍𑌯𑌾𑌯 𑌜𑍍𑌵𑌰𑌶𑍂𑌲𑌭𑌗𑌨𑍍𑌦𑌰𑍈𑌃 । 𑌗𑍁𑌲𑍍𑌮𑌾𑌰𑍍𑌶𑌃𑌶𑍍𑌵𑌯𑌥𑍁𑌶𑍍𑌵𑌾𑌸𑌚𑍍𑌛𑌰𑍍𑌦𑍍𑌯𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑌨𑍇𑌕𑌧𑌾 ॥ 𑌤𑌥𑌾𑌕𑍍𑌷𑌿𑌰𑍋𑌗𑌾𑌤𑍀𑌸𑌾𑌰 𑌕𑍁𑌷𑍍𑌠𑌾𑌙𑍍𑌗𑌾𑌮𑌯 𑌸𑌂𑌜𑍍𑌞𑌿𑌤𑍈𑌃 । 𑌭𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌦𑍇𑌹𑌜𑌸𑍍𑌤𑌾𑌪𑍋 𑌮𑌾𑌨𑌸𑌂 𑌶𑍍𑌰𑍋𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌸𑌿 ॥ 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌭𑌯𑌦𑍍𑌵𑍇𑌷𑌲𑍋𑌭𑌮𑍋𑌹𑌵𑌿𑌷𑌾𑌦𑌜𑌃 । 𑌶𑍋𑌕𑌾𑌸𑍂𑌯𑌾𑌵𑌮𑌾𑌨𑍇𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌮𑌯𑌸𑍍𑌤𑌥𑌾 ॥ 𑌮𑌾𑌨𑌸𑍋𑌪𑌿 𑌦𑍍𑌵𑌿𑌜𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠 𑌤𑌾𑌪𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌨𑍈𑌕𑌧𑌾 । 𑌮𑍃𑌗𑌪𑌕𑍍𑌷𑌿𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑍈𑌃 𑌪𑌿𑌶𑌾𑌚𑍋𑌰𑌗𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑍈𑌃 𑌸𑌰𑍀𑌸𑍃𑌪𑌾𑌦𑍍𑌯𑍈𑌶𑍍𑌚 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌜𑌾𑌯𑌤𑍇 𑌚𑌾𑌧𑌿𑌭𑍌𑌤𑌿𑌕𑌃 ॥ 𑌶𑍀𑌤𑌵𑌾𑌤𑍋𑌷𑍍𑌣𑌵𑌰𑍍𑌷𑌾𑌮𑍍𑌬𑍁 𑌵𑍈𑌦𑍍𑌯𑍁𑌤𑌾𑌦𑌿𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑌵𑌃 । 𑌤𑌾𑌪𑍋 𑌦𑍍𑌵𑌿𑌜𑌵𑌰𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑍈𑌃 𑌕𑌥𑍍𑌯𑌤𑍇 𑌚𑌾𑌧𑌿𑌦𑍈𑌵𑌿𑌕𑌃 ॥ [ஆத்யாத்மிகம் ஶாரீமென்றும், மாநஸமென்றும் த்விவிதம்]† 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌸𑍍𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌚 ॥ 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌕𑌲𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌸𑍇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌕𑌾𑌃 । 𑌮𑍁𑌨𑌯𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑌿𑌨𑌃 ॥

ஹமான திருமந்த்ரத்தை ஸர்வேஶ்வரன் வெளியிட்ட ப்ரகாரத்தைச்சொல்லுகிறது மேல்.

(ஸர்வேஶ்வரன் தன்க்ருபையாலே) என்றது-*"ஶேஷஶேஷித்வஸம்பந்தோ நித்யோऽயமநாதி:" ஈசேஶிதவ்ய ஸம்பந்தாதநிதம்ப்ரதமாதபி என்கிறபடியே அநாதியாகஸர்வரோடுமுண்டான ஈஶேஶிதவ்ய ஸம்பந்தத்தை யுடையனான எம்பெருமான், †"ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: | ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே" ஏவம்ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:—ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபாகாப்யுபஜாயதே) என்கிறபடியே இவர்கள்படுகிற து:கதர்ஶநமாத்ரத்தாலுண்டான தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே யென்கை.

---

சூ(எ) இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி, தானே ஶிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினன்.

---

(வ்யா)(எ)(இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி)என்றது-இப்படி ஸம்ஸாரஸாகரத்திலேகிடந்து நோவுபடுகிற விவர்கள் ‡"த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:" த்வாமேவஶரணம்ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண: என்றும், §"ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம் | விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்" ஸம்ஸாரார்ணவமக்நாநாம்விஷயாக்ராந்த சேதஸாம் விஷ்ணுபோதம் விநாநாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம், என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸாரநிஸ்தரணோ

---

* லக்ஷ்மீதந்த்ரே தேவதாவ்யக்திலக்ஷ்மீ - ஶக்திஸம்பந்தே [illegible] க்ருபாயோ [illegible] | ஶேஷஶேஷித்வஸம்பந்தோ நித்யோऽயமநாதி: || ரக்ஷிஷ்யதி [illegible] இதி [illegible] | ஸர்வ [illegible] ||

† அஹிர்புத்ந்யஸம்ஹிதா ||

‡ ஜிதந்தா - ஶ்லோ - ௬.

§ விஷ்ணுதர்மே.

பாய பூதனான தன்னையறிந்து ஸம்ஸார ஸாகரத்தைக் கடந்து அக்கரைப்படும்படி யென்கை.

(தானேஶிஷ்யனுமாய், ஆசார்யனுமாய்நின்று) என்றது-(ஞ) "நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமைவிரித்தவன்" என்கிறபடியே நரநாராயணரூபேணவவதரித்து நரனான தான் ஶிஷ்யனுமாய், நாராயணனான தான் ஆசார்யனுமாய் நின்றென்கை.

(திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்) என்றது - ஸகல ஶாஸ்த்ர ஸங்க்ரஹமாய், அந்த ஶாஸ்த்ர தாத்பர்யமான வர்த்த பஞ்சகத்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதியாநிற்கும் திருமந்த்ரத்தை ப்ரகாஶிப்பித்தருளினானென்கை. அருளிச்செய்தானென்னாதே வெளியிட்டருளினானென்றது, இப்போது, நானொன்றை நிர்மித்துச் சொன்னேனல்லன் அநாதியானதைத் ப்ரகாஶிப்பித்தானித்தனை யென்னுமிடமும், அதிகுஹ்யமாயுள்ளத்தை யிவர்கள் தூர்க்கதி கண்டு ஸஹிக்கமாட்டாமையாலே ப்ரகாஶிப்பித்தானென்னுமிடமும் தோற்றுகைக்காக.

ஆனால் ஆசார்யனாய்நின்று வெளியிட்டருளி விடவமையாதோ, ஶிஷ்யனுமாய் நின்றதேதுக்காக வென்ன அருளிச்செய்கிறார்,

மூ(அ) ஶிஷ்யனாய் நின்றது ஶிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தையறிவிக்கைக்காக.

(வ்யா). அ)(ஶிஷ்யனாய்)என்று தொடங்கி. அதாவது, ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளினவளவன்றிக்கே, தானேஶிஷ்யனுமாய்கொண்டு நின்றது*" ஆஸ்திகோ தர்மஶீலஶ்ச ஶீலவாந் வைஷ்ணவஶ்ஶுசி: । கம்பீரஶ்சதுரோ தீரஶ்ஶிஷ்ய இத்யபிதீயதே ॥ ஆஸ்திகோ தர்மஶீலஶ்ச ஶீலவாந் வைஷ்ணவஶ்ஶுசி:-கம்பீரஶ்சதுரோ தீரஶ்ஶிஷ்ய இத்யபிதீயதே† " ஶரீரம் வஸுவிஜ்ஞாநம் வாஸ: கர்ம குணாநஸூந் । குர்வர்த்தம் தாரயேத்யஸ்து ஸஶிஷ்யோ நேதர: ஸ்ம்ருத:॥" ஶரீரம்வஸுவிஜ்ஞாநம வாஸ:கர் மகுணாநஸூந்-குர்வர்த்தந்தாரயேத்யஸ்து ஸஶிஷ்யோ நேதரஸ் ஸ்ம்ருத:‡" ஸத்புத்திஸ்ஸாதுஸேவீ ஸமுசிதசரிதஸ்தத்த்வ

* (ஞ) பெ-தி-மொ. கo-கூ-க. † ந்யாஸவிம்சதி;. ஞ-ச்லோ.
‡ பகவச்சாஸ்த்ரம்.

𑌧𑌾𑌭𑌿𑌲𑌾𑌷𑍀 𑌶𑍁𑌶𑍍𑌰𑍂𑌷𑍁𑌸𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌾𑌨𑌃 𑌪𑍍𑌰𑌣𑌿𑌪𑌤𑌨𑌪𑌰𑌃𑌪𑍍𑌰𑌶𑍍𑌨
𑌕𑌾𑌲𑌪𑍍𑌰𑌤𑍀𑌕𑍍𑌷𑌃 । 𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌦𑌾𑌨𑍍𑌤𑍋𑌨𑌸𑍂𑌯𑍁𑌶𑍍𑌶𑌰𑌣 𑌮𑍁𑌪𑌗𑌤
𑌶𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌸𑌶𑌾𑌲𑍀 𑌶𑌿𑌷𑍍𑌯𑌃𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃 𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑌾𑌂𑌕𑍃𑌤𑌵𑌿𑌦𑌭𑌿𑌮
𑌤𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌶𑍍𑌶𑌿𑌕𑍍𑌷𑌣𑍀𑌯𑌃'' ஸத்புத்திஸ்ஸாதுஸேவீஸமுசிதசரிதஸ்த த்வபோதாபிலாஷீஶுஶ்ரூஷுஸ்த்யக்தமாந: ப்ரணிபதநபர: ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ:—ஶாந்தோதாந்தோநஸூயுஶ் ஶரணமுப கதஶ்ஶாஸ்த்ரவிஶ்வாஸசாலீசிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருத விதபிமதம் தத்வதஶ்ஶிக்ஷணீய:) இத்யாதிகளிற் சொல்லுகிறபடி களும். ஸாத்யாந்தரநிவ்ருத்தியும், பலஸாதநஶுஶ்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும், அநஸூயையும் உடையனா யிருக்கையு மாகிற ஶிஷ்யலக்ஷணம் லோகத்திலுள்ளா ரறியாமையாலே, அத்தை ஸ்வாநுஷ்டாநத்தாலே யறிவிக்கைக்காக வென்கை. உபதேஶத்தாலே யறிவிக்குமளவில் ஸ்வோத்கர்ஷந் தேடிக்கொள்ள வந்தானித்தனை யென்று நினைக்கவுங்கூடும். அநுஷ்டாநத்தாலேயறிவிக்குமளவில் நமக்கும் இதுவேணுமென்று விஶ்வஸித்து பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே.

இப்படி ஶிஷ்யனாய்நின்று இம்மந்த்ரஶிக்ஷைபண்ணி இவ்வழியாலே ஞாநம் பிறக்கவேணுமோ (௪) ''ஞாநக்கலைகள்'' என்கிறபடியே ஸகலஶாஸ்த்ரங்களும் ஜ்ஞாநஸாதநமாயன்றோ இருப்பது, அவற்றை யப்யஸித்து அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்தாலோவென்ன, ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாநத்துக்கும் இம்மந்த்ரஜந்யஜ்ஞாநத்துக்கும் உண்டான விஶேஷத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார்,

---

மூ (௯) ஸகலஶாஸ்த்ரங்களால் பிறக்கும்ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம் போலே, திருமந்த்ரத்தால் பிறக்கும்ஜ்ஞாநம்பைத்ருகதநம்போலே.

---

(வ்யா) (௯) (ஸகலஶாஸ்த்ரங்களாலும்) என்று தொடங்கி. அதாவது, தத்வஜ்ஞாநஜநகங்களான ஶ்ருதிஸ்ம்ருத்யாதி ஸகலஶாஸ்த்ரங்களாலும் சேதநருக்குப்பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிததநம்போலே அத்யாயாஸலப்யமாயிருக்கும். ஆசார்யோபதேஶ

---

(௪) திருவாய்மொழி. ௧-௯-௮.

மடியாகத் திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம், பைத்ருகதநம் போலேயநாயாஸலப்யமா யிருக்குமென்கை. "ஶாஸ்த்ரஜ்ஞாநம் ப³ஹுக்லேஶம் பு³த்³தே⁴ஶ்சலநகாரணம் | உபதே³ஶாத்³த⁴ரிம் பு³த்³த்⁴வா விரமேத் ஸர்வகர்மஸு"(சாஸ்த்ரஜ்ஞாநம்பஹுக்லேசம்புத்தேஶ் சலனகாரணம்-உபதேசாத்தரிம்புத்த்வா விரமேத்ஸர்வகர்மஸு என்னக்கடவதிறே. இத்தால் ஶாஸ்த்ரங்களிற்காட்டில் தத்ஸங்க்ரஹமான திருமந்த்ரத்துக்குண்டான வைபவஞ்சொல்லிற்று யிற்று.

ஆனால்ஶாஸ்த்ரங்களொழிந்ததாகிறது, பகவந்மந்த்ரந்தானிதொன்றுமன்றே, பின்னையும்பலவில்லையோ வென்கிறஶங்கையிலே மந்த்ராந்தரங்களிற்காட்டில் இதுக்குண்டான வைபவத்தை யருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி.

## ரூ (ம) பகவந்மந்த்ரங்கள் தாநநேகங்கள்.

(வ்யா)(ம)(பகவந்மந்த்ரங்கள் தான் அநேகங்கள்)என்கிறார். அதாவது, * "ஆஸ்தாம் தே கு³ணராஶிவத்³ கு³ணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்²யா" ஆஸ்தாம்தே குணராசிவத்குணபரீ வாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்யா † "ப³ஹவோ நாம்ருபகல்யாணகு³ணா: புத்ரஸ்ய ஸந்தி தே | தவாநந்தகு³ணஸ்யாபி ஷடே³வ ப்ரத²மே கு³ணா:" (பஹவோநந்ருப கல்யாணகுணா: புத்ரஸ்யதஸந்தி தே-தவாநந்த குணஸ்யாபிஷடே வப்ரதமேகுணா: ‡ "ப³ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந" பஹூநிமேவ்யதீதாநிஜந்மாநித்வசார்ஜ்ஜுன என்றும் (ரு) "எண்ணில் தொல்புகழ்" என்றும், (சா) "என்னின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்றும், இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே பகவத்குணங்களும், குணபரிவா

---

*ஆஸ்தாம் தே கு³ணராஶிவத்³ கு³ணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்²யா பௌ⁴மநிகேதநேஷ்வபி குடீகுஞ்ஜேஷு ரங்கே³ஶ்வர | அர்ச்யஸ்ஸர்வஸஹிஷ்ணுரர்சகபராதீ⁴நாகி²லாத்மஸ்தி²தி: ப்ரீணீஷே ஹ்ருத³யாலுபி⁴ஸ்தவ ததஶ்ஶீலாஜ்ஜடீ³பூ⁴யதே ||

†ஸ்ரீ-ரா-ஸ-உ-உரு. ‡ ஸ்ரீகீதை ச-ரு.

(ரு) தி-வா-மொ-௯-௯-௯.

(சா) தி-வி-க.

ஸ்வரூபங்களான வவதாரங்களும் அஸங்க்யாதமா யிருக்குமா போலே அவற்றை யநுபந்தித்திருக்கும் மந்த்ரவிசேஷங்களும் “அநந்தாவை பகவந்மந்த்ராঃ”(அநந்தாவைபகவந்மந்த்ராঃ) என்கிறபடியே அநேகங்களாயிருக்குமென்கை.

அவையெல்லாந்தான் ஏகவர்க்கமோவென்ன,

---

ஸூ (கக) அவைதான், வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கம்.

---

(கக) (வ்யா) (அவைதான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றுமிரண்டுவர்க்கம்) என்கிறார். அதாவது, ஸர்வவ்யாபகமான பகவத்ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கையாலே வ்யாபகங்களென்றும், பகவதவதாரகுண சேஷ்டிதங்களி லோரொன்றை ப்ரதிபாதிக்கையாலே அவ்யாபகங்களென்றும் உபயவர்க்கமா யிருக்குமென்கை,

வர்க்கத்வயமும் தன்னிலொக்குமோவென்ன,

---

ஸூ (கஉ) அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்.

---

(கஉ) (வ்யா) (அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்) என்கிறார். அதாவது, அவ்யாபகங்களா யிருந்துள்ள ஸகலமந்த்ரங்களிலும் ‡ “நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணுঃ ப்ரசோதயாத்” (நாராயணயவித்மஹே வாஸுதேவாயதீமஹி, தந்நோவிஷ்ணுঃ ப்ரசோதயாத்) என்று விஷ்ணுகாயத்ரியில் ஓதப்படுகிற வ்யாபகமந்த்ரங்கள் மூன்றும் ஸ்ரேஷ்டங்களாயிருக்குமென்கை. இந்த விஷ்ணுகாயத்ரியிலே நாராயணவாஸுதேவ விஷ்ணுபதங்கள் அந்தமந்த்ரத்ரயத்துக்கும் ப்ரகாசகமந்த்ரங்கள்; ஆகையாலே, ஸாதாரணப்ரணவ நமஸ்ஸுக்களோடே கூடின மந்த்ரத்ரயத்துக்குமுபலக்ஷணமாகக்கடவது.

இந்தவ்யாபகமந்த்ரத்ரயமும் தன்னிலொக்குமோவென்ன,

---

‡ தை-உப, உ-ப்ர-உசு.

ஸூ (கக) இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்.

---

(வ்யா) (கக) (இவைமூன்றிலும் வைத்துக்கொண்டு பெரியதிருமந்த்ரம்ப்ரதாநம்) என்கிறார். அதாவது, அவ்யாபகங்களிற்காட்டில் ஸ்ரேஷ்டமாயிருந்துள்ள இந்த வ்யாபகமந்த்ரங்கள் மூன்றிலும் வைத்துக்கொண்டு, (நாராயணாயவிச்சே) (நாராயணாய வித்மஹே) என்று ப்ரதமோபாத்தமாகையாலும், அர்த்தபூர்த்தியாலும், (நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:) (நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:) (நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:) (நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:) என்னும்படியான பெருமையையுடைய திருமந்த்ரம் ப்ரதாநமாயிருக்குமென்கை.

அவ—மற்றைவ்யாபகத்வயத்துக்கும் தாழ்வேதென்ன.

---

ஸூ (கஉ) மற்றையவை யிரண்டுக்கும் அசிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியுமுண்டு.

---

வ்யா (கஉ) (மற்றையவையிரண்டுக்குமசிஷ்டபரிக்ரஹமுமபூர்த்தியுமுண்டு) என்கிறார். அதாவது, வாஸுதேவவிஷ்ணுஸப்தங்களான மற்றைவ்யாபக மந்த்ரங்களிரண்டுக்கும், நாராயணஸப்தம்போலே ஸ்வரூபரூபகுணங்களெல்லாம்ப்ரதிபாதியாதே, ஸ்வரூபமாத்ரத்தைப்ரதிபாதிக்கையாலே, நிர்விசேஷசின்மாத்ரவஸ்துவாதிகளான குத்ருஷ்டிகள், மிகவும் ஆதரித்துப்போருகையாகிற அசிஷ்டபரிக்ரஹமும், வ்யாப்யாத்யாஹாராதிஸாபேக்ஷதையாகிற அபூர்த்தியுமுண்டென்கை. "ஷடக்ஷரிவ்யாப்யபதார்த்தங்களையும், வ்யாபநப்ரகாரத்தையும், வ்யாப்திபலத்தையும், வ்யாபகனுடைய குணங்களையும்சொல்லாதே வ்யாப்திமாத்ர ப்ரகாஸகமாகையாலே அபூர்ணம்; வ்யாபநப்ரகாரத்தைச் சொல்லாதிற்கச்செய்தேயும், வ்யாப்யபதார்த்தங்களுக்கு வாசகஸப்தம் இல்லாமையாலும், (ஸர்வம்வஸதி) (ஸர்வம்வஸதி) என்று அர்த்தபலத்தாலே ஸர்வஸப்தம் புகுந்தாலும், அதில் குணம் அந்வயியாமையாலும், இனி குணஸித்திக்காக பகவச்சப்தத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டுகையாலும், வ்யாப்திபலத்தைச் சொல்லாமையாலும், த்வாதசாக்ஷரியும் அபூர்ணம்; இம்மந்த்ரம், அவைபோலன்றியிலே, வ்யாப்ய பதார்த்தங்க

யாத்மாசரீரம்யஸ்யப்ருதிவீ சரீரம் என்று தொடங்கி (𑌯𑌸𑍍𑌯 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌃 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍) (யஸ்யம்ருத்யுஶ்ஶரீரம்) என்கிற நீருக நடுவுள்ள பர்யாயங்கள்தோறும் (𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌦𑌿𑌵𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃) (ஏஷஸர்வ பூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோதேவ ஏகோநாராயண: என்று அந்தர்யாமிப் ராஹ்மணத்திலும் வாஸுதேவ விஷ்ணுஶப்தங்க... யநாதரித்து நாராயணஶப்தத்தை யிட்டு பகவத் ஸ்வரூபாதிகளை நிர்தேசிக்கையாலும், அபௌருஷேயமாய் நித்யநிர்தோஷமாய் ஸ்வத: ப்ரமாணங்களான வேதங்களும் விரும்பிற்றின. (𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌤𑍍𑌪𑌰𑌃 । 𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌚𑌾𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌃) (யதாஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத்பர: ததாஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:) (𑌭𑍂𑌤𑍍𑌵𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌬𑌾𑌹𑍁𑌰𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 𑌵𑌃 । 𑌹𑍇 𑌪𑍁𑌤𑍍𑌰 𑌶𑌿𑌷𑍍𑌯𑌾𑌃 𑌶𑍃𑌣𑍁𑌤 𑌨 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌽𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌃) (பூத்வோர்த்வபாஹுரத்யாத்ர ஸத்யபூர்வம் ப்ரவீமிவ: ஹேபுத்ரசிஷ்யா: ச்ருணுதநமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:) (𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌣𑌵𑌤𑌾𑌰𑌕𑌃 । 𑌗𑌤𑌿𑌰𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌨𑍄𑌣𑌾𑌮𑌪𑍁𑌨𑌰𑍍𑌭𑌵𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌮𑍍) (ஸர்வவேதாந்தஸாரார்த்தஸ்ஸம்ஸாரார்ணவதாரக: கதிரஷ்டாக்ஷரோ ந்ருணாமபுநர்ப்பவகாங்க்ஷிணாம்) (𑌆𑌰𑍍𑌤𑌾 𑌵𑌿𑌷𑌣𑍍𑌣𑌾𑌃 𑌶𑌿𑌥𑌿𑌲𑌾𑌶𑍍𑌚 𑌭𑍀𑌤𑌾𑌃 𑌘𑍋𑌰𑍇𑌷𑍁 𑌚 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌾𑌃 । 𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌶𑌬𑍍𑌦𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌦𑍁𑌃𑌖𑌾𑌃 𑌸𑍁𑌖𑌿𑌨𑍋 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿) (ஆர்த்தா விஷண்ணாஶ்ஶிதிலாஶ்ச பீதாகோரேஷு ச வ்யாதிஷு வர்த்தமாநா: ஸங்கீர்த்ய நாராயண சப்தமாத்ரம் விமுக்தது: காஸ்ஸுகிநோபவந்தி) (𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍇𑌤𑌿 𑌶𑌬𑍍𑌦𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌵𑌾𑌗𑌸𑍍𑌤𑌿 𑌵𑌶𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍀 । 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌨𑌰𑌕𑍇 𑌘𑍋𑌰𑍇 𑌪𑌤𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌕𑌿𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑍍) (நாராயணேதி ஶப்தோஸ்தி வாகஸ்தி வசவர்த்தினீ ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம்) (𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌬𑌹𑍁𑌭𑌿𑌰𑍍𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍈𑌃 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌬𑌹𑍁𑌭𑌿𑌰𑍍𑌵𑍍𑌰𑌤𑍈𑌃 । 𑌨𑌮𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯𑍇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌧𑌕𑌃) (கிந்தத்ரபஹுபிர்மந்த்ரை: கிந்தத்ர பஹுபிர்வ்ரதை: நமோநாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:) இத்யாதி

ளாலே வேதார்த்தோப ப்ருப்ஹணங்களா யிருக்கிற ஸ்வப்ரபந்தங்களிலே பல விடங்களிலு மித்தை ப்ஸாகித்துக்கொண்டு சொல்லுகையாலே, வேதார்த்த விஶதீகரண ப்ரவ்ருத்தரான வ்யாஸாதி பரமர்ஷிகளும் விரும்பினார்கள்; (எ) "வண்புகழ்நாரணன்" (அ) "செல்வநாரணன்" என்று தொடங்கி (௯) "வாழ்புகழ்நாரணன்" என்று முடிவாக, ஆதிமத்யாவஸாநமாக நம்மாழ்வாரருளிச்செய்கையாலும், (௰) "நாடுநகரமு நன்கறிய நமோ நாராயணாய" என்று தொடங்கி (௧௧) "ஓவாதே நமோ நாரணா வென்பன்" என்று பெரியாழ்வாரும், (௧௨) "நாத்தழும்பெழ நாரணா" என்று தொடங்கி (௧௩) "நலந்திகழ்நாரணன்" என்று பெருமாளும், (௧௪) "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி (௧௫) "எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே" என்று திருமழிசைப் பிரானும், (௧௬) "நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும்நாமம்" என்று உபக்ரமதஶையிலே ஒருகால் சொன்னப்போலே யொன்பதின்கால் சொல்லி (௧எ) "நாராயணாவோ மணிவண்ணா! நாகணையாய்வாராய்" என்று திருமங்கையாழ்வாரும், உபக்ரமத்தோடு உபஸம்ஹாரத்தோடு வாசியற வருளிச்செய்கையாலும், (௧அ) "நன்மாலைகொண்டு நமோ நாரணா வென்னும் சொன் மாலை கற்றேன்" என்றும், (௧௯) "நாரணாவென்றோவாதுரைக்கு முரையுண்டே" என்றும் (௨௰) "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" (௨௧) "நாரணன்றன் நாமங்கள்" (௨௨) "டகண்டேன் நாரணனைக் கண்டேன்" என்றும், (௨௩) "நா

(எ) தி-வா-௧-௨-௧௦.
(அ) தி-வா-௧-௧௦-அ
(௯) தி-வா-௧௦-௯-௧.
(௰) திருப்பல்லாண்டு-௪.
(௧௧) பெ-ஆ-தி-௫-௩-௧
(௧௨) பெ-மா-தி-௧-௨-௪
(௧௩) பெ-மா-தி-௧-௧௦.௧௧
(௧௪) நாலாந்திரு-வ-௧
(௧௫) தி-௪-எ-எ.
(௧௬) தி-மொ-௧-௧-௧.
(௧எ) சி-தி-௫௰.
(௧அ) முதல்-தி-௫-எ.
(௧௯) முதல்-தி-௯-௫.
(௨௰) இரண்-தி. ௧.
(௨௧) இரண்-தி-௨௰
(௨௨) ௨-தி-அ௧.
[௨௩] ௩-தி-அ.

ஸம்பல சொல்லி நாராயணா" என்றும், முதலாழ்வார்களுமருளிச்செய்கையாலும் (உச) "மயர்வறமதிநல மருளினன்" என்கிறபடியே நிர்ஹேதுகபகவத் கடாக்ஷத்தாலே ஸமதிகத ஸமஸ்த வஸ்து வாஸ்தவரான ஆழ்வார்களெல்லாரும் விரும்பினார்கள்; இதர மந்த்ரங்களை யநாதரித்து, இத்தையே தந்தாமுக்குத் தஞ்சமாக வநுஸந்தித்து உபதேசவேளையிலும், தந்தாமைப் பற்றினவர்களுக்கு மித்தையே உஜ்ஜீவநஹேதுவாக உபதேசித்துப் போருகையாலே, அவ்வாழ்வார்களைப் பின் சென்ற ஆசார்யர்களெல்லாரும் விரும்பினார்களென்கை. இத்தால் மந்த்ராந்தரங்களிற் காட்டில் இம்மந்த்ரத்துக்குண்டான வைபவஞ் சொல்லிற்றாயிற்று.

அவ.—இனிவாச்யந்தன்னிலும் இதுக்குண்டான வைபவத்தை யருளிச் செய்கிறார்.

மூ (கச) வாச்யப்ரபாவம் போலன்று வாசகப்ரபாவம்.

(வ்யா) (கச) வாச்யப்ரபாவம்போலன்று வாசகப்ரபாவம் என்று) அதாவது, இதுக்கு வாச்யனாயிருந்துள்ள ஈஸ்வரனுடைய பெருமை போலன்று தத்வாசகமான இதின் பெருமை யென்றபடி.

அவ.—அதுதானேதென்ன வருளிச் செய்கிறார்.

மூ (கரு) அவன் தூரஸ்தனானாலுமிது கிட்டிநின்று தவும்.

(வ்யா) (கரு) (அவன் தூரஸ்தனானாலுமிது கிட்டிநின்று தவும்) என்று. அதாவது, வாச்யனானவன் ஸந்நிஹிதனன்றிக்கே தூரஸ்தனாயிருந்தகாலத்திலும், வாசகமான இது ஆஸந்நமாய்நின்று, தன்னை வசித்தவர்களபேக்ஷிதங்களை ஸாதித்துக் கொடுக்குமென்கை.

அவ.—இப்படி வாச்யன் தூரஸ்தனாயிருக்க வாசக முதவினவிடமுண்டோவென்ன வருளிச் செய்கிறார்.

மூ (கசு) த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே.

(வ்யா) (கசு) (த்ரௌபதிக்காபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே) என்று. அதாவது மஹாஸதஸ்ஸிலே துர்யோதநன் வஸ்த்ராப

(உச) தி- வா- க- க- க.

ஹாரம்பண்ணுகிறபோது* "[illegible]" (மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோபகவாந் ஹரி:) என்று முன்பே ஸ்ரீவஸிஷ்ட்ட மஹர்ஷி சொல்லி வைத்ததை நினைத்து "[illegible]" சங்க சக்ரகதாபாணே த்வாரகாநிலயாச்யுத (கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணாகதாம்) என்று ஶரணம்புகுந்த த்ரௌபதிக்கு அவ்வாபத்திலே "[illegible]" (கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்) என்கிறபடியே வாச்யனான க்ருஷ்ணன் தூரஸ்தனாயிருக்கச் செய்தேயும், வஸ்த்ரத்தை வர்த்திப்பித்துக்கொடுத்தது, அவ்வவதாரத்துக்கு வாசகமான கோவிந்தனென்கிற திருநாமமிறே யென்கை. நாராயண ஶப்தார்த்தத்தில் ஏகதேஶத்துக்கு வாசகமான ஒரு திருநாமஞ்செய்தபடி கண்டால், இதின்ப்ரபாவம் கிம்புநர்ந்யாய ஸித்தமிறே யென்று கருத்து.

அவ — இன்னமொரு ப்ரகாரத்தாலே இதின் வைபவத்தை யருளிச்செய்கிறார்.

---

ஸூ (கஎ) சொல்லுங்க்ரம மொழியச் சொன்னாலுந் தன் ஸ்வரூபங்கெட நில்லாது.

---

(கஎ) (வ்யா) (சொல்லுங்க்ரமமொழியச் சொன்னாலும்) என்று தொடங்கி. அதாவது, ஏதேனுமொருமந்த்ரமும், தன்னைத் தஞ்சமாக விஸ்ரம்பித்துச் சொன்னவர்களுக்கொழியத் தன் கார்யம் செய்யாதே யாகிலும், இதங்ஙனன்றிக்கே தன்னைத் தஞ்சமாக

---

* [illegible] ௬௩

[illegible]

[illegible]

விஸ்வஸித்துச் சொல்லுகையாகிற க்ரமமொழிய, *(ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலநமேவ வா) (ஸாங்கேத்யம்பாரிஹாஸ்யஞ்ச ஸ்தோபம்ஹேலநமேவவா) என்கிறபடியே சொல்லிலும், சொன்னவர்களுக்கு ரக்ஷகமாகையாகிற தன் ஸ்வரூபத்தில் நழுவதில்லாதென்கை.

அவ.—இனிஇதின் ஸர்வாபேக்ஷிதப்ரதத்வமாகிற வைபவத்தை யருளிச்செய்கிறார்,

மூ (௧அ) இதுதான் "குலந்தரும்" என்கிறபடியே யெல்லா வபேக்ஷிதங்களையும் கொடுக்கும்.

(வ்யா) (௧அ) (இதுதான்) என்றுதொடங்கி. அதாவது, இம்மந்த்ரந்தான் (உரு]"குலந்தரும்" என்றுதொடங்கி ஆழ்வாரருளிச் செய்தபடியே, அதிகாராநுகுணமான வபேக்ஷிதங்களை யெல்லாங் கொடுக்குமென்கை.

அவ.—அத்தை விவரிக்கிறார்,

மூ (௧௯) ஐச்வர்யகைவல்யபகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்.

வ்யா (௧௯) (ஐஸ்வர்ய) இத்யாதியாலே. அதாவது, (ஐச்வர்யம் ... ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம் கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி) என்கிறபடியே இஹலோகமாயும் பாரலௌகிகமாயுமிருக்கும் ஐச்வர்யத்தையும் ஆத்மப்ராப்திரூபமான கைவல்யத்தையும் பரமபுருஷார்த்தமான பகவல்லாபத்தையுமாசைப்

* ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலநமேவ வா । வைகுண்ட நாமக்ரஹணம் அசேஷாகஹரம் விது: ॥ [illegible] ॥ ஸ்க-உ-அத்-ரு-கரு॥

(உரு) பெ- தி- மொ-க-க- க.

பட்ட வதிகாரிகளுக்கு ஜபஹோமாதிகளாலே ஸ்வயம் ஸாதநமாய் நின்று, அவ்வோபுருஷார்த்தங்களைக் கொடுக்குமென்கை.

அவ—இனி கர்மாத்யுபாய ஸஹகாரித்வரூபமான இதின்வைபவ த்தை யருளிச்செய்கிறார்,

(மூ) (உய)கர்ம ஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைகட்டிக் கொடுக்கும்.

(வ்யா) (உய) (கர்மஜ்ஞாந)இத்யாதியாலே. அதாவது,கர்மயோகத்தில் இழிந்தவர்களுக்கு. ஜபஹோமாதிகளாலே தன்னை ஸஹாயமாகக் கொள்ளுமளவில், கர்மயோகாரம்பவிரோதியான பாபத்தைப்போக்கி, அந்தகர்மத்தினுடைய அவிச்சேதாபாதகமாய்க் கொண்டு அத்தைத் தலைகட்டிக் கொடுக்கும். ப்ரதமத்திலே, ஜ்ஞாநயோகத்திலே யிழிந்தவர்களுக்கு, தன்னை ஸஹாயமாகக்கொள்ளுமளவில், கர்மஸாத்யமான ஜ்ஞாநாரம்பவிரோதி பாபநிவ்ருத்தியைப்பண்ணி, அந்தஜ்ஞாநத்துக்குநாடோறும் அதிசயத்தைப் பண்ணு நின்றுகொண்டு, அத்தைத் தலைக்கட்டிக் கொடுக்கும். பக்தியோகத்திலே இழிந்தவர்களுக்கு, தன்னை ஸஹாயமாய்க் கொள்ளுமளவில், பக்தியோகாரம்பவிரோதியான பாபத்தைப் போக்கி பக்திவிவ்ருத்திஹேதுவாய்க்கொண்டு அத்தைத்தலைக்கட்டிக்கொடுக்குமென்கை.

அவ—இங்ஙனன்றிக்கே ப்ரபந்நர்க்கிது செய்யு முபகாரவைபவத்தையருளிச்செய்கிறார்.

(மூ) (உக)ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்து காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

(வ்யா) (உக) (ப்ரபத்தியிலே) என்று தொடங்கி. அதாவது, கீழ்ச்சொன்னவைபோலே துஸ்ஸகமுமாய் ஸ்வரூபவிருத்தமுமாயிருக்கையன்றிக்கே ஸுஸகமுமாய் ஸ்வரூபாநுரூபமுமான ப்ரபத்யுபாயத்திலே இழிந்தவர்களுக்கு,ததநுரூபமானபகவத்பாரதந்த்ர்ய

ரூப ஸ்வரூப ஜ்ஞாநத்தை விஸதமாகப் பிறப்பித்து ஆர்த்தாநு ஸந்தாநாதிகளாலே போதுபோக்குகைக்கும் ஹேதுவாய், (௨௬) "எனக்கென்றுந்தேனும்பாலு மமுதுமாய திருமால்திருநாமம்" என்கிறபடியே ப்ரதிபாத்ய வஸ்துவைப் போலே ஸ்வயம் போக்யமாயிருக்கையாலே போகத்துக்கும் ஹேதுவா யிருக்குமென்கை.

இனி ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகத்வமாகிற இதின் வைபத்தை யருளிச்செய்கிறார்,

---

(௨௨) "மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே அறிய வேண்டு மர்த்தமெல்லாம் இதுக்குள்ளே யுண்டு.

---

(௨௨) (மற்றெல்லாம் பேசிலும்) என்று தொடங்கி. அதாவது, (௨௭) "நின்திரு வெட்டெழுத்துங் கற்று மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே, ஆத்மோஜ்ஜீவநத்துக்குடலாக வறியவேண்டும் அர்த்தவிஸேஷங்களெல்லா மிம்மந்த்ரத்துக்குள்ளே யுண்டென்கை.

அறியவேண்டும் அர்த்தமெல்லா மாகிறதேதென்னு மாகாங்க்ஷையிலே யருளிச்செய்கிறார்,

---

(௨௩) அதாவதஞ்ஜார்த்தம்.

---

(௨௩) (அதாவதஞ்ஜார்த்தம்) என்று. ஸ்வஸ்வரூபபரஸ்வரூப புருஷார்த்தஸ்வரூபோபாயஸ்வரூபவிரோதிஸ்வரூபங்களாகிற அர்த்தபஞ்சகமும் என்றபடி. *"[illegible]"

"ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஸ்ச ப்ரத்யகாத்மந:। ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ்ததா ப்ராப்திவிரோதிச। வதந்தி ஸகலா வேதா ஸ்ஸேதிஹாஸபுராணகா:। முநயஸ்ச மஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந:" என்கிறபடியே, ஸகலவேதஸாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்ப திவ்வர்த்தபஞ்சகத்தையு மாகையாலே

---

[௨௬] பெ-மொ-௬-௧0-௬-

[௨௭] பெ -தி-மொ-அ- ௧0- ௩ *ஹாரீதஸம்ஹிதா.

தத்ஸங்க்ரஹமான விம்மந்த்ரத்துக்கும் ப்ரதிபாத்யமிதுவேயிறே. இம்மந்த்ரந்தான் ப்ரணவத்தாலே ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோத்யுபாயஸ்வரூபங்களையும், நாராயணபதத்தாலே பரஸ்வரூபத்தையும், அதில் சதுர்த்தியாலே பலஸ்வரூபத்தையும் ப்ரதிபாதிக்கக் கடவதாயிறே யிருப்பது.

இம்மந்த்ரார்த்தவைபவத்தை யருளிச்செய்கிறார் மேல்,

(உச) பூர்வாசார்யர்கள் இதிலர்த்தமறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதிலர்த்தஜ்ஞாநம் பிறந்தபின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.

(உச) (பூர்வாசார்யர்கள்) என்று தொடங்கி. அதாவது, நாதயாமுந யதிவராதிகளான நம்பூர்வாசார்யர்கள், (உஅ) "அன்று நான் பிறந்திலேன்" என்கிறபடியே, இம்மந்த்ரத்தில் அர்த்தமறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்தஜ்ஞாநம் தங்களுக்குண்டான பின்பு "பிறந்தபின் மறந்திலேன்" என்று ஆழ்வார் திவ்ய ஸூக்தியில் சொல்லுகிறபடியே இம்மந்த்ரார்த்தத்தை யொழிய மற்றொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்களென்கை. வேதஶாஸ்த்ரங்கள், ஆழ்வாரருளிச்செயல்கள் இவற்றால் போது போக்கும்போதும் இம்மந்த்ரார்த்தத்தையுட் கொண்டே யநுஸந்திக்கையாலே, (இத்தை யொழிய வேறொன்றால் காலக்ஷேபம்பண்ணி யறியார்கள்) என்னத்தட்டில்லை.

வாசகஶக்தி ஸர்வத்தையும் ஸாதித்துக்கொடுக்கவற்றாயிருக்க, இதினுடைய வாச்யத்திலே இவர்களூன்றுகைக்கு ஹேதுவேதென்ன அருளிச் செய்கிறார்,

(உரு) வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கடி, ஈஶ்வர னுபாயோபேயமென்று நினைத்திருக்கை.

(உரு) (வாசகத்திற்காட்டில்) என்று தொடங்கி. அதாவது, ஸர்வபலத்துக்கும் ஸ்வயம் ஸாதநமாயும், ஸாதநாந்தரங்களுக்

(உஅ) திருச்ச-கூச.

கும் ஸஹகாரியாய் நின்றுதலைக்கட்டிக் கொடுத்தும் போருகிற இதினுடைய வாசகஶக்திதானே யமைந்திருக்கச்செய்தே, அதினுங் காட்டில் கீழ்ச் சொன்னபடியே, இம்மந்த்ரத்தினுடைய வாச்சியத்திலே பூர்வாசார்யர்களூன்றுகைக்கடி, உபேயாந்தர பரராய் இத்தை ஸாதநமாகக் கொண்டு ஸாதித்தல், உபாயாந்தரபரராய் இத்தை ஸஹகாரியாகக் கொள்ளுதல் செய்யுமவர்களைப் போலன்றிக்கே, உபாயோபேயங்களிரண்டும் ஈஶ்வரனே யென்று ப்ரதிபத்தி பண்ணி யிருக்கை யென்றபடி. ஆக (திருமந்த்ரத்தினுடைய ஸீர்மைக்குப் போரும்படி) என்று தொடங்கி இவ்வளவும், வாய்வந்தபடி யநுஸந்திக்கவொண்ணாதபடியான இதினுடைய கௌரவத்தையும், ஈஶ்வரன் தானே ஶிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளுகையால் வந்த வேற்றத்தையும், ஸகலஶாஸ்த்ரங்களிலும், ஸகலமந்த்ரங்களிலும், வாச்யந்தன்னிலுங் காட்டில் இதுக்குண்டான பெருமையையும், அக்ரமமாகச் சொல்லிலும் தன்கார்யம் செய்யுமாதிக்யத்தையும், அபேக்ஷித ஸகலபலப்ரதத்வரூபமாஹாத்ம்யத்தையும், கர்மாத்யுபாய ஸஹகாரித்வரூபமான உத்கர்ஷத்தையும் ஜ்ஞாதவ்யஸகலார்த்த ப்ரதிபாதகதயா வந்த மாஹாத்ம்யத்தையும், ஏதத்ப்ரதிபாத்பார்த்த கௌரவவிஶேஷத்தையும் அருளிச்செய்கையாலே இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை யெல்லாரும் அறியும்படி தர்ஶிப்பித்தருளி னாராயிற்று.

இனிமேல் இம்மந்த்ரத்துக்கு, வாக்யார்த்த மிரண்டுபடியாக வருளிச்செய்கிறார்,

(உகூ) இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும் உபாயமும் பலமு மென்னவுமாம்.

(உகூ) (இது தன்னில்) என்று தொடங்கி. அதாவது, இம்மந்த்ரந் தன்னில் சொல்லுகிற வர்த்தம் இவ்வாத்மாவினுடைய ஶேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருந்துள்ள கைங்கர்யமாகிற ப்ராப்யமும், அன்றிக்கே, ஶேஷத்வமாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபாநுரூபமான உபாய

மும், உபாயபலப்யமான பலமும் என்று சொல்லவுமாமென்கை. இதில் ப்ரதமயோஜநையில் ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும், நாராயணபதத்தாலே ப்ராப்யமும் சொல்லுகிறது. அநந்தரயோஜநையில் ப்ரணவத்தாலே மோக்ஷத்வமும், நமஸ்ஸாலே உபாயமும், நாராயணபதத்தாலே பலமும் சொல்லுகிறது.

பலவிசேஷந்தானிருக்கும்படி யெங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார்,

(உள) பலமிருக்கும்படி ப்ரமேயசேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்.

(உள) (பலமிருக்கும்படி) என்று தொடங்கி. அதாவது, இவ்வாத்மாவுக்கு ப்ராப்யமான பலந்தான் அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலே போய், பரிபூர்ண பகவதநுபவத்தைப் பண்ணி, அவ்வநுபவஜநிதப்ரீதிப்ரேரிதனுய்க்கொண்டு பண்ணும் அசேஷசேஷவ்ருத்தியாகையாலே, அதிருக்கும்படியை ஸங்க்ரஹேண ப்ரமேயசேகரமாகிற ப்ரபந்தத்திலும், விஸ்தரேண அர்ச்சிராதிகதியாகிற ப்ரபந்தத்திலும் விஸ்தரமாகச் சொன்னோம், அவற்றிலே கண்டுகொள்வதென்கை.

இனி இம்மந்த்ரத்துக்கு ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதினுடைய அக்ஷரஸங்க்யையையும், பதஸங்க்யையையும் அருளிச்செய்கிறார்,

(உஅ) இதுதான் எட்டுத்திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும்.

(உஅ) (இதுதான்) என்று தொடங்கி. அதாவது,*இம்மந்த்ரந்தான் +"ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரம் ஹந்தஸா காயத்ரம்" என்கிற: "ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரஞ் சந்தஸா காயத்ரீசேதி" +"ஓமித்யக்ரே வ்யாஹரேத், நம இதி பஶ்சாத், நாராயணாயேத்யுபரிஷ்டாத்" "ஓமித்யக்ரே வ்யாஹரேத், நம இதி பஶ்சாத், நாராயணாயேத்யுபரி

*பரந்தரஹஸ்யம். ப்ரவே.

+நாராயணோபநிஷத்து.

ஷ்டாத்" என்கிறபடியே எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமா யிருக்குமென்கை. இதினுடைய அஷ்டாக்ஷரத்வஞ் சொல்லுகிற விடத்தில், *"𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌮𑍍" "ஓமித்யேகாக்ஷரம்" என்று ப்ரணவத்தை யேகாக்ஷரமாகவும்,*"𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑍇 𑌅𑌕𑍍𑌷𑌰𑍇" "நமஇதி த்வே அக்ஷரே" என்று நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும், *"𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯𑍇𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌿" "நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி" என்று நாராயணபதத்தை பஞ்சாக்ஷரமாகவும் ஶ்ருதி சொல்லுகையாலே, ஸமஸ்தபதமான நாராயணபதத்தில், நாரபதத்தைப்பிரித்து ஷடக்ஷரமாக்கி, ப்ரணவத்தையொழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுமவர்களுடைய பக்ஷம் அவைதிகமாகையாலே அநாதரணீயமாகக் கடவது.

இதில் பதத்ரயமும் எவ்வர்த்தத்தைச் சொல்லுகிறதென்னு மாகாங்க்ஷையிலே,

(௨௯) மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது.

(௨௯) (மூன்றுபதமும் மூன்றர்த்தத்தைச் சொல்லுகிறது) என்கிறார்.

அவ்வர்த்தங்கள் தம்மை விஶதமாக அருளிச்செய்கிறார்,

(௩௦) அதாவது ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்.

(௩௦) (அதாவது ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்) என்று. (ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்) என்று முதற்சொன்ன வாக்யார்த்தம் இத்தை நினைத்திறே.

இப்பதத்ரயத்திலும் ப்ரதமபதந்தானேதென்ன,

(௩௧) இதில் முதற்பதம் ப்ரணவம்.

(௩௧) (இதில்முதல்பதம்ப்ரணவம்) என்கிறார், *"𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌤𑍍" "ஓமித்யக்ரே வ்யாஹரேத்" என்றிறே ஶ்ருதி சொல்லிற்று. ஸ்ம்ருதியும்; "𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌦𑍍𑌯𑌂 𑌨𑌮𑍋𑌮𑌧𑍍𑌯𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑌦𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌮𑍍।

*நாராயணோபநிஷத்து.

யத்தில் நின்றும், "பூ:புவ:ஸுவ:" என்கிற வ்யாஹ்ருதித்ரயத்தையும் தோற்றுவித்து, அந்தவ்யாஹ்ருதி த்ரயத்தையும் பொன்னோடை வைக்குமாபோலே தன் ஸங்கல்பத்தாலே ஓட்டைவைத்து அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற அக்ஷரங்கள் மூன்றும், அடைவே தோன்றும்படி பண்ணி, இப்படி ஸர்வேஸ்வரன் ஸமுத்தரித்தபடியைத் திருவுள்ளம்பற்றி, பாத்ரத்ரயகதமான தயிரைத் தனித்தனியே கடைந்து, தத்ஸாரமான வெண்ணெயை வாங்கித் திரட்டினாப்போலே, (மூன்றுவேதத்திலும் மூன்றக்ஷரத்தையுமெடுத்தது) என்கிறார்.

இத்தால் பலித்தத்தை யருளிச்செய்கிறார்,

(௩௪) ஆகையால் இது ஸகலவேதஸாரம்.

(௩௪) (ஆகையாலிது ஸகலவேதஸாரம்)என்று. அதாவது, அக்ஷரத்ரயமும் ஒரோ வேதத்தினுடைய ஸாரமாக ஸமுத்த்ருதமாகையாலே இவ்வக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவம் ஸகலவேதஸாரமென்றபடி. ஆக (இதுதன்னிற்சொல்லுகிற அர்த்தம்) என்று தொடங்கி இவ்வளவும், இம்மந்த்ரத்தினுடைய வாக்யார்த்தத்தையும், அக்ஷரஸங்க்யையையும், பதஸங்க்யையையும், பதத்ரயமும் அர்த்தத்ரயப்ரதிபாதகமென்னுமத்தையும், அதில் ப்ரதமபதம் இன்னதென்னுமத்தையும், அதுதான் அக்ஷரத்ரயாத்மகமாயிருக்குமென்னுமத்தையும், அவ்வக்ஷரத்ரயமும் வேதத்ரய ஸாரமாகவுத்பந்நமாகையாலே தத்ஸமுதாயமான ப்ரணவம் ஸகலவேதஸாரமென்னுமத்தையும் அருளிச்செய்தாராயிற்று.

இனி இவ்வக்ஷரத்ரயத்துக்கு மடைவே அர்த்தமருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் அகாரார்த்தத்தை யருளிச்செய்கிறார்,

(௩௫) இதில் அகாரம் ஸகலஶப்தத்துக்கும் காரணமாய் நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே ஸகலஜகத்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது.

(௩௫) (இதில் அகாரம்) என்றுதொடங்கி. அதாவது, *இவ்வக்ஷரத்ர

*-பரந்த-ர-அகாரார்த்தம்.

ஸத்திலும் வைத்துக்கொண்டு ப்ரதமாக்ஷரமான அகாரம் *"நாராயணாத் ... ஸர்வவேதாநாம் க்ருத்யாநாம் ... வேதாதௌ தேவாதீநாஞ்சகார ஸ:" "நாமரூபஞ்சபூதாநாங்க்ருத்யாநாஞ்சப்ரபஞ்சநம்। வேதசப்தேப்ய ஏவாதௌ தேவாதீநாஞ்சகார ஸ:" என்கிற படியே, லௌகிகஸகல ஶப்தங்களுக்கும் வேதம் காரணமாய் †"ப்ரணவாத்யாஸ்ததா வேதா:" "ப்ரணவாத்யாஸ்ததா வேதா:" "ஓங்காரப்ரபவா வேதா:" "ஓங்காரப்ரபவா வேதா:" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே அந்த வேதங்களுக்கும் ப்ரணவம் காரணமாய் ..."தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய" "தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய" என்கிறபடியே" அந்தப்ரணவந்தனக்குத், தான் காரணமாயிருக்கையாலே "அக்ஷராணாமகாரோஸ்மி" "அகாரோ வைஸர்வா வாக்" "ஸர்வஸ்ய ... காரணத்வாத் ... தஸ்ய" "ஸமஸ்தஶப்தமூலத்வா தகாரஸ்ய ஸ்வபாவத:" என்கிறபடியே ஸகலஶப்தத்துக்குங் காரணமாய் ஸர்வேஶ்வரன் ஸமஸ்தவஸ்துஶரீரதயா ஸர்வரக்ஷகனாயிருக்கும்படியை ப்ரதிபாதிக்கிற நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே ‡"யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி" "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி" R"... ஸர்வஸ்ய ஸர்வகர்த்தா ஸர்வபாதப்ரதிபாதக:" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே எல்லா ஜகத்துக்குங் காரணமாய் எல்லார்க்கும் ரக்ஷகனுமாயிருக்கும் பெருமானைச் சொல்லுகிறதென்கை. இத்தால் இவ்வக்ஷரத்தில் ப்ரக்ருத்யர்த்தமான காரணத்வமும் தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும் சொல்லிற்றாயிற்று. இவ்வகாரத்துக்கு நாராயணபத ஸங்க்ரஹதயா ரக்ஷகவாசித்வம் சொல்லும்போதும், தாதுஸித்த வேஷத்தை அவலம்பித்தே சொல்லவேணுமிறே.

---

*வி-பு-௧-௫-௯௨-

† ப்ரணவாத்யாஸ்ததா வேதா: ப்ரணவே பர்யவஸ்திதா: । வாங்மய: ப்ரணவ: ஸர்வம் தஸ்மாத் ப்ரணவமப்யஸேத்

...தை.உப-௨-௧0.

‡ தை.உப-௧-௧௪.

Rவி-பு-௧-௯-௭௧.

ரக்ஷிக்கையாவது தான் ஏது என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச் செய்கிறார்,

(௩௬) ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.

(௩௬) (ரக்ஷிக்கையாவது) என்று தொடங்கி. அதாவது, ரக்ஷகத்வந்தான் அநிஷ்டநிவர்த்தகத்வ இஷ்டப்ராபகத்வ ரூபேண த்விவிதமாகையாலே, ஈச்வரன் சேதநரை ரக்ஷிக்கையாவது - அவர்களுக்கு துக்காவஹமான விரோதியைப் போக்குகையும் ஸுகாவஹமான அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும் என்கை.

இவர்களுக்கு இவன் போக்கும் விரோதி ஏது, கொடுக்கும் அபேக்ஷிதமேது என்ன அருளிச்செய்கிறார்,

(௩௭) இவை யிரண்டும் சேதநர் நின்றநின்ற அளவுக்கீடாயிருக்கும்.

(௩௭) (இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கீடாயிருக்கும்) என்று. (சேதநர் நின்றநின்ற அளவுக்கீடாயிருக்கும்) என்றது ததததிகாராநுகுணமாயிருக்குமென்றபடி.

இது தன்னை வ்யக்தமாக அருளிச்செய்கிறார் மேல்,

(௩௮) ஸம்ஸாரிகளுக்கு விரோதி ஶத்ருபீடாதிகள், அபேக்ஷிதம் அந்நபாநாதிகள்; முமுக்ஷுக்களுக்கு விரோதிஸம்ஸாரஸம்பந்தம், அபேக்ஷிதம் பரமபதப்ராப்தி; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி கைங்கர்யஹாநி, அபேக்ஷிதம் கைங்கர்யவ்ருத்தி.

(௩௮) (ஸம்ஸாரிகளுக்குக்கு) இத்யாதி. அதாவது, தேஹாத்மாபிமாநாதிகளும் ஶப்தாதிவிஷயாநுபவமுமே யாத்ரையாயிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு நிவர்த்யமான விரோதிஶத்ருக்களால் வரும் நலிவு தொடக்கமானவை; ப்ராப்யமான அபேக்ஷிதம் சோறு தண்ணீர் முதலானவையென்கை. (ஶத்ரு பீடாதிகள்) என்

றொ''விடத்தில் ஆதிஸப்தத்தாலே ஆதிவ்யாதி முதலானவற்றால் வரும் பீடைகளைச் சொல்லுகிறது. (அந்நபாநாதிகள்) என்கிற விடத்தில் ஆதிஸப்தத்தாலே ஸ்ரக்வஸ்த்ராபரணங்களாகாங்கநா லிங்கநாதிகளைச் சொல்லுகிறது.

(முமுக்ஷுக்களுக்கு) இத்யாதி. அதாவது, ஸம்ஸாரத்தில் அடிக் கொதித்து பரமபதத்திலே போக ஆசைப்படா நிற்கும் முமுக்ஷுக்களுக்கு நிவர்த்யமான விரோதி [உக] பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கு மழுக்குடம்பும் ஆய்க்கொண்டு இவ்விபூதியிலே யிருக்கையாகிற ஸம்ஸாரஸம்பந்தம்; ப்ராப்யமான அபேக்ஷிதம்- பகவதநுபவாதிகளுக்கு அநுகூலமான பரமபதத்தை ப்ராபிக்கை யென்கை.

(முக்தர்க்கும்) இத்யாதி. அதாவது, நிவ்ருத்த ஸம்ஸாரராயும் அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தராயும், பகவதநுபவஜநிதப்ரீதிகாரிதகைங்கர்யபரராயுமிருக்கும் முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி வகுத்தசேஷியான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமாகப்பண்ணிக்கொண்டு போருங்கைங்கர்யத்துக்கு வரும் விச்சேதம்; அபேக்ஷிதம்- உத்தரோத்தரமடிமைசெய்து செல்லுகையாகிற கைங்கர்ய வ்ருத்தியென்கை. ஆக இப்படி அதிகாராநுகுணம் விரோதியைப் போக்கி அபேக்ஷிதத்தைக் கொடுக்கையால் ஈஶ்வரனே ஸர்வரக்ஷகனென்னுமிடம் சொல்லிற்றாயிற்று.

இப்படி ஈஶ்வரனேயோ பின்னை யெல்லாரையும் ரக்ஷிக்கிறவன், லோகத்திலே மாதாபித்ரு ப்ரப்ருதி தேவதாந்தரபர்யந்தமாக ரக்ஷகராய்ப் போருகிறவர்கள் பலருமில்லையோ வென்ன வருளிச் செய்கிறார்,

---

**(௩௩) ஈஶ்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.**

---

(௩௩) (ஈஶ்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்) என்று. அதாவது, நிருபாதிக

---

(உக) திரு- வி- ௹க

பந்துவாய், ஸர்வகாலமும் கைவிடாதே நோக்கிக்கொண்டுபோரும் ஸர்வேஶ்வரனையொழிந்த ஔபாதிகபந்துக்களான மாதாபித்ராதிகளும், அர்வாசீநரான தேவதாந்தரங்களும் ரக்ஷகரல்லரென்னுமிடம் ஸஹேதுகமாக ப்ரபந்நபரித்ராண மென்கிற ப்ரபந்தத்திலே சொன்னோம்; அதிலே கண்டுகொள்வதென்கை.

அநந்தரம் அர்த்தபலத்தாலே இப்பதத்தில் அநுஸந்திக்கப் படும் ஶ்ரிய:பதித்வத்தை யருளிச்செய்கிறார்,

---

(சO) ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீஸம்பந்தமநுஸந்தேயம்.

---

(சO) (ரக்ஷிக்கும்போது) என்று தொடங்கி. அதாவது, *“ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே ஶ்ரியா ஸஹ ஜகந்நாத: | ரக்ஷக: ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே” “லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேஶோ தேவ்யா காருண்யரூபயா | ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே” என்றபடியே ரக்ஷகனான ஈஶ்வரன் சேதநரை ரக்ஷிக்குந்தசையில், இவர்களுடைய அபராதங்களைக்கண்டாதல், தன் ஸ்வாதந்த்ர்யத்தாலேயாதல் உபேக்ஷியாமற்செய்கைக்குறுப்பான க்ருபையை ஜநிப்பிக்கும் புருஷகாரபூதையான பிராட்டிஸந்நிதி, அபேக்ஷிதமாகையாலே, ரக்ஷகனானவனைச்சொல்லுகிறவிவ்வகாரத்திலே, அவனுடைய லக்ஷ்மீஸம்பந்தமும் அநுஸந்தேயமென்கை. லக்ஷ்மியென்னாதே ஸ்ரீயென்றது ‘ஶ்ரயதே ஹரிம் ஶ்ரீ:’ ‘ஶ்ரயத இதி ஸ்ரீ:’ என்கிறபடியே அவனை நித்யஸேவைபண்ணுகையாலே அவனோடுவளுக்குண்டான அவிநாபாவமும், ‘ஶ்ரீயதே ஜநை: ஶ்ரீ:’ ‘ஸ்ரீயத இதி ஸ்ரீ:’ என்கிறபடியே சேதநருக்கு இவள் நித்யஸேவ்யையாயிருக்குமென்னு மதுவுந் தோற்றுகைக்காக.

இன்னமும் இவ்வகாரத்தில் ஈஶ்வரனுடைய லக்ஷ்மீஸம்பந்தம் நியமேந தோற்றுமென்னுமத்தை ஆப்தவசநத்தாலே தர்ஶிப்பிக்கிறார்,

---

(சக) அத்ர பகவத்ஸேநாபதிமிஶ்ரர்வாக்யம் “அவன் மார்புவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது.”

---

(சக) (அத்ர) இத்யாதியால். அதாவது, இவ்விடத்திலே ஜநா

---

* லக்ஷ்மீதந்த்ரே. ௨௭.

நாதிகரான ஸ்ரீ லோகாதிபதிஜீயர் அருளிச்செய்யும் வார்த்தை,[௯0] "அகலகில்லேனிறையும்" என்று அவன் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணுமிவள், அம்மார்பை விட்டுப்பிரியலாயிற்று அவனுக்கு ப்ரதிபாதகமான இவ்வக்ஷரத்தை விட்டுப் பிரிவதென்றென்கை. (என்று) என்கிறவித்தனையுங் கூட்டாதபோது, கீழோடு இவ்வாக்யம் அந்வயியாது. இத்தால், அவன் திருமார்பில் ஸம்பந்தமிவளுக்கு நித்யமாகையாலே, அவன் தோற்றுமிடத்திலே யிவளும் தோற்றுகை நிய்சிதமாகையால், அவன் திருமார்பி லந்வயத்தோபாதி, அவனுக்கு வாசகமான அகாரத்தில் அந்வயமும், இவளுக்கு நித்யமென்றதாயிற்று.

இன்னமும் இவ்வர்த்தத்தை ஸ்த்திரீகரிக்கைக்காக ஸர்வசேதன[illegible] அகாரமகாரங்களிரண்டிலும், இவளுக்குண்டான அகாராந்வயத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார்.

---

**(௪௨) பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே யிருக்கும் மாதாவைப் போலே ப்ரதம சரமபதங்களை விடாதே யிருக்குமிருப்பு.**

---

(௪௨) (பர்த்தாவினுடைய) என்று தொடங்கி. அதாவது, சேஷபூதையான தன்ஸ்வரூபத்துக்குச்சேரும்படி அவனை ரஸிப்பிக்கைக்காக, (பர்த்தாவினுடைய படுக்கையையும்) விடாதே, ரக்ஷகையான தன்ஸ்வரூபத்துக்குப் போரும்படி தத்ரக்ஷணம்பண்ணுகைக்காக, (ப்ரஜையினுடைய தொட்டிலையும்) விடாதேயிருக்குமாதாவானவளைப்போலே, இவளுப்பர்த்ருபூதனை விப்வானுக்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள ப்ரதமபதமான அகாரத்தையும், ப்ரஜாபூதரானசேதநர்க்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள சரமபதமான மகாரத்தையும் தத்தத்விஷயத்தில் தனக்குண்டான ஸம்பந்தத்துக்கீடாக ரஸிப்பிக்கை, ரக்ஷிக்கையாகிற விவற்றைப்பற்ற, (விடாதேயிருக்குமிருப்பு) என்கை.

கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தத்தை, ஒரு விஶேஷ நிஷ்டமாக்கி யருளிச்செய்கிறார்,

---

[௯0] திரு-வா-மொ-௯-௧0-௧0.

(சங) ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யஶோதைப் பிராட்டியைப்போலே.

(சங) (ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாதே) என்று தொடங்கி. அதாவது, பார்யையான தன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கைக்காக பர்த்தாவான (ஸ்ரீநந்தகோபரையும்) விடாதே மாதாவான தன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கைக்காக புத்ரனான (க்ருஷ்ணனையும்) விடாதே.[நக] "அம்பரமே" என்கிற பாட்டில் சொல்லுகிறபடியே மத்யே வர்த்திக்கும்(யஶோதைப் பிராட்டியைப்போலே) ப்ரதமசரமபதவாச்யரான ஈஶ்வரசேதநர்களிருவரையும் விடாதே இவளும் வர்த்திக்கும்படியென்கை.

ஈஶ்வரஶேஷத்வமாத்ரமொழியப் பிராட்டிக்கும் ஶேஷமென்னுமிடம், இவ்வாசகத்திலின்றிக்கே யிருக்கச்செய்தேயும், இவளுக்கும் ஶேஷமென்று நாம் கொள்ளுகிறபடி யெங்ஙனே யென்னவருளிச் செய்கிறார்,

(சச) ஒருவனடிமை கொள்ளும்போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணை யோலை யெழுதுவது; ஆகிலும் பணிசெய்வது க்ருஹிணிக்கிறே. அதுபோலே நாம் பிராட்டிக்கடிமையா யிருக்கும்படி.

(சச) (ஒருவன்) என்றுதொடங்கி. அதாவது, லோகத்திலே (ஒருவன்) தாஸதாஸிகள் முதலானதோரடிமையைக் கொள்ளும்போது தனக்கென்றே யெழுதிக்கொள்ளுமதொழிய, தன் (க்ருஹிணிக்கென்றன்றே)வோலை (யோலை) யெழுதிக்கொள்வது ஆயிருக்கச்செய்தேயும், அடிமைத்தொழில் (செய்வது க்ருஹிணிக்கிறே.(அதுபோலே) ஈஶ்வர ஶேஷமென்னுமளவை யிவ்வகாரம் சொல்லிற்றேயாகிலும், (நாம் பிராட்டிக்கடிமையா யிருக்கும்படி) என்கை.

கீழ்ச்சொன்ன ஹேதுக்களையெல்லாம் அநுவதித்துக்கொண்டு ஈஶ்வரனுக்கும், பிராட்டிக்கும் ஒருக்காலும் ப்ருதக்ஸ்திதியில்லாமையை யருளிச்செய்கிறார்,

(சரு) ஆகப் பிரித்து நிலையில்லை.

(சரு) (ஆகப்பிரித்து நிலையில்லை) என்று.

[நக] திரு-பா-கள.

இந்த ப்ருதக்ஸ்த்திதிப்பாவத்துக்கு இரண்டு த்ருஷ்டாந்த மருளிச்செய்கிறார்,

(௩௯) ப்ரபையையும் ப்ரபாவானையும் புஷ்பத்தையும் மணத்தையும் போல.

(௩௯) (ப்ரபையை)என்று தொடங்கி. அதாவது, ப்ரபைக்கும் ப்ரபாவானுக்கும் ப்ருதக்ஸ்த்திதியில்லாதாப்போலவும், புஷ்பத்துக்கும் பரிமளத்துக்கும் ப்ருதக்ஸ்த்திதி யில்லாதாப்போலவு மென்கை. (க)"அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேணப்ரபாயதா"(௨)"அநந்யாஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" "அநந்யாஹிமயாஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா"என்று, ப்ரபாப்ரபாவான்களைப் போலே யிருவருக்கும் ப்ருதக்ஸ்த்திதியில்லை யென்னுமிடம் இருவர் வாக்காலும் சொல்லப்பட்டதிறே.(௩)"ப்ரஸூநம் புஷ்பந்தீமபி பரிமளர்த்திம் ஜிகதிஷு:" "ப்ரஸூநம்புஷ்பந்தீமபி பரிமளர்த்திம்ஜிகதிஷு:" என்கிறவிடத்திலே ஈஶ்வரனை புஷ்பஸ்த்தாநீயனாகவும், பிராட்டியைப் பரிமளஸ்த்தாநீயையாகவும் பட்டருளிச் செய்கையாலே, புஷ்பபரிமளங்களுக்குப்போலே, யிருவர்க்கும் ப்ருதக்ஸ்த்திதி யில்லையென்னுமிடம் அர்த்தாத் ஸித்தம்.

இந்த ப்ருதக்ஸ்த்திதிப்பாவத்தை யநுஸந்தித்துக் கொண்டு, இச்சேர்த்தியே சேதநர்க்கு உத்தேஶ்யமாய்த் தலைக்கட்டினபடியை யருளிச்செய்கிறார்,

(க)ரா- ஸு- உக- கரு- ராவணம் ப்ரதி ஜாநகீ- ஶக்யாலோபயிதும் நாஹமைஶ்வர்யேண தநேநவா| அநந்யா ராகவேணாஹம்பாஸ்கரேணப்ரபாயதா |(௨) ரா- யுத்- கஉக- கக-ப்ரம்மாதீந் ப்ரதிராம:- அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேணப்ரபாயதா | விஶுத்தாத்ரிஷு லோகேஷு மைதிலீ ஜநகாத்மஜா ! (௩) ஶ்ரீகுணரத்நகோஶே- தவஸ்பர்ஶாதிஶ ஸ்ப்ருஶதி கமலே மங்கலபதம் தவேதம் ரோபஶ்ரேதருபரிபதிதம் ஶ்ரீரஸிபத:| ப்ரஸூநம் புஷ்யந்தீமபிபரிமலர்த்திம் ஜிகதிஷுர்நசைவந்த்வாதேவா ஸ்வதத இதி கஶ்சித்கவயதே!

(சஎ) ஆக இச்சேர்த்தி உத்தேஶ்யமாய்விட்டது.

(சஎ) (ஆக இச்சேர்த்தி உத்தேஶ்ய மாய்விட்டது) என்று. (இச்சேர்த்தி உத்தேஶ்யம்)என்கையாலே, இவர்களைத் தனித்தனியே விரும்புகை யுத்தேஶ்யம் அன்றென்றபடி. இருவரையும் பிரித்து விரும்பினால், ராவணஶூர்ப்பணகைகளுக்குப்போலே, அநர்த்தமே பலிக்குமத்தனை. இருவரையும் பற்றினலிறே, ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே வாழலாவது.

இனிமேல், இதில் விபக்த்யர்த்தம் அருளிச்செய்வதாக ப்ரதமம் விபக்தி தன்னை நிர்த்தேஶிக்கிறார்,

(சஅ) இதிலே சதுர்த்தி யேறிக்கழியும்.

(சஅ) (இதிலே சதுர்த்தி யேறிக்கழியும்) என்று. அதாவது, இவ்வகாரத்திலே சதுர்த்தியேறி [க] "ஸுபாம் ஸுலுக்" "ஸுபாம்ஸுலுக்" இத்யாதிஸூத்ரத்தாலே லுப்தமாய்ப் போமென்கை.

விபக்த்யந்தரமெல்லாங்கிடக்க, இவ்வகாரத்தில் சதுர்த்தியேறினபடி தானெங்ஙனே யென்கிற ஶங்கையை யநுவதிக்கிறார்,

(சகூ) சதுர்த்தியேறினபடி யென்னென்னில்;

(சகூ) சதுர்த்தியேறினபடி யென்னென்னில் என்று.

அதுக்குத்தரமருளிச்செய்கிறார்,

(ரு0) நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே.

(ரு0) (நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே, என்று. அதாவது, இவ்வகாரம் சதுர்த்த்யந்தமான நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாகையாலே, இதிலும் சதுர்த்தியேறிற்றென்கை. இங்ஙனன்றாகில், இரண்டுக்கும் ஸங்க்ரஹவிவரணத்வம் ஸித்தியாதிறே.

இத்தாற் சொல்லுகிற வர்த்தந்தானேதென்ன வருளிச்செய்கிறார்,

(ருக) இத்தால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது.

(ருக) (இத்தால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது) என்று. அதாவது, இதுதான் [உ] "தாஸபூதா: ஸ்வதஸ் ஸர்வே" "தாதர்த்த்யே சதுர்த்தீ"

[க] அஷ்டா - எ - க - ௩அ. [உ] அஷ்டா - உ - ௩ - ௧௩ - வா.

ஆகையாலே இச்சதுர்த்தியால் ஈச்வரனுக்கு சேஷமென்னுமிடம் சொல்லுகிறதென்கை.

[க] "ஸர்வம் பரவசம் து:க்கம்" "ஸர்வம்பரவசந்து:க்கம்" "சேஷ வாச்ருத்தி:" "ஸேவா ச்வவ்ருத்தி:" என்கிற லௌகிக ந்யாயத்தைக் கொண்டு சேஷத்வத்தை துக்கரூபமாக நினைத்திருக்குமவர்கள் பண்ணும் ப்ரச்நத்தை அநுவதிக்கிறார்,

(௫௨) சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டிற் காண்கிறதென்னில்;

(௫௨) (சேஷத்வந் துக்கரூபமாக வன்றோ நாட்டிற் காண்கிறதென்னில்) என்று.

அதுக்குத்தரம் அருளிச் செய்கிறார்,

(௫௩) அந்த நியமமில்லை, உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகமாகக் காண்கையாலே.

(௫௩) (அந்தநியமமில்லை) என்று தொடங்கி. அதாவது, நாடுதன்னிலே [௬௨] "பணிமின் திருவருள்" இத்யாதிப்படியே அபிமத விஷயத்துக்கு சேஷமாயிருக்குமிருப்பு ஸுகரூபமாகக் காண்கையாலே சேஷத்வமாகில் துக்கரூபமாயிருக்கிற நியமமில்லையென்கை.

அபிமதவிஷயத்தில் சேஷத்வம் ஸுகமாகிறது, அவ்விஷயத்தில் குணமடியாக வந்ததாகையாலே யன்றோ வென்ன வருளிச் செய்கிறார்,

(௫௪) அகாரத்திலே கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது

(௫௪) (அகாரத்திலே) என்று தொடங்கி. அதாவது, ஈச்வரனுடைய ரக்ஷகத்வ ப்ரதிபாதகமான அகாரத்திலே அந்த ரக்ஷணோபயோகியான கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே ஈச்வரவிஷயமான இந்த சேஷத்வமும் அந்த குணங்களடியாக வந்ததென்கை. ஆகையால் இதுவும் ஸுகரூபமாயிருக்கக் குறையில்லையென்று கருத்து.

[க] மநுஸ்ம்ருதி- ௪- ௧௬௦-
[௬௨] திரு-வா-௪-க-௫.

ஆனால் ஔபாதிகமான விது ஸ்வரூபமன்றோ வென்ன வருளிச் செய்கிறார்,

## (ருரு) ஶேஷத்வமே யாத்மாவுக்கு ஸ்வரூபம்.

(ருரு)(ஶேஷத்வமே யாத்மாவுக்கு ஸ்வரூபம்)என்று. அதாவது, உகந்தவிஷயத்தில் இதின்ஸாகரூபத்வத்துக்கு குணக்ருதத்வத்தை ஹேதுவாகச் சொல்லுகையாலே அந்த குணக்ருதத்வ மிங்குமுண் டென்னுமிடத்துக்குச் சொன்ன வித்தனையொழிய அர்த்தஸ்த்திதி யை நிரூபித்தால்(க)“ஸகேஶோத நிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணிஸ்தி ஹம்” “ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம்ஸ்வாமித்வம்ப்ரஹ்மணிஸ்த்திதம்” “ஶ்ருதஶாஸ்த்ர ஸமஸ்த ஸாரம் ஸமஸ்த ஶாஸ்த்ர ஸார” “ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்சஸதாஸ்மர” “ஜாதஸஹிதா ஸர்வே ஸஹ்யாதாநாம் ஸாரோதந:| நாந்யதா லக்ஷணந்தேஷாம் ஸர்வேஷாம் தமேவச” “தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:| நாந்யதாலக்ஷணந்தேஷாம்பந்தேமோக்ஷேததைவச” இத்யாதிகளிலே இத்தை யாத்மாவுக்கு ஸ்வாபாவிகமாய்ச்சொல்லு கையாலே, (ஶேஷத்வமே யாத்மாவுக்கு ஸ்வரூபம்) என்கை.

(ஶேஷத்வமே யென்று அவதரிப்பானென், ஜ்ஞாநாநந்த ஸ்வ ரூபமான ஆத்மவஸ்துவுக்கு, அல்லாதபோதும் ஸ்வரூபமில்லையோ வென்ன வருளிச்செய்கிறார்,

## (ருசு) ஶேஷத்வமில்லாத போது ஸ்வரூபமில்லை.

(ருசு) (ஶேஷத்வமில்லாத போது ஸ்வரூபமில்லை) என்று. ஶேஷத்வமில்லாதபோது ஆத்மாபஹாரரூபமானஸ்வாதந்த்ர்ய புத்தி நடக்கையாலே, ஸ்வரூபமழிந்துவிடு மென்னுமத்தை தர் ஶிப்பிக்கிறார் மேலிரண்டு வாக்யத்தாலே,

## (ருஎ) ஆத்மாபஹாரமாவது ஸ்வதந்த்ர மென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போதில்லையாய்விடும்.

(ருஎ) (ஆத்மாபஹார மாவது) என்று தொடங்கி. அதாவது,

(க) விஷ்வக்ஸேநஸம்ஹிதை.

(க) "யோऽந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே। கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" "யோऽந்யதா ஸந்த மாத்மாந மந்யதா ப்ரதிபத்யதே | கிந்தேந க்ருதம் பாபஞ் சோரேணாத்மாபஹாரிணா" என்று ஸர்வபாப மூலமாகச் சொன்ன (ஆத்மாபஹாரமாவது) தன் ஸ்வரூபம் ஸ்வதந்த்ரம் என்கிற ப்ரதிபத்தி; ஸ்வதந்த்ர மாமளவில் "அஸந்நேவ" (2) "அஸந்நேவ" என்கிறபடியே ஸ்வரூபம் இல்லையாய் விடும் என்கை. ஆகையால் சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை, என்னத்தட்டில்லை யென்று கருத்து. ஆக ப்ரக்ருத்யர்த்தமான ஈச்வரனுடைய காரணத்வமும் தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும் அர்த்தபலத்தால் வந்த ஸ்ரிய:பதித்வமும் ப்ரத்யயஸித்தமான சேதந சேஷத்வ ப்ரதிஸம்பந்தியான சேஷித்வமுமாகிற அகாரார்த்தத்தை யருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம் மத்யமாக்ஷரமான உகாரத்துக்கு அர்த்தம்அருளிச்செய்வதாக உபக்ரமிக்கிறார்,

(ருஅ) ஸ்த்தாநப்ரமாணத்தாலே உகாரமவதாரணார்த்தம்.

(ருஅ) (ஸ்த்தாநப்ரமாணத்தாலே உகாரமவதாரணார்த்தம்) என்று. அதாவது, (௩) "தத்ேவ ஸமிதஜநா ஹவ்யை ஜஷ்ட" "... பூதந்தது பவ்யமா இதம்" என்றும், (௪) "தத்ேவாக்நிஸ் ...", "ததேவாக்நி ஸ்தத்வாயுஸ்தத்ஸூர்யஸ்தது சந்த்ரமா:" என்றும் இத்யாதிகளிலே ஏவகார ஸ்த்தாநத்திலே உகாரத்தை ப்ரயோகிக்கக் காண்கையாலே ஸ்த்தாந ப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணத்தை யர்த்தமாக வுடைத்தாயிருக்குமென்கை.

அவதாரணத்துக்கு அர்த்தம் அயோகவ்யவச்சேதமாதல் அந்யயோக வ்யவச்சேதமாதல் ஆகையாலே இவ்வவதாரணத்தால் சொல்லுகிறதேதென்ன வருளிச் செய்கிறார்,

(க) பா-ஆதி-எச-உஅ. (உ) தை-உப-ப்ர-க-அநு-கச-ப-உகூ-வா-க

(௩) தை-உப-ப்ர-உ-அநு-க-ப-க-வா-ச

(௪) தை-௩-ப்ர-உ-அநு-கச-ப-உகூ-வா-க.

## (௫௯) இத்தால் பிறர்க்கு ஶேஷம் அன்றென்கிறது.

(௫௯) (இத்தாற் பிறர்க்கு ஶேஷமன்றென்கிறது.) என்று. அதாவது, அவதாரணவாசகமான இவ்வுகாரத்தால் கீழ் ஈஶ்வர ஶேஷமாகச் சொன்ன இவ்வாத்மவஸ்து, அந்யர்க்கு ஶேஷமன்றென்னு மிடத்தைச் சொல்லுகிறதென்கை. சதுர்த்தியாலே ஈஶ்வரஶேஷத்வம் ப்ரதிபாதிதமாகச்செய்தே, அந்யஶேஷத்வம் ப்ரஸ்துதமாமோவென்னில், லோகத்திலே யொருவனுக்கு ஶேஷமான க்ருஹக்ஷேத்ரபுத்ரதாஸாதிகள், வேறேயுஞ் சிலர்க்கு ஶேஷமாயிருக்கக்காண்கையாலே, அப்படிப்பட்ட அந்யஶேஷத்வம் இந்தஸ்த்தலத்திலு முண்டோவென்றொரு ஶங்கை யுதிக்குமிறே; ஆகையாலே, தாத்ருஶமான அந்யஶேஷத்வம் இங்கில்லை யென்னு மிடத்தை ப்ரதிபாதிக்கிறது உகாரம்.

அங்ஙனன்றிக்கே, இவ்வுகாரத்தாலே லக்ஷ்மீஶேஷத்வம் சொல்லுகிறதென்பாரு முண்டென்கிறார்,

## (௬0) பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறதென்றுஞ் சொல்லுவர்கள்.

(௬0) (பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறதென்றுஞ் சொல்லுவர்கள்) என்று. அதாவது, “அகாரஶ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே । உகாரஶ்சித்ஸ்வரூபாயா: ஶ்ரியோ வாசீ ததா விது: । மகாரஸ்து தயோர்தாஸ இதி ப்ரணவலக்ஷணம்” “அகாரஶ் சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே । உகாரஶ் சித்ஸ்வரூபாயாஶ் ஶ்ரியோ வாசி ததா விது:। மகாரஸ்துதயோர் தாஸஇதி ப்ரணவலக்ஷணம்” என்றும், “அகாரேணோச்யதே விஷ்ணு: ஸர்வலோகேஶ்வரோ ஹரி:। உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா। மகாரஸ்து தயோர்தாஸ: ஶ்ரீநாராயணயோஸ்ஸதா। ஆத்மந: ஶேஷபூதஸ்ய வாசக: ப்ரதிசோதித:” “அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேச்வரோ ஹரி:। உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா। மகாரஸ்து தயோர்விப்ரஶ் ஶ்ரீநாராயணயோஸ்ஸதா। ஆத்மநஶ் ஶேஷபூதஸ்ய வாசகஶ் ப்ரதிசோதித:” என்றும் இத்யாதிகளாலே பகவச்சாஸ்த்ரத்திலே, அகாரத்தை பக

வத்வாசகமாகவும், உகாரத்தை லக்ஷ்மீவாசகமாகவும், மகாரத்தை ததுபயசேஷ பூதஜீவவாசகமாவுஞ் சொல்லுகையாலே, உகாரத்தை அவதாரணவாசகமாகக் கொள்ளாதே, லக்ஷ்மீவாசகமாகக் கொண்டு, இவ்வுகாரத்தாலே பெரியபிராட்டியார்க்கு சேஷமென்கிறதென்றும் நிர்வஹிப்பர்களென்கை.

அத்தைப் பற்றவும் பூர்வயோஜனையே முக்யமென்னுமத்தை யருளிச் செய்கிறார்,

**(௬௧) அதிலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநம்.**

(௬௧) (அதிலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநம்) என்று. அதாவது, பெரிய பிராட்டியார்க்கு சேஷமாகையாகிற வதிலுங்காட்டில் கீழ்ச்சொன்ன பகவச்சேஷத்வத்துக்குவிரோதியான அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநாபேக்ஷிதம் என்கை.

அந்யசேஷத்வமிப்படி க்ரூரமோவென்ன அதின்க்ரௌர்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார்,

**(௬௨) தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கிடுமாபோலே ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை.**

(௬௨) (தேவர்களுக்கு) என்று தொடங்கி. அதாவது, ஆராத்யரான இந்த்ராதி (தேவர்களுக்கு) போக்யதயா சேஷமாகக் கல்பிதமான, (புரோடாசத்தை) தர்பாநஸ்பர்சநாதிகளுக்கு அநர்ஹமாம்படி நிஹீநமாயிருக்கிற (நாய்க்கிடுமாபோலே) இருப்பதொன்று ப்ராப்தசேஷியான ஈச்வரனுக்கு (சேஷமான ஆத்மவஸ்துவை) ஸர்வப்ரகாரத்தாலும் ஹேயரான (ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை) யென்கை.

இப்படி க்ரூரமான அந்யசேஷத்வம் கழிகையே ஆத்மாவுக்கு ப்ரதாநாபேக்ஷிதமென்று கீழ்ச்சொன்ன அர்த்தத்தை ஸ்திரீகரிக்கிறார்,

**(௬௩) பகவச்சேஷத்வத்திலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநம்.**

(௬௩) (பகவச்சேஷத்வத்திலும் அந்யசேஷத்வங் கழிகையே ப்ர

தாநம்)என்று. அதாவது, லக்ஷ்மீஶேஷத்வத்திலுங்காட்டில் ப்ரதா நம் என்ற வளவேயன்று, பகவான் தனக்கு ஶேஷமாயிருக்குமதிலுங்காட்டில் அந்யவிஷத்தில்(ஶேஷத்வம் கழிகையே)ஆத்மாவுக்கு ப்ரதாநா பேக்ஷிதமென்கை.

இதுக்கு ப்ரமாணங் காட்டுகிறார்,

---

(கூச)"மறந்தும்புறந்தொழாமாந்தர்"என்கையாலே.

---

(கூச) ("மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்கையாலே) என்று. அதாவது, யமகிங்கரஸம்வாதத்தைத் திருமழிசைப்பிரான் அருளிச்செய்த [நக] "திறம்பேல்மின்கண்டீர்" என்கிறபாட்டிலே பாகவதலக்ஷணஞ்சொல்லுகிறவளவில் திருவடிதன்னுமம் (மறந்தும் புறந்தொழாமாந்தர்) என்றுஸ்வாமியுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும் மற்றொருவிஷயத்தில் ஶேஷவ்ருத்தி பண்ணாதவர்கள் என்றுசொல்லுகையாலே யென்கை.

ஏவம்பரஶேஷமான ஆத்மவஸ்துவுக்கு ஸ்வஶேஷத்வ பாரதந்த்ர்யங்களிரண்டும் அந்யஶேஷத்வமாகையாலே உபயத்தையும் இப்பதம் கழிக்கிறதென்று சொல்லி நிகமிக்கிறார்,

---

(கூரு) இந்நால் தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது.

---

(கூரு) (இந்நால் தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது) என்று. அதாவது, அந்யஶேஷத்வ நிவர்த்தகமான இவ்வுகாரத்தாலே அநந்யார்ஹஶேஷத்வமவிஶிஷ்டமாகையாலே இவ்வாத்மவஸ்து தனக்கும் (உரித்தன்று) தன்னையொழிந்த ஸம்ஸாரிகளுக்கும் (உரித்தன்று) என்னுமிடஞ் சொல்லுகிறதென்கை. ஆக உகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம் த்ருதீயாக்ஷரமான மகாரார்த்தத்தை யருளிச்செய்கிறார்,

---

(கூகூ) மகாரம், இருபத்தஞ்சாமக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே ஆத்மாவைச் சொல்லுகிறது.

---

(கூகூ) (மகாரம்)என்று தொடங்கி. அதாவது, [க] "ஹ்ருதீவ ஸவஶ்ச ... வமதவமூணஜ்ஞா

---

[நக] ச. திரு. அ. கூஅ. [க] பாத்மோத்தரம் ச-உச.

நமஸ்காரோபஸ்தயா || ஜ்ஞாநம் பகாரேணோக்தம் மகாரேண கர்ம ஸம்ஸ்க்ருதி: | பகாரேண ஹகாரேண ஜ்ஞாநாத் ப்ரக்ருதிருச்யதே || ஆத்மா தஸகாரேண பஞ்சவிம்ஸ: ப்ரகீர்த்தித:" "பூதாநிச கவர்க்கேண சவர்க்கேணேந்த்ரியாணிச | டவர்க்கேண தவர்க்கேண ஜ்ஞாநகந்தாதயஸ்ததா || மந:பகாரேணைவோக்தம் பகாரேணத்வஹங்க்ருதி: | பகாரேண பகாரேண மஹாந்ப்ரக்ருதிருச்யதே || ஆத்மா துஸமகாரேண பஞ்சவிம்ஸ: ப்ரகீர்த்தித:" என்கிறபடியே, ப்ருதிவ்யாதி ப்ரக்ருத்யந்தமான இருபத்துநாலுதத்த்வத்துக்கும் வாசகமாயிருந்துள்ள ககாராதிபகாராந்தமான இருபத்துநாலு அக்ஷரமும்போலன்றிக்கே (மகாரம் இருபத்தஞ்ஜாமக்ஷரமாய்) [௧] "மநஜ்ஞாநே" "மநஜ்ஞாநே" என்கிறதாதுவிலே யாதல், [௨] "மநஅவபோதநே" "மநஅவபோதநே" என்கிறதாதுவிலே யாதல் நிஷ்பந்நமாகையாலே, (ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே,) "பஞ்சவிம்ஸோயம் புருஷ:" "பஞ்சவிம்ஸோயம்புருஷ:" [௩] "பஞ்சவிம்ஸ ஆத்மா பவதி" "பஞ்சவிம்ஸ ஆத்மா பவதி" என்கிறபடியே பஞ்சவிம்ஸகனுப், [௪] "விஜ்ஞாநாத்மா புருஷ:" "விஜ்ஞாநாத்மா புருஷ:" [௫] "விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" "விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" என்கிறபடியே ஜ்ஞாநஸ்வரூபனுமாய், ஜ்ஞாநகுணகனுமாயிருக்கிற ஆத்மாவைச் சொல்லுகிறதென்கை.

கீழ்ச்சொன்ன சேஷத்வம் ஸர்வஸாதாரணமாகையாலே த்ரிவிதாத்மவர்க்கத்தையும், இதிலே சொல்லவேண்டுகையாலே அருளிச் செய்கிறார்,

(௧௭) இதுதான் ஸமஷ்டிவாசகம்.

(௧௭) (இதுதான் ஸமஷ்டிவாசகம்) என்று. அதாவது, இப்படி ஆத்மவாசகமான இம்மகாரந்தான் ஆத்மஸமஷ்டிக்கு வாசகமென்கை.

[௧] தாது-திவாதி-ஸப்தவிம்ஸதி: [௨] தாது-தநாதி-உவிகரணீ.
[௩] யஜுஷி-ஸாகை-௧-அ-௨-ப்ர-௭-ப [௪] ப்ர-௨-௪-௧.
[௫] ப்ரு-௨-௪-௫-௧௫.

ஏகவசநம், ஸமஷ்டிவாசகமாமோவென்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார்,

(சு அ) ஜாத்யேகவசநம்.

(சுஅ) (ஜாத்யேகவசநம்) என்று. அதாவது, வ்ரீஹிஸமூஹத்தைச் சொல்லுகிறவன், இதொருநெல்லென்றால், அந்த ஏகவசநம், ஜாதி பரமானாப்போலே, இதுவும் ஆத்மஜாதிபரமான ஏகவசநமென்கை.

இம்மகாரத்தால், ஆத்மாவினுடைய எவ்வாகாரஞ் சொல்லுகிறதென்ன அருளிச்செய்கிறார்,

(சுகூ) இத்தால் ஆத்மா ஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.

(சுகூ) (இத்தால்) என்று தொடங்கி. அதாவது, பஞ்சவிம்ஶகரமாய் ஞ்ஜாநவாசியுமாயிருந்துள்ள இம்மகாரத்தால், ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மா ஜ்ஞாநாஶ்ரயபூதனானவனென்று, அசேதநமான தேஹத்திற்காட்டில், ஆத்மாவின் (வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயித்து) என்கை.

'தேவோஹம், மநுஷ்யோஹம், ஸ்த்ரீலோஹம், க்ருஶோஹம்' என்று தேஹத்திலே அஹம்புத்திவ்யவஹாரங்கள் நடவாநிற்க, அஹமர்த்தபூதனான ஆத்மா, தேஹத்தில் வ்யாவ்ருத்தனென்று சொல்லுகிறபடிதானெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார்,

(எ௦) தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்த்வஶேகரத்திலே சொன்னோம்.

(எ௦) (தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்த்வஶேகரத்திலே சொன்னோம்) என்று. அதாவது, அநேகஹேதுக்களாலே தேஹத்தினுடைய அநாத்மத்வத்தை ஸாதியாநின்றுகொண்டு, ஆத்மாவினுடைய தத்வ்யாவ்ருத்தியை தத்த்வஶேகரமாகிற ப்ரபந்தத்திலே வ்யக்தமாகச்சொன்னோம்; அதிலே கண்டுகொள்வதென்கை.

தர்மி ஸ்வரூபகதநபூர்வகமாக தத்தர்மமான ஶேஷத்வத்தைச் சொல்லுகை ப்ராப்தமாயிருக்க, இப்ரணவந்தன்னிலே ப்ரதமம் ஶேஷத்வத்தைச்சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லுவானென் என்கிற ஶங்கையிலே, அப்படிசொல்லுகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார்,

(எக) மணத்தையும், ஒளியையுங்கொண்டு, பூவை யும், ரத்நத்தையும் விரும்பு மாபோலே, ஶேஷமென் ருத்மாவை யாதரிக்கிறது; அல்லாத போது "உயிரி னாற்குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம்; அது தோன்ற ஶேஷத்வத்தைச் சொல்லி, பின்னை ஆத்மா வைச்சொல்லுகிறது.

(எக) (மணத்தையும்) இத்யாதி வாக்யத்ரயத்தாலே. அதாவது, மணத்துக்காஶ்ரயமென்று பூவை விரும்புமாபோலேயும், ஒளி க்காஶ்ரயமென்று ரத்நத்தை விரும்புமாபோலேயும், ஶேஷத்வத் துக் காஶ்ரயமென்றுயிற்று ஆத்மாவையாதரிக்கிறது; ஶேஷத்வா ஶ்ரயமல்லாதபோது,[௬௪] "உயிரினாற்குறைவிலம்" என்று 'பகவச் சேஷத்வரஹிதமான ஆத்மாவால் அபேக்ஷையுடையோமல்லோம்' என்கிறபடியே, த்யாஜ்யமுப்பிடுமித்தனை. இப்படியிருந்துள்ள ஶேஷத்வத்தின் ஊற்றந்தோற்ற, (ஶேஷத்வத்தை) முந்துறச் (சொ ல்லி, பின்னை யாத்மாவைச்) சொல்லிற்றென்கை.

பதத்ரயாத்மகமான இப்ரணவத்தாற் சொல்லித் தலைக்கட் டின அர்த்தத்தை யருளிச் செய்கிறார்,

(எஉ) ஆக ப்ரணவத்தால் "கண்ணபுரமொன்றுடை யானுக் கடியேனொருவர்க்குரியேனோ" என்கிறபடியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று.

(எஉ) (ஆக) என்று தொடங்கி. அதாவது, கீழ்ச்சொன்ன வெல்லா த்தாலும் (ப்ரணவத்தால் [௬௫] "கண்ணபுரமொன்றுடையானு க்கு") என்றுசதுர்த்யந்தமான அகாரார்த்தத்தையும், "அடியேன்" என்று ஶேஷத்வாஶ்ரய வாசியான மகாரத்தில் அர்த்தத்தையும் "ஒருவர்க்குரியேனோ" என்று அந்யஶேஷத்வநிவர்த்தகமான உகா ரார்த்தத்தையும் சொல்லாநின்றுகொண்டு, ப்ரணவார்த்தத்தை யநுஸந்தித்த திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே, ஜீவபரர் களுக்குண்டான ஶேஷஶேஷிபாவஸம்பந்தத்தைச் சொல்லிற் றென்கை.

[௬௪] திரு- வா- ௪- அ-- ௧௦ [௬௫] பெ-தி-மொ.-அ-௩-௬

இன்னமும் பொய்கையாருடைய திவ்யஸூக்தியாலே சேஷத்வ ப்ரதிஸம்பந்தி யொருமிதுந மென்னுமிடந்தோற்ற, இந்தஜீவ பரஸம்பந்தத்தை அருளிச்செய்கிறார்,

(எங) இத்தால் "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றதாயிற்று.

(எங) (இத்தால் "தாமரையாள் கேள்வன்") என்று தொடங்கி அதாவது, இப்ரணவத்தால்,[நகூ]"தாமரையாள் கேள்வன்" என்று அகாரவாச்யனும், சேஷத்வ ப்ரதி ஸம்பந்தியான ஸ்ரீய:பதியையும், (ஒருவனையே நோக்கும்) என்று சதுர்த்த்யுகாரங்களால் சொல்லுகிற அநந்யார்ஹசேஷத்வப்ரயுக்தமான ஆத்மாவினுடைய ததேகபரதையையும், (உணர்வு) என்று அந்த சேஷத்வாச்ரயமாக மகாரத்தால் சொல்லப்பட்ட ஜ்ஞாநைகநிரூபணீயனான ஆத்மாவையும், சொல்லுகிற ஸூக்தியிற்படியே, ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்றாயிற்றென்கை.

அகாரத்தில் ப்ரத்யபார்த்த ப்ரதாநமாக, ப்ரணவார்த்தத்தை யோஜித்தார் கீழ்; அதில் தாத்வர்த்தப்ரதாநமாக, ப்ரணவத்துக்கு இன்னமுமொரு யோஜனை யருளிச்செய்கிறார்,

(எச) அகாரத்தாலும், மகாரத்தாலும் ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும், உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று.

(எச) (அகாரத்தாலும்) என்று தொடங்கி. அதாவது, அகாரத்தாலே ரக்ஷகனான ஈச்வரனைச்சொல்லிற்று, மகாரத்தாலே தத்ரக்ஷ்யமான ஆத்மவஸ்துவைச்சொல்லிற்று, சதுர்த்தியாலே ரக்ஷிக்கைக்கு ஹேதுவான சேஷத்வமாகிற ப்ராப்தியைச் சொல்லிற்று. இப்படி ரக்ஷிக்கிறதற்கு பலம் இவ்வாத்மவஸ்து, அத்தலைக்கநந்யார்ஹமாக விநியோகப்படுகையாகையாலே, அவ்வநந்யார்ஹசேஷத்வவாசியான உகாரத்தாலே ரக்ஷண பலத்தைச்சொல்லிற்றென்கை,

ஆக இம்மந்த்ரத்திற் ப்ரதமபதமான ப்ரணவார்த்தத்தை யருளிச்செய்தாராயிற்று.

[நகூ] க-திரு-அ-கூஎ.

இனி, மேலிற் பதங்களுக்கும் அர்த்தம் அருளிச்செய்வதாக, மந்த்ரஶேஷமும் இதுக்கு விவரணமா யிருக்கும்படியை முந்தற அருளிச்செய்கிறார்,

(எரு) இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.

(எரு) (இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது) என்று, "இவ்விடத்தில் விவரணமாகிறது, ப்ரஸ்துதமான அர்த்தத்துக்கு உபயுக்தமான அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு பூர்வோக்தமான அர்த்தத்தை விஶதீகரிக்கை" என்று தீபப்ரகாஶத்திலும், "உக்தார்த்தவிஶதீகார யுக்தார்த்தாந்தரபோதநம்। மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்" "உக்தார்த்தவிஶதிகார யுக்தார்த்தாந்தர போதநம் | மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்" என்று ரஹஸ்யத்ரயார்த்த விவரணக்ரமமருளிச்செய்த ப்ரபந்தத்திலும், விவரணலக்ஷணத்தை ஜீயரருளிச் செய்தாரிறே.

விவரிக்கிறபடி தானெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார்,

(எகூ) உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்.

(எகூ) (உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு) என்று தொடங்கி. அதாவது, அந்யஶேஷத்வத்தைக்கழிக்கிறவிடத்தில் அந்யரிலே அந்தர்பூதனாகச் சொல்லப்பட்ட தன்னை வெளியாகச்சொல்லிக் கழிக்கைபோலே, (உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு.) ரக்ஷகனான ஸர்வேஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும், ரக்ஷ்யபூதசேதநாசேதநங்களையும், ரக்ஷணோபயோகியான குணங்களையும், ரக்ஷணப்ரகாரத்தையும், விஶதமாகச் சொல்லுகையாலே, (அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்). "நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்" "நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்" (௧) "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" என்கிறபடியே, கிஞ்சித்காரமில்லாதபோது ஶேஷத்வஸித்தியில்லாமையால், தத்ஸித்திக்குறுப்பான கிஞ்சித்காரத்தை

(௧) பூர்வமீமாம்ஸை.

ப்ரதிபாதிக்கிற சதுர்த்தி, ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மவஸ்துவைச் சொல்லுகிற (மகாரத்தை விவரிக்கிறது.) மகாரவாச்யனான ஆத்மாவினுடைய நித்யத்வம், ஏகரூபத்வம், பஹுத்வந் தொடக்கமானவற்றை ப்ரதிபாதிக்கையாலே, (மகாரத்தை விவரிக்கிறது) (நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்) என்கை.

அக்ஷரக்ரமத்திலே விவரியாதே வ்யுத்க்ரமமாக விவரிப்பானேனென்ன அருளிச்செய்கிறார்,

---

(எஎ) அடைவே விவரியாதொழிகிறது, விரோதிபோயநுபவிக்கவேண்டுகையாலே.

---

(எஎ) (அடைவே) என்று தொடங்கி. அதாவது, அக்ஷரக்ரமத்திலே விவரியாதொழிகிறது அகாரவிவரணமான நாராயணபதத்தில் பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்காரமமகாராதிகள், நமஸ்ஸாலே கழியுண்டுபோய் (பின்னை அநுபவிக்கவேண்டுகையாலே) என்கை.

இனி மத்யமபதமான நமஸ்ஸுக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக, அதில் அவாந்தரபதபேதத்தை அருளிச்செய்கிறார்,

---

(எஅ) நமஸ்ஸு "ந" என்றும், "ம:" என்றும், இரண்டுபதம்.

---

(எஅ) (நமஸ்ஸு "ந" என்றும், "ம:" என்றும் இரண்டுபதம்) என்று.

இவ்விரண்டுபதங்களுக்கும் அர்த்தமேதென்னவருளிச்செய்கிறார்,

---

(எகூ) "ம:" என்கிறவித்தால் தனக்குரியனென்கிறது; "ந" என்று அத்தைத் தவிர்க்கிறது.

---

(எகூ) ("ம:"-என்கிறவித்தால்) என்று தொடங்கி. அதாவது, "ம:-" என்று ஷஷ்ட்யந்தமான விம்மகாரத்தால் மகாரவாச்யனான ஆத்மாவுக்கு கீழ்ச்சொன்ன தாதர்த்த்யப்ரதிகோடியான ஸ்வார்த்ததையைத் தோற்றுகையாலே, தனக்குரியனென்னுமத்தைச்சொல்லுகிறது; "ந" என்று நிஷேதவாசியான நஞ்ஞாலே (அத்தைக்கழிக்கிறது) என்கை.

உபயபதத்தாலும் சொன்னவர்த்தத்தைச் சேர்ப்பிடித்தருளிச்செய்கிறார்,

(அ०) ஆக "நம:" என்கிறவித்தால், தனக்குரியனன்றென்கிறது.

(அ०) (ஆக "நம:" என்கிற வித்தால் தனக்குரிய னன்றென்கிறது) என்று. பதக்ரமத்திலே யர்த்தஞ்சொல்லாதே, வ்யுத்க்ரமமாகச் சொல்லுகிறது, நிஷேத்யத்தைச்சொல்லி நிஷேதிக்கவேண்டுகையாலே. க்ரமத்திலே சொல்லும்போது [கஎ] "வீடு மின்முற்றவும்" என்னுமாபோலே நிஷேத பூர்வகமாக நிஷேத்யத்தைச் சொல்லுகிறதென்று யோஜிக்கவேணும். அதுதானும்பரந்தபடியிலே யிவர்தாமே யருளிச்செய்தார்.

தனக்கும் பிறர்க்குமுரித்தன்றென்று அந்யசேஷத்வத்தை நிஷேதித்த உகாரத்தை விவரிக்கிறதாகில் பிறர்க்குரித்தன்றென்றத்தையும் விவரியாமல், தனக்குரியனன்றென்ற வித்தையே விவரிப்பானேனென்கிற ஶங்கையிலே யருளிச்செய்கிறார்,

(அக) பிறர்க்குரியனுமனவன்று தன் வைலக்ஷண்யத்தைக்காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்யதையுங் கூட வழியும்.

(அக) (பிறர்க்குரியனுனவன்று) என்று தொடங்கி. அதாவது, அந்யசேஷபூதனுனவன்று, சேஷத்வத்துக்கிசைகையாலே, அந்யரிற்காட்டில் தனக்குண்டான ஸர்வகாரணத்வ, ஸர்வரக்ஷகத்வ, ஸர்வசேஷத்வாதியான (வைலக்ஷண்யத்தைக் காட்டி) அந்நிலையில் நின்றும் (மீட்கலாம்.) (தனக்குரியன்) என்று நிற்குமன்று * "ஸ்வஸ்மை" "த்வம்மே" என்றால் * "அஹமஸ்மை" "அஹம்மே" என்னுமதொழிய சேஷத்வத்துக்கிசையாமையாலே, மீட்கைக்கு (யோக்யதையுங்கூட) இல்லையாய் விடுமென்கை.

[கஎ] திரு-வா-மொ-க-உ-க.

* பட்டர் ஶ்லோகம். த்வம்மேஹம்மேகுதஸ்தத்ததபிகுத இதம்வேதமூலப்ரமாணுதேதச்சாநாதிஸித்தாதநுபவவிபவாத்தர்ஹி ஸாக்ரோஶஏவக்வாக்ரோஶ:கஸ்ய கீதாதிஷு மம விதித:கோத்ர ஸாக்ஷீஸுதீஸ்ஸ்யாத் ஹந்த த்வத்பக்ஷபாதீஸ இதி ந்ருகலஹேம்ருக்யமத்யஸ்த்வதத்வம்.

இந் நமஸ்ஸால் செய்கிற அம்சந்தா னேதென்ன அருளிச் செய்கிறார்,

(அ௨) இத்தால் விரோதியைக் கழிக்கிறது.

(அ௨) ( இத்தால் விரோதியைக் கழிக்கிறது ) என்று. அதுதான் ஒன்றோ பலவோ வென்ன வருளிச்செய்கிறார்,

(அ௩) விரோதி தான் மூன்று.

(அ௩) ( விரோதிதான் மூன்று ) என்று. அம்மூன்றுந்தானேதென்ன வருளிச் செய்கிறார்,

(அ௪) அதாவது ஸ்வரூப விரோதியும், உபாய விரோதியும், ப்ராப்யவிரோதியும்.

(அ௪) (அதாவது, ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும,ப்ராப்யவிரோதியும்) என்று. இத்தால் ப்ரதமபதத்திற்சொன்ன ஸ்வரூபத்துக்கு விரோதியும் இப்பதத்திலார்த்தமாக ஸித்திக்கிற உபாயத்துக்கு விரோதியும் உத்தரபதத்திற் சொல்லுகிற ப்ராப்யத்துக்கு விரோதியு மென்கை. இந்நமஸ்ஸுதான், காகாக்ஷிந்யாயத்தாலே பூர்வோத்தரபதங்களிற் சொல்லுகிற ஸ்வரூபப்ராப்யங்களினுடைய விரோதிகளைக்கழிக்கக் கடவதாயிறேயிருப்பது.

இவ்விரோதித்ரயமும் கழிகையாவது தானேதென்ன, அது தன்னையடைவே யருளிச்செய்கிறார், மேல் மூன்று வாக்யத்தாலே.

(அ௫) ஸ்வரூபவிரோதி கழிகையாவது, "யானே நீயென்னுடைமையும் நீயே" என்றிருக்கை; உபாய விரோதி கழிகையாவது, "களைவாய் துன்பங்களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை; ப்ராப்யவிரோதி கழிகையாவது, "மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை.

(அ௫) (ஸ்வரூபவிரோதி) இத்யாதி. அதாவது ஸ்வரூபத்துக்கு விரோதி "யானே யென்றனதே" என்றிருக்கை யாகையாலே, அது கழிகையாவது [௫-அ] "யானே நீ யென்னுடைமையும்

[௫-அ] திரு-வா-மொ-௨-௯-௯

நீயே" என்று ஆத்மாத்மீயங்களிரண்டும் அத்தலைக்கு ப்ரகாரதயா சேஷமென்றிருக்கை யென்கை.

(உபாயவிரோதி) இத்யாதி. அதாவது, உபாயத்துக்கு விரோதி ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமாகையாலே அது கழிகையாவது [௩௯] "களைவாய் துன்பங் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று, து:கத்தைப்போக்குவாய் போக்காதொழிவாய் வேறொரு ரக்ஷகவஸ்துவையுடையேனல்லேன் என்றிருக்கை என்கை. (ப்ராப்யவிரோதி) இத்யாதி. அதாவது, ப்ராப்யத்துக்கு விரோதிஸ்வப்ரயோஜநபுத்தியாகையாலே, அது கழிகையாவது [௪0] "மற்றை நங்காமங்கள் மாற்று" என்று உன்னுகப்புக்குப் புறம்பான எங்களுடைய ஆசையைப்போக்கு என்றிருக்கை என்கை.

இப்படி ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்கள் மூன்றுக்கும் விரோதியாகிறது இவனுடைய அஹங்காரமமகாரங்களாகையாலே, அதினுடைய க்ரௌர்யத்தையும் தந்நிவ்ருத்தியிலுண்டான நன்மையையும் அருளிச் செய்கிறார்,

---

**(அரு) "ம:" என்கை ஸ்வரூபநாசம்; "நம:" என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்.**

---

(அரு) ("ம:" என்கை ஸ்வரூபநாசம், "நம:" என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்) என்று. அதாவது, "[illegible]" "சேதநஸ்ய யதா மம்யம் ஸ்வஸ்மிந் ஸ்வீயே ச வஸ்துநி । மம இதி த்வ்யக்ஷரத்வந்ததா மம்யஸ்ய வாசகம்" என்கிறபடியே, (ம:) என்கிற இதிலே அஹங்காரமமகாரங்கள் இரண்டுமுண்டாகையாலே அதிலே அந்விதனாகை யிவ்வாத்மாவினுடைய ஸ்வரூபத்துக்கு நாசம்; (நம:) என்று அதில் அந்வயமற்றிருக்கை ஸ்வரூபத்துக்கு உஜ்ஜீவநம் என்கை. * "[illegible]"

[௩௯] திருவாய்மொழி-௫-௮-௮. [௪0] திருப்பாவை-௨௯.

* பா-மோ-௧௪-௪- த்வ்யக்ஷரஸ்து ... மம, முக்தா ... [illegible] ... ஸ்பஷ்டா: [illegible]

ஓமிதி வ்யக்ஷரோ ப்ரஹ்மா நமேதி வ்யக்ஷரம் மமேதி வ ஶாஶ்வதம்" "த்வ்யக்ஷரஸ் துபவேந்ம்ருத்யுஸ்த்ர்யக்ஷரம் ப்ருஹ்மண: பதம்| மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர்நமமேதிச ஶாஶ்வதம்" என்னக்கடவதிறே.

இப்படி ஸ்வரூபோபாய புருஷார்த்த விரோதிகளைக் கழிக்கிற வளவன்றிக்கே, இந்நமஸ்ஸுதான் ஸ்வரூபாதித்ரயத்தையும் ப்ரகாஶிப்பிக்கும் என்கிறார்,

(அஎ) இதுதான் ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்.

(அஎ) (இதுதான் ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்) என்று.

இது தன்னை யுபபாதிக்கிறார் மேல் மூன்று வாக்யத்தாலே,

(அஅ) "தொலைவில்லி மங்கலந்தொழும்" என்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று; "வேங்கடத்துறைவார்க்கு நம:" என்கையாலே உபாயம் சொல்லிற்று; "அந்தி தொழுஞ்சொல்" என்கையாலே பலம் சொல்லிற்று.

(அஅ) (தொலைவில்லிமங்மலம்) இத்யாதி. அதாவது, [சக] "தொலைவில்லிமங்கலந்தொழும்" என்று, அவனுகந்தருளினநிலத்தளவும் செல்ல ஶேஷமாயிருக்கும் படியைச் சொல்லுகிறவளவில் "தொழும்" என்று நமஸ்காரத்தைச் சொல்லுகையாலே, (ஸ்வரூபம் சொல்லிற்று) என்கை. (வேங்கடத்து) இத்யாதி. அதாவது, [சஉ] "வேங்கடத் துறைவார்க்கு நம:" என்று திருவேங்கடமுடையானுக்கு ஶேஷம் நான் எனக்குரியனல்லேன் என்று, ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத ஸ்வரூப பாரதந்த்ர்யத்தைச் சொல்லுகையாலே, அவனை உபாயமென்னுமிடம் ஸித்திக்கையாலே (உபாயம் சொல்லிற்று.) என்கை. (அந்திதொழுஞ்சொல்) இத்யாதி. அதாவது, [சங] "அந்திதொழுஞ்சொல்" என்று தாஸ்யரஸமதிரூபித்தால், அதினுடைய சரமதஶையிலே சொல்லக்கடவ "தொழுஞ்சொல்" என்று, நமப்ப்ரயோகத்தைச் சொல்லுகையாலே (பலம் சொல்லிற்று) என்கை.

[சக] திரு- ா-கூ-ரு-க.

[சஉ] திருவா-கூ-கூ-க.   [சங] திருவா-கo-அ-எ.

இப்பதத்திலே ததீயஶேஷத்வமும் ஆர்த்தமாக வநுஸந்தேயமாகையாலே, அத்தையருளிச்செய்கிறார்,

(அகூ) " உற்றது முன்னடியார்க்கடிமை " என்கையாலே இதிலே பாகவதஶேஷத்வம் அநுஸந்தேயம்.

(அகூ) (உற்றதும்) என்று தொடங்கி. அதாவது, [சச] " நின்றிரு வெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க்கடிமை " என்று, திருமந்த்ரங்கற்றதால் " நானுற்றது முன்னடியார்க்கடிமை" என்னு மிவ்வர்த்தத்திலே என்கிறபடியே அஹங்காரமமகாரங்கள் நிவ்ருத்தமாய், பகவச்சேஷத்வம் உள்ளபடி ப்ரகாஶிக்கிற விந்நமஸ்ஸிலே, தத்காஷ்டையான (பாகவதஶேஷத்வமும்) அநுஸந்திக்கவேணுமென்கை.

இப்படி ஆர்த்தமாக அநுஸந்திக்கப்படும் பாகவதஶேஷத்வந்தான், இந்நமஸ்ஸிலன்றிக்கே ஸ்தலாந்தரங்களிலே சொல்லுவாருமுண்டாகையாலே, அத்தையருளிச்செய்கிறார்,

(கூ0) இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலேயென்றுஞ் சொல்லுவர்கள்.

(கூ0) (இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள், உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்) என்று. அதவாது, சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவச்சேஷத்வத்தைச்சொல்லுகையாலே, பகவச்சேஷத்வகாஷ்டையான இந்தபாகவதஶேஷத்வாநுஸந்தாநம் (அகாரத்திலே என்றும்) சிலர்சொல்லுவர்கள். அநந்யார்ஹஶேஷத்வத்துக்கெல்லை ததீயஶேஷத்வபர்யந்தமாக நிற்கையாலே, அநந்யார்ஹத்வப்ரதிபாதகமான (உகாரத்திலே என்றும்) சிலர் (சொல்லுவர்கள்) என்கை. ஆர்த்தமாகையாலே அவ்வோஸ்தலங்களிலும் சொல்லலாயிருந்ததேயாகிலும், கந்தல்கழிந்தவிடத்திலே சொல்லுகையே உசிதம் என்று கருத்து.

இந்நமஸ்ஸுக்கு பூர்வத்திற் பிறந்த ப்ரதிபத்தியைப் பற்ற இதிற் பிறந்த ப்ரதிபத்திக் குண்டான வாஸியை யருளிச்செய்கிறார்,

[சச] பெ- தி- மொ- அ- கO- ரு.

(௯௧) ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே அசித்தைப்போலே தனக்கேயாக எனைக் கொள்ளவேணு மென்கிறது நமஸ்ஸால்.

(௯௧) (ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்) என்று தொடங்கி. அதாவது, "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத:" "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத:" என்கிறபடியே, ஸ்வாதந்த்ர்யமே ஸ்வரூபமான ஈச்வரன் ஸ்வார்த்தபரனேயே இருக்கும்; சைதந்யரஹிதமாகையாலே தனக்கே என்கைக்கு யோக்யதை யன்றிக்கே, பாரதந்த்ர்யஸ்வரூபமாயிருக்கும் அசித்து பரார்த்தமாயே இருக்கும். சதுர்த்தியிற்சொன்ன சேஷத்வத்தையும் மகாரத்திற் சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தையும் உடையனான ஆத்மா ஜ்ஞாத்ருத்வபலத்தாலே ஸ்வார்த்ததைக்கும் சேஷத்வத்தாலே பரார்த்ததைக்கும் (பொதுவாயிருக்கும்) என்று நமஸ்ஸுக்கு பூர்வபதத்திற் பிறந்த ப்ரதிபத்தி; அப்படி யன்றிக்கே, பரார்த்ததைகவேஷமான (அசித்துப்போலே [௪௫] "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்கிறபடியே அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகங்கொள்ள வேணும் என்றபேக்ஷிக்கிறது இந்நமஸ்ஸாலே என்கை.

"தனக்கேயாக" என்றத்தை யுபபாதிக்கிறார்,

(௯௨) அதாவது போகதசையில் ஈச்வரனழிக்கும் போது நோக்கவேணும் என்றழியாதொழிகை.

(௯௨) (அதாவது) என்று தொடங்கி. இத்தால், அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகப்படுகையாவது தன்னோடே கலந்து பரிமாறுந் தசையில் போக்தாவான ஈச்வரன் [௪௬] "ஆட்கொள்வானொத்தென்

* ஸ்ரீகுணரத்நகோசம்—ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம் சந்த்ரவததே த்வதாச்லேஷாத்கர்ஷாத் பவதி கலு நிஷ்கர்ஷஸமயே த்வமாஸீர்மாதச்ச்ரீ: கமிதுரிதமித்தந்த்வமிபவம் ததந்தர்பாவாத்த்வாந்ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி.

[௪௫] திரு—வா-௨-௯-௪ [௪௬] திரு வா—௯—௯-௭

னுயிருண்டமாயன்"என்கிறபடியே, அடிமைகொள்வாரைப்போலே புகுந்து தன் வ்யாமோஹத்தாலே தாழநின்று பரிமாறி, இத்தலையில் போக்ஷத்வத்தை (அழிக்கும்போது) நம்போக்ஷத்வத்தை நாம் (நோக்கவேணும்)என்று நைச்யம்பாவித்திருந்து அவன் போகத்தை (அழியாதொழிகை) என்கை.

இப்படி இவனழிக்கைக்கு ஹேதுவென்னென்ன அருளிச்செய்கிறார்,

(கூகூ) அழிக்கைக்கு ஹேது கீழே சொல்லிற்று; மேலுஞ் சொல்லும்.

(கூகூ) (அழிக்கைக்கு ஹேது) என்று தொடங்கி. அதாவது, ஈஶ்வரன் மேல் விழுந்து விநியோகங் கொள்ளுகிறதசையிலே இவன் நைச்யம்பாவித்திருந்து, அவன் போகத்தை (அழிக்கைக்கு) ஹேது "போக்ஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்" என்கையாலே கீழே ப்ரணவத்திலே (சொல்லிற்று;) சதுர்த்தியிலே கிங்கரஸ்வபாவனுகைச் சொல்லுகையாலே மேலிற் பதத்திலும் (சொல்லும்) என்கை.

இனி இப்பாரதந்த்ர்யப்ரதிபத்தியினுடைய வைபவத்தைப்பலபடியாக அருளிச்செய்யா நின்றுகொண்டு இப்பதத்தை நிகமித்தருளுகிருர் மேல்,

(கூச)இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்; இந்நினைவில்லாதபோது எல்லா அக்ருதங்களும் க்ருதம்;இந்நினைவிலே எல்லாஸுக்ருதங்களுமுண்டு; இதின்றிக்கே இருக்கப் பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயஶ்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்; இது தன்னுலே எல்லாபாபங்களும் போம், எல்லாபலன்களும் உண்டாம்.

(கூச)(இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்) என்றது, [சரு]"தனக்கேயாக வெனைக்கொள்ளவேணும்" என்னும் இவ்வத்யந்தபாரதந்த்ர்யப்ரதிபத்தி (பிறந்தபோதே)தன்னுடைய ஹிதத்துக்

[சரு] திரு-வா-உ-கூ-ச.

கூடலாகச் செய்யவேண்டுவதெல்லாம் செய்து தலைகட்டினவ னென்கை.

(இந்நினைவில்லாதபோதுஎல்லாதுஷ்க்ருதங்களும் க்ருதம்)என்றது, இப்பாரதந்த்ர்யப்ரதிபத்தி(இல்லாதபோது) (௬) "கிம்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" "கிந்தேந நக்ருதம்பாபஞ் சோரேணாத்மாபஹாரிணு" என்கிறபடியே ஸகலதுஷ்க்ருதங்களும் இவனாலே செய்யப்பட்டதாய்விடும் என்கை.

(இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு)என்றது, இதுவுண்டாகவே எல்லாஸுக்ருதமும் பண்ணினால் பிறக்கும்ப்ரீதி ஈஶ்வரனுக்கு விளைகையாலே இந்தப்பாரதந்த்ர்யப்ரதிபத்தியிலே ஸகலஸுக்ருதமு முண்டு என்கை.

(இதின்றிக்கேஇருக்கப் பண்ணும் யஜ்ஞாதிகளும்ப்ராயஶ்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்) என்றது, இந்த பாரதந்த்ர்யப்ரதிபத்தி (இன்றிக்கேயிருக்க)ச்செய்தே ஈஶ்வரப்ரீணநார்த்தமாகஇவன்(பண்ணும்)யாகாதிகர்மங்களும் தன் பாபவிமோசநார்த்தமாகப் (பண்ணும்)க்ருச்ச்ரசாந்த்ராயணாதிகளாகிற(ப்ராயஶ்சித்தாதிகளும்) ஈஶ்வரப்ரீதிக்கும் ஸ்வபாபவிமோசநத்துக்கு முடலாகாமையாலே (நிஷ்ப்ரயோஜநங்கள்) என்கை.

(இது தன்னாலே எல்லாபாபங்களும் போம், எல்லா பலங்களும் உண்டாம்)என்றது, இந்தப் பாரதந்த்ர்யப்ரதிபத்தியாலே ஈஶ்வரன் இவனளவிலே அநுக்ரஹாதிஶயத்தைப் பண்ணுகையாலே அவனுடைய நிக்ரஹாத்மகமான ஸகல பாபங்களும்போம்; [௬௭] "உன்னை யார்க்கென் செய்வனென்றே யிருத்தி நீ" என்கிறபடியே இவனுக் கேகத்தைச் செய்வோமென்று மேன்மேலு முபகரிக்கையாலே ஸம்ஸாரநிவ்ருத்திதொடக்கமான கைங்கர்யப்ராப்திபர்யந்தமாக ஸகல (பலங்களும் உண்டாம்) என்கை.

ஆக மத்யமபதார்த்தத்தை யருளிச்செய்தாராயிற்று.

---

[௬] யோந்யதாஸந்த மாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே, கிந்தேந நக்ருதம் பாபஞ் சோரேணாத்மாபஹாரிணா.

(௬௭) பெ-திரு-அ-௫-௩.

அநந்தரம் நாராயணபதார்த்தத்தை யருளிச் செய்கிறார்,

(௬௫) நாராயணனென்றது நாரங்களுக்கு அயநமென்றபடி.

(௬௫) (நாராயணனென்றது) என்று தொடங்கி. அதாவது, நாராயணபதந்தான் "நாராணாம் அயநம் ய: ஸ: நாராயண:" என்றும் "நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண:" என்றும், தத்புருஷபஹுவ்ரீஹிரூபஸமாஸத்வயஸித்தமாகையாலே அதில் தத்புருஷனில் அர்த்தத்தை முந்துற வருளிச்செய்கிறார், (நாரங்களுக்கயநமென்றபடி) என்று.

நாரங்களாகிறவை தானெவையென்ன அருளிச்செய்கிறார்,

(௬௬) நாரங்களாவன நித்யவஸ்துக்களினுடைய திரள்.

(௬௬) (நாரங்களாவன நித்யவஸ்துக்களினுடையதிரள்) என்று. நாரபதம் "நர" என்றும் "நார" என்றும் "நாரா:" என்றுமாய் [ந] ரீங் க்ஷயே" "ரிங்க்ஷயே" என்கிறதாதுவிலே "ர" என்றுபதமாய்க்ஷயிக்கும்வஸ்துவைச்சொல்லி நகாரம் அத்தை நிஷேதித்து "நர" என்று க்ஷயமில்லாதநித்யவஸ்துவைக்காட்டி ஸமூஹார்த்தத்திலே அண்ப்ரத்யயமும் ஆதிவ்ருத்தியுமாய் "நார" என்று நித்யவஸ்து ஸமூஹத்தைச் சொல்லி "நாரா:" என்றுபஹுவசநமாகையாலே ஸமூஹபாஹுள்யத்தையுஞ்சொல்லுகையால் (நித்யவஸ்துக்களினுடையதிரள்) என்கிறார். இதில் (நித்ய) என்கையாலே நரபதார்த்தமும் (வஸ்துக்கள்) என்கையாலே நாரபதார்த்தமும் அவற்றினுடைய (திரள்) என்கையாலே பஹுவசநார்த்தமும் சொல்லப்பட்டதிறே.

தாத்ருஶங்களானவை தானெவையென்ன அருளிச்செய்கிறார்,

(௬௭) அவையாவன ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாநஶக்த்யாதிகளும், வாத்ஸல்யஸௌஶீல்யாதிகளும், திருமேனியும், காந்திஸௌகுமார்யாதிகளும், திவ்யபூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரியபிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்யஸூரிகளும், சத்ரசாமராதிகளும், திருவாசற்காக்கும்

முதலிகளும், கணாதிபரும், முக்தரும், பரமாகாஶமும், ப்ரக்ருதியும், பத்தாத்மாக்களும், காலமும், மஹதாதிவிகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக்குட்பட்ட தேவாதிபதார்த்தங்களும்.

---

(௧௭)(அவையாவன) என்று தொடங்கி. (ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள்) ஆவன, ஸ்வரூபநிரூபக தர்மங்கள். ஆதிஶப்தத்தாலே அநந்தத்வத்தைச் சொல்லுகிறது. (ஜ்ஞாநஶக்த்யாதிகள்) ஆவன, நிரூபிதஸ்வரூப விஶேஷணங்களான ஸமஸ்த கல்யாணகுணங்களுக்கும் ப்ரதாநமாயிருந்துள்ள ஜ்ஞாநஶக்திபலைஶ்வர்யவீர்யதேஜஸ்ஸுக்களாகிற ஷட்குணங்கள். (வாத்ஸல்ய ஸௌஶீல்யாதிகள்) ஆவன, அந்த ஷாட்குண்யாயத்தமான வாத்ஸல்ய ஸௌஶீல்ய ஸ்வாமித்வ ஸௌலப்யாத்யஸங்க்யேயகல்யாணகுணவிஶேஷங்கள். (திருமேனி) ஆவது, அஸாதாரணமான திவ்யமங்கள விக்ரஹம். ஏகவசநம் ஜாத்யபிப்ராயமாய் நித்யமான திவ்யவிக்ரஹத்தையும் ஐச்சிகமாகப் பரிக்ரஹிக்கும் விக்ரஹாந்தரங்களையும் சொல்லுகிறது; அல்லாதபோது ஒரே ஸமூஹமாக எண்ணிவருகிற ப்ரகரணத்துக்குச் சேராது. இதுதான் நடுவிற்றிருவீதிப்பிள்ளை பட்டர் ஆச்சான்பிள்ளை இவர்கள் அருளிச்செய்த ப்ரபந்தங்களிலே ஸுஸ்பஷ்டம். (காந்திஸௌகுமார்யாதிகள்) ஆவன, அந்த விக்ரஹகுணங்களான ஸௌந்தர்ய ஸௌகுமார்ய ஸௌகந்த்யலாவண்ய யௌவநாதிகள். (திவ்யபூஷணங்கள்) ஆவன, ஆபரணசூர்ணையிலே பாஷ்யகாரர் அருளிச்செய்தபடியே கிரீடாதிநூபுராந்தமான அத்திருமேனிக்குச்சாத்தும் அஸங்க்யேயமான திருவாபரணங்கள். (திவ்யாயுதங்கள்) ஆவன, அழகுக்கும் ஆஶ்ரிதவிரோதிநிரஸநத்துக்குமுடலாயிருந்துள்ள ஶங்கசக்ரகதாஶார்ங்காத்யஸங்க்யேயாயுதவிஶேஷங்கள். (பெரியபிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்) ஆவார் (௧) "ஶ்ரீ[illegible]நீளாநாயக" "ஶ்ரீவல்லப ஏவம்பூதபூமிநீளாநாயக" (௨) "தெவிகாஶந-நீளாபா

---

[௧] கத்யத்ரயம். ௧ [௨] ஸ்ரீகுணரத்நகோஶம்- போக்யாவாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்கராகைஸ்ஸமம் நிர்வ்ருத்தப்ரணயாதிவாஹநவிதௌ நீதா: பரீவாஹதாம் | தேவித்வாமநுநீலயா ஸஹ மஹீதேவ்யஸ்ஸஹஸ்ரந்ததா யாபிஸ்த்வம் ஸ்தநபாஹ-த்ருஷ்டிபிஸ்ஸர்வாபி: ப்ரியம் ப்லாவகே ஸ.

ஸஹ உஹீ தெவ்யஸஹஸ்ரா தயா" "தேவித்வா மநு லீயா ஸஹ மஹீ தேவ்யஸ்ஸஹஸ்ரந்ததா" என்கிறபடியே ப்ரதாநமஹிஷியான பெரிய பிராட்டியார் முதலாக தத்ஸமாநைகளான பூமிநீளைகளும் மற்றுமநேகர்களாகச்சொல்லப்படுகிறவர்களும். (க) "லக்ஷ்மீப்ரப்ருதி மஹிஷீவர்க்கங்களும்" என்றிறே ஆச்சான் பிள்ளையருளிச்செய்தது. (நித்யஸூரிகள்) ஆவார், அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளாயிருந்துள்ள அஸங்க்யேயரான ஸூரிஜநங்கள். (சத்ரசாமராதிகள்) ஆவன, கைங்கர்யோபகரணங்களான சத்ரசாமரதாலவ்ருந்த ப்ருங்கார பதத்க்ரஹாதிகள்.(திருவாசற்காக்கும்முதலிகள்) ஆவார், (உ)சண்ட ப்ரசண்டபத்ரஸுபத்ர ஜயவிஜயாதிகள்(.கணநிபர்) ஆவார், குமுத குமுதாக்ஷ புண்டரீகவாமந ஸங்குகர்ண ஸர்வநேத்ரஸுமுக ஸுப்ரதிஷ்டிதாதிகள். (முக்தர்) ஆவார்,[சஅ]"கரைகண்டோர்"என்கிறபடியே ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்பட்டு நித்யஸூரிகளோடு ஸமாநாகாரராய் நிகிலகைங்கர்ய நிரதராயிருக்கும் அஸங்க்யேயரான சேதநர். (பரமாகாஸம்) ஆவது,பஞ்சோபநிஷந்மயமான பரமபதம். இதுதான் பஞ்சோபநிஷந்மயமாகையாலே ஸமூஹாத்மகமாயிறே யிருப்பது. ஆகையால் ஸமூஹகணனைக்கு விரோதமில்லை.[க]"பஞ்சோபநிஷந்மயமாகையாலே, பரமபதமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்றிறே, ஆச்சான்பிள்ளை யருளிச்செய்தது.

ஆக (ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும்)என்று தொடங்கி, இவ்வளவும் ஸ்வரூபநிரூபகதர்மங்களையும், நிரூபிதஸ்வரூபவிஸேஷணங்களான கல்யாணகுணங்களையும், அக்குணங்களுக்கு ப்ரகாஸகமான திவ்யமங்களவிக்ரஹத்தையும், விக்ரஹகுணமான ஸௌந்தர்யாதிகளையும், அந்த ஸௌந்தர்யாதிகளோபாதி, பூத்தாப்போலே சாத்தின திவ்யாபரணங்களையும், அவ்வாபரணங்களோடு விகல்பிக்

---

[க] பரந்தர.

[உ] சண்டப்ரசண்டபத்ரஸுபத்ர ஜய விஜயாதிகள். சண்டப்ரசண்டௌ ப்ராக்த்வாரே யாம்யே பத்ரஸுபத்ரகௌ ! வாருண்யாஞ் ஜயவிஜயௌ ஸௌம்யே தாத்ருவிதாத்ருகௌ.

[சஅ] திரு-வா-அ-ந-கா.

க்ஷணம் படியான திவ்யாயுதங்களையும், இவையித்தனையும் காட்டிலெறித்தநிலாவாகாதபடி யருகே யிருந்தநுபவிக்கிற நாச்சிமாரையும், அச்சேர்த்தியிலே யடிமைசெய்கிற நித்யஸூரிகளையும், அவர்களுக்குக் கைங்கர்யோபகரணங்களான சத்ரசாமராதிகளையும், "இச்சேர்த்திக்கென் வருகிறதோ"வென்று வயிறெறிந்துநோக்கும் திருவாசற்காக்கும் முதலிகளையும், அப்படி மங்களாசாஸநபரராய்த் திருப்படைவீட்டுக்கடைய காவலாயிருக்கும் கணாதிபரையும், நிவ்ருத்தஸம்ஸாரராய் அவர்களோடொருகோர்வையாயடிமைசெய்கிற முக்தரையும், அவ்வடிமைக்கு வர்த்தகமான பரமபதத்தையும் அருளிச்செய்தாராயிற்று.

லீலாவிபூதியிலுள்ளவற்றை யருளிச்செய்கிறார் மேல். (ப்ரக்ருதி) ஆவது, குணத்ரயாத்மகதயா ஸமூஹாத்மிகையாயிருக்கும் மூலப்ரக்ருதி. (க) "குணத்ரயாத்மிகையாகையாலே மூலப்ரக்ருதியும் ஸமூஹாத்மிகையாயிருக்கும்" என்றிறே, இதற்கும் ஆச்சான் பிள்ளை யருளிச்செய்தது. (பத்தாத்மாக்கள்) ஆவார், உரைமெழுகிற்பொன்போலே, இப்ரக்ருதிக்குள்ளே உருபாய்ந்து கிடக்கிற வாத்மாக்கள். (காலம்) ஆவது, அஹோராத்ராதிவிபாகயுக்ததயா ஸமூஹாத்மகமாயிருக்கும் அசித்விசேஷம். (க) "அஹோராத்ராதிவிபாகங்கள் அநேகமாகையாலே, காலமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்றிறே, இதுக்கும் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்தது.

ஆக இவ்வளவும் ஸ்வரூபேண நித்யங்களான வஸ்துக்களைச் சொல்லிற்று.

மேல் ப்ரவாஹரூபேண நித்யங்களைச் சொல்லுகிறது. ஸ்வரூபேண நித்யத்வமாவது, ஸத்தானபதார்த்தத்தினுடைய வுத்பத்தி விநாசாத்யந்தாபாவம். ப்ரவாஹரூபேண நித்யத்வமாவது, உத்பத்திவிநாசயோகியாகா நிற்கச் செய்தேயும், பூர்வகாலத்திலுண்டான நாமரூபலிங்காதிகளுடைய அநந்யதாபாவம்.

இதில் (மஹதாதிவிகாரங்கள்) ஆவன, மஹத்தத்வந்தொடங்கி ப்ருதிவியளவாக வுண்டான இருபத்துமூன்றுதத்வமும். (அண்டங்கள்) ஆவன, இம்மஹதாதிகளாலே யாரப்தங்களாய்

(க) "அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச"

"அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச" என்கிறபடியே, அஸங்க்யேயமாயிருக்கிற அண்டவிசேஷங்கள். (அண்டத்துக்குட்பட்ட தேவாதிபதார்த்தங்கள்) ஆவன, அண்டாந்தர்வர்த்திகளான தேவமநுஷ்யதிர்யக்ஸ்தாவரங்கள்.

ஆக நாரபதார்த்தமருளிச்செய்தாராயிற்று.

மேல் அயநபதார்த்தத்தை யருளிச்செய்கிறார்,

---

(௬௮) அயநமென்றது இவற்றுக்காஶ்ரயமென்றபடி.

---

(௬௮) (அயநமென்றது இவற்றுக்காஶ்ரயமென்றபடி) என்று. அதாவது, அயநஶப்தம் ஆஶ்ரயவாசியாகையாலே (இவற்றுக்கு அயநமென்றது, (இவற்றுக்காஶ்ரய மென்றபடி) யென்கை.

பஹுவ்ரீஹி ஸமாஸார்த்தத்தை யருளிச்செய்கிறார்,

---

(௬௯) அங்ஙனன்றிக்கே யிவைதன்னையாஶ்ரயமாக வுடையனென்னவுமாம்.

---

(௬௯) (அங்ஙனன்றிக்கே யிவைதன்னை யாஶ்ரயமாக வுடையனென்னவுமாம்) என்று. அதாவது, இவற்றுக்காஶ்ரயமென்று, "தத்புருஷனாகச்சொல்லுகையன்றிக்கே, (இவைதன்னையாஶ்ரயமாகவுடையன்) என்று பஹுவ்ரீஹியாகச் சொல்லவுமாமென்கை. (இவற்றுக்காஶ்ரயம்) என்கிறவிடத்தில், குணங்களையும்சொல்லிற்றேயாகிலும், (இவைதன்னை யாஶ்ரயமாகவுடையன்) என்கிற விடத்தில், குணங்களையொழியச்சொல்லலேவேணும், அக்குணங்களுக்கு வ்யாப்யத்வம் சொல்லுமளவில் ஆத்மாஶ்ரயமும் அநவஸ்த்தையுமாகிற தோஷங்கள் வருகையாலே. "தன்குணங்களிலே ஈஶ்வரன் வ்யாபிக்கும்போது குணவிஶிஷ்டனாயே வ்யாபிக்கவேணும், நிர்க்குணமாய் வஸ்துவிராமையாலே; அப்போது, வ்யாப்யகுணங்களை வ்யாபககுணங்களாய்வ்யாபககுணங்களை வ்யாப்யகுணங்களாயநுகைபகா

---

[க] அண்டாநாந் து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச, சத்ருஶாநாந்ததா தத்ர கோடிகோடிஶதாநிச.

லே, ஆத்மாஶ்ரயதோஷமுண்டாம்; அதுக்குமேலே, தன்குணங்களிலே குணிவ்யாபிக்க வென்றுபுக்கால், ததாஶ்ரயமான குணங்களையும் குணி வ்யாபிக்கவேணும்; அந்த வ்யாபகனுடைய குணங்களையும், குணி வ்யாபிக்கவேணும். ஆகையாலே, அநவஸ்த்தாதுஸ்ஸ்த்தமாம்," என்று இதுதன்னை ஸுஸ்பஷ்டமாக ஆச்சான் பிள்ளையருளிச்செய்தாரிறே.

இவ்வுபயஸமாஸத்தாலும், பலிதாம்ஶத்தை யருளிச்செய்கிறார்,

(கoo) இவையிரண்டாலும் பலித்தது பரத்வஸௌலப்யங்கள்.

(கoo) (இவையிரண்டாலும்) என்று தொடங்கி. அதாவது, நாரங்களுக்கயநம், நாரங்களை அயநமாக வுடையவன் என்கிற, (இவை இரண்டாலும்) பலித்த அர்த்தம், தன்னையொழிந்த ஸமஸ்தவஸ்துக்களுக்கும், தான் ஆதாரமாயிருக்கையாகிற (பரத்வ)மும், இப்படி பெரியனான தான் ஸகலசேதநாசேதநங்களிலும் தன்னையமைத்துக்கொண்டு புக்கிருக்கையாகிற (ஸௌலப்ய)மும் என்கை.

இன்னமுமொரு ப்ரகாரத்தாலே இந்த ஸமாஸத்வயபலிதங்களை யருளிச்செய்கிறார்,

(கoக) அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம்.

(கoக) (அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம்) என்று. அதாவது, பஹுவ்ரீஹியும் தத்புருஷனுமாகிய உபயஸமாஸத்தாலும் பலித்தது அந்தர்யாமிப்ராஹ்மணாதிகளிற் சொல்லுகிறபடியே, அகிலசேதநாசேதநங்களிலும் அந்தராத்மதயாவஸ்த்திதனாய்க் கொண்டு நியந்தாவாயிருக்கையாகிற (அந்தர்யாமித்வமும்) (க)"ஈணுதளை" "இண்கதௌ" என்கிறதாதுவிலே பாதல் (உ)"அயமதௌ" "அயகதௌ" என்கிறதாதுவிலேயாதல் ஸித்தமான அயநபதத்தில் கரணவ்யுத்பத்தியாலும்கர்மணிவ்யுத்பத்

(க) தாதுபா-அதாதி-லுக்விகரணி.

(உ) தாதுபா-ப்வாதி-ஶப்விகரணி.

தியாலும்ப்ரகாசிதமான (உபாயத்வமும், உபேயத்வமுமாக வுமாம்) என்கை. பஹுவ்ரீஹிஸமாஸம் சொல்லுகிற விடத்தில், யோக்யதாநுகுணமாக நாரசப்தத்தை குணங்களையொழிந்த வஸ்துக்களுக்கு வாசகமாகக்கொண்டாப்போலே தத்புருஷஸமாஸத்திலும் அயநசப்தத்தை உபாயோபேயவாசியாகக் கொள்ளுமளவில் யோக்யதாநுகுணமாக நாரசப்தத்தை அசேதநங்களையொழிந்த சேதநவஸ்துக்களுக்கு வாசகமாகக்கொள்ளக்கடவது (௧) "நாராஸ்ஸ்வதிஷ்டஸம் ஸம்ஸாரஸம்ஹ: பரிகீர்த்யதே | கதிராலம்பநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத:" "நாராஸ்த்விதி ஸர்வபும்ஸாம் ஸமூஹ: பரிகத்யதே| கதிராலம்பநந் தஸ்ய தேநநாராயண ஸ்ஸ்ம்ருத:" என்றும் "நாராணாம் ஜீவாநாம் ஸம்ஹ: ப்ரோச்யதே பண்டிதை:| தேஷாமயநபூதத்வாந்நாராயண இஹோச்யதே" "நாராஸ்தே ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்ய தேபுதை:| தேஷாமயநபூதத்வாந்நாராயண இஹோச்யதே" என்றும் இத்யாதிகளிலே இவ்வர்த்தஞ் சொல்லப்படாநின்றதிறே.

கர்மணி வ்யுத்பத்தி ஸித்தமான ப்ராப்யத்வத்துக்கு ஸங்கோசமில்லாமையாலே ஸர்வப்ரகாரவிசிஷ்டமாயிருக்கையாலும், பந்துவாயும் ப்ராப்யமாயிருக்கையாலும், ஈச்வரனுடைய ஸர்வவித பந்துத்வமும் இப்பதத்திலே சொல்லும் படியை யருளிச்செய்கிறார்,

(௧௦௨) "எம்பிரானெந்தை" என்கையாலே ஈச்வரனே எல்லாவுறவுமுறையுமென்று சொல்லும்.

(௧௦௨) (எம்பிரான்) என்று தொடங்கி. அதாவது, நாராயணசப்தார்த்தத்தை யநுஸந்திக்கிற திருமங்கையாழ்வார் (௪௯) "எம்பிரானெந்தையென்னுடையச்சுற்றமெனக் கரசென்னுடைவாணாள்" என்கையாலே, ஈச்வரனே ஸர்வாத்மாக்களுக்கு ஸர்வவிதபந்துவுமென்று, இப்பதத்திலே சொல்லுமென்கை.

(௧) வாஸிஷ்டஸ்ம்ருதி . ௪௮.
(௪௯) பெ- தி. மொ- ௧. ௧. ௯.

இப்படி பந்துபூதனைக் கொண்டு, இத்தலைக்கவன் செய்யு மதேதென்ன வருளிச்செய்கிறார்,

(௧௦௩) நாம் பிறர்க்கானவன்றும் அவன் நமக்கா யிருக்கும்.

(௧௦௩) (நாம்பிறர்க்கானவன்றும், அவன் நமக்கா யிருக்கும்)என்று அதாவது,(நாம்) தன்னோடு ஒட்டற்று,(பிறர்க்கு) நல்லராயிருந்த காலத்திலும், (அவன் நமக்கு) நல்லன் (ஆயிருக்கும்) என்கை.

இப்படி நாம் அந்யபரரானவன்றும் நமக்கேயாயிருந்து அவன் செய்து போருமது தானேதென்ன அருளிச்செய்கிறார்,

(௧௦௪) இரா மடமூட்டுவாரைப் போலே யுள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போரும்.

(௧௦௪) (இராமடம்)என்று தொடங்கி. அதாவது,நேர்கொடுநேர் தங்கள் பக்கல் வந்து அபேக்ஷிதங்களை வாங்கி ஜீவியாதே துர்மானத்தாலே பட்டினியே திரியுமவர்களையும் விடமாட்டாமையாலே அசலறியாதபடி ராத்ரி மடத்திலே புஜிப்பிப்பாரைப்போலே தன் பக்கல் தலைசாயோம் என்று இச்சேதநர் ஸ்வாதந்த்ர்யம் மடித்துத் திரியாநிற்க, இவர்கள் கண்காணாதபடி அந்தராத்மாவாய்க்கொண்டு உள்ளே மறைந்திருந்து இவர்கள் (ஸத்தையே) தொடங்கி ரக்ஷித்துக்கொண்டு போரும் என்கை.

ஆக இந்நாராயணபதத்தாலே கைங்கர்யப்ரதிஸம்பந்தியான ஸர்வேச்வரன் படியை அருளிச்செய்தாராயிற்று.

இனி, இதில் விபக்த்யம்சத்தாலே கைங்கர்யத்தைப் ப்ரார்த்திக்கிறபடியை அருளிச்செய்கிறார்,

(௧௦௫) ஆயவென்கிற விபக்தியால் "சென்றாற்குடையாம்" என்கிறபடியே எல்லாவடிமைகளும் செய்ய வேணுமென்று அபேக்ஷிக்கிறது.

(௧௦௫) (ஆய என்கிற இத்தால்,)என்று தொடங்கி, அதாவது, (ஆயவென்கிற) இந்த சதுர்த்தியாலே (௫௦) "சென்றாற்குடையாம்"

(௫௦) க. ம் திரு. அந். ௫

என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வானைப் போலே ஸர்வவிதகைங்கர்யங்களும் (செய்யவேணுமென்று அபேக்ஷிக்கிறது) என்கை.

நமஸ்ஸாலே தனக்கென்னவொன்றைவிரும்புகைக்குப்ராப்தியில்லாத அத்யந்தபாரதந்த்ர்யம் சொல்லியிருக்க, இக்கைங்கர்யத்தைத் தான் விரும்பி அபேக்ஷிக்கை ஸம்பவியாதென்றிருக்குமவர்கள் பண்ணும் ப்ரஸங்கத்தை யநுவதிக்கிறார்,

(கoசு) நமஸ்ஸாலே தன்னோடுறவில்லை யென்று வைத்து கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ வென்னில்;

(கoசு) (நமஸ்ஸாலே தன்னோடுறவில்லையென்றுவைத்து கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோவென்னில்) என்று.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்,

(கoஎ) "படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே" யென்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்தனை வந்தேறி அன்று; ஸ்வரூபப்ரயுக்தம்.

(கoஎ) (படியாய்க்கிடந்து) என்று தொடங்கி. அதாவது, (ருக) "படியாய்க்கிடந்துன்பவளவாய்காண்பேனே" என்று, அத்யந்தபாரதந்த்ர்யத்தோடே கைங்கர்யப்ரார்த்தனையும் சொல்லுகிறபடியே, (கைங்கர்ய ப்ரார்த்தனை,) ஸ்வபோக்த்ருத்வரூபாஹங்காரப்ரயுக்தமாய்க்கொண்டு (வந்தேறி) ஆனது (அன்று,) சேஷிக்கதிசயத்தை விளைத்தல்லது தான் தரியாதபடியான தன்ஸ்வரூபத்தைப்பற்றி வந்ததென்கை.

உக்தத்தை ஹேதுவாகக்கொண்டு சதுர்த்தியின் கைங்கர்ய ப்ரார்த்தநாப்ரகாசகத்வத்தை அருளிச்செய்கிறார்,

(கoஅ) ஆகையால் "வழுவிலா வடிமை செய்ய வேண்டு நாம்" என்கிற ப்ரார்த்தனையைக்காட்டுகிறது.

(கoஅ) (ஆகையால்) என்று தொடங்கி. அதாவது, கைங்கர்யப்ரார்த்தனை வந்தேறி யன்றிக்கே, ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே,

(ருக) பெ-மாள்-திரு-ச-சு.

(ருஉ) "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்று, அடிமையி லொன்றும் நழுவாதபடி ஸகலகைங்கர்யங்களும்செய்யவேண்டுநாமெ ன்கிறப்ரார்த்தனையை,) இச்சதுர்த்தி ப்ரகாஶிப்பிக்கிற தென்கை.

இனி, இந்தகைங்கர்யப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கைக் குறுப்பான ப்ராப்யருசியுடையார்படியை அருளிச்செய்கிறார்,

(க0௯)"கண்ணாரக்கண்டு கழிவதோர்காதலுற்றார்க்கு முண்டோகண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே காண்ப தற்கு முன்பு உறக்கமில்லை. கண்டால்"ஸதா பஶ்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.

(க0௯) (கண்ணாரக்கண்டு) என்று தொடங்கி. அதாவது, (ருங) "இமையோர்கள் குழாங்தொழுவதுஞ்சூழ்வதுஞ்செய்தொல்லையாலை (கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதல்") என்று நித்யஸூரிகளுடைய திரளானது, நிரந்தரம் அநுபவம் பண்ணுகிற ஸர்வேஶ்வரனைக் கண்கள் நிறையும்படி, கண்டொழியக்கழியாதபடியானகாதலிலே நிலைநின்றவர்களுக்கும் கண்களுறங்குதலுண்டோ என்னுமாப்போலே, விஷயத்தைக்காண் பதற்கு முன்பு ஜ்ஞாநஸங்கோசரூபமான (உறக்கமில்லை,) கண்ட காலத்தில் * "ஸதாபஶ்யந்தி" என்கிறபடியே ஸதாநுபவம் பண் ணுகையாலே (உறக்கமில்லை) என்கை.

இன்னமும் ஒருஹேதுவாலே இவனுக்குறக்கமில்லாமையை அருளிச்செய்கிறார்,

(கக0) "பழுதே பலபகலும் போயின"வென்றுஇழ ந்தநாளுக்குக்கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை.

(கக0) (பழுதே) என்று தொடங்கி. அதாவது,(ருச) "செங்க ணடலோதவண்ணரடி அரவணைமேற் கண்டுதொழுதேன் (பலப கலும்) (பழுதே) (போயினவென்று) அழுதேன்" என்று, விஷயத் தைக் கண்டநுபவித்தவாறே இப்படி யநுபவிக்கைக்குடலான

(ருஉ) திரு-வா-ங-ங-க- (ருங) திருவிரு-கள.
* யஜு-ஷ-ஸ-கா-உ-ப்ர-உக. (ருச) க-ம்-திரு-அந்-கக.

அநேககாலமெல்லாம் வ்யர்த்தமே போய்விட்டதே என்று இழந்த நாளை நினைத்துக் க்லேசித்துக் (கூப்பிடுகிறவனுக்கு) மேலுள்ள நாளில் உறக்கம் வர வழியில்லை என்கை.

இன்னமும் இவ்விஷயத்தில் அறிவுபிறந்தார்க்கு மறக்கப்போகாதென்னுமத்தை இசைவிக்கிறார்,

(கககக) "அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்று நின்றார்களிறே.

(கககக) (அன்று நான்) என்று தொடங்கி: அதாவது, அவனென்னைப் பெறுகைக்காகத் திருப்பதிகளிலே, நிற்பது இருப்பது கிடப்பதாகாநிற்க, அக்காலத்தில் நான் ஜ்ஞாநலாபரூபமான ஜந்மத்தையுடையனாகப் பெற்றிலேன்; அந்த ஜந்மமுண்டான பின்பு அவனையொருக்காலும் (மறந்திலேன்) என்று சொல்லா நின்றார்களிறே, என்கை.

ஆக, ப்ராப்யவைலக்ஷண்ய ஜ்ஞாநம்பிறந்தார்படி யிதுவாகை யாலே இந்த கைங்கர்யப்ரார்த்தனை யிடைவிடாமல் நடக்கும் என்று கருத்து.

இனி, இக்கைங்கர்யத்துக்கு தேசகாலாதிநியமமில்லாமையை அருளிச்செய்கிறார்,

(ககஉ) இவ்வடிமைதான் "ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி" என்கிறபடியே ஸர்வதேசஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்.

(ககஉ) (இவ்வடிமைதான்) என்று தொடங்கி. அதாவது, இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமான இந்த கைங்கர்யந்தான் (ருரு) "ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி" என்று, "ஒழிவில்லாதகாலமெல்லாம் ஸர்வதேசத்திலும் (உடனாய்) ஸர்வாவஸ்தையிலும் பிரியாது நின்று" என்கிறபடியே, ஸர்வதேசத்திலும், ஸர்வகாலத்திலும், ஸர்வாவஸ்தையிலும் நடந்து செல்லும் என்கை.

(ருரு) திரு-வா-மொ-௩-௩-க.

பார்யைக்கு மங்களஸூத்ரதாரணம், பர்த்தாவுக்கு அநந்யார்ஹை என்று காட்டுமாபோலே, திருமந்த்ரதாரணம், சேதநர்க்கு பகவதநந்யார்ஹத்வப்ரகாஶகமென்னுமிடந்தோற்ற, இத்தையொரு மங்களஸூத்ரமாக நிரூபித்தருளிச்செய்கிறார்,

(௧௧௩) எட்டிழையாய் மூன்றுசரடா யிருப்ப தொரு மங்களஸூத்ரம்போலே திருமந்த்ரம்.

(௧௧௩) (எட்டிழையாய்) என்று தொடங்கி. அதாவது, பதினறிழையாய், இரண்டு சரடாயிருக்கும்லௌகிகமான மங்களஸூத்ரம் போலன்றிக்கே (எட்டிழையாய், மூன்று சரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே,) எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமாயிருக்கிற இத்திருமந்த்ரமென்கை.

இப்படி நிரூபித்துச்சொன்ன இத்தால் எவ்வர்த்தம் சொல்லுகிறதென்ன அருளிச்செய்கிறார்,

(௧௧௪) இத்தால் ஈஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது.

(௧௧௪) (இத்தால்) என்று தொடங்கி. அதாவது, இத்தை மங்கள ஸூத்ரமாகச் சொன்ன (இத்தால்) ஈஶ்வரன் இத்தொடங்கலுடைய (ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று) கொண்டு (ரக்ஷிக்கும்) என்று சொல்லுகிறதென்கை.

இனி, இம்மந்த்ரத்தால் ப்ரதிபாதித்த அர்த்தத்தை ஸங்க்ரஹித்துச்சொல்லி இத்தை நிகமித்தருளிகிறார்,

(௧௧௫) ஆக திருமந்த்ரத்தால் எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்குரியனன்றிக்கேயொழியவேணும்; ஸர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா வடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும் என்றதாயிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

திருமந்த்ர ப்ரகரணம் முற்றிற்று.

(௧௧௫) (ஆகதிருமந்த்ரத்தால்) என்று தொடங்கி. (ஆக) வென்றது, கீழ்பரக்க அருளிச் செய்த எல்லாவற்றையும் தொகுத்தருளிச் செய்கிறாரென்னுமிடந்தோற்ற.

(எம்பெருமானுக்கேயுரியேனான நான்) இதில் (எம்பெருமானுக்கே) என்று சதுர்த்யந்தமான ப்ரதமாக்ஷரத்தின் அர்த்தத்தையும், அவதாரணத்தாலே மத்யமாக்ஷரத்தின் அர்த்தத்தையும் (உரியேனான நான்) என்று த்ருதீயாக்ஷரத்தில் அர்த்தத்தையும்சொல்லுகையாலே, ப்ரதமபதார்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி. (எனக்குரியனன்றிக்கேயொழியவேணும்) இதில், (எனக்குரியன்) என்று ஷஷ்ட்யந்தமான மகாரார்த்தத்தையும் (அன்றிக்கேயொழிய) என்கையாலே, நகாரார்த்தத்தையும் (வேணும்) என்கையாலே, இவ்வர்த்தம் சேதநனுக்கு ப்ரார்த்தநீயமென்னுமத்தையும் ப்ரதிபாதிக்கையாலே மத்யமபதார்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி. (ஸர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும்) இதில் (ஸர்வஶேஷியான நாராயணனுக்கே) என்று கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியையும், கைங்கர்ய ப்ரார்த்தநாப்ரகாஶிகையான சதுர்த்தியையும் (எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும்) என்று கைங்கர்யப்ரார்த்தநாப்ரகாரத்தையும் சொல்லுகையாலே த்ருதீயபதார்த்தத்தை ஸங்க்ரஹித்தபடி. (என்றதாயிற்று) என்றது என்றுசொல்லிற்றாயிற்றென்கை.

விஸ்தரேண அருளிச்செய்ததை மீளவும் இப்படி ஸங்க்ரஹித்தருளிச்செய்தது இத்திருமந்த்ரார்த்தத்தை எல்லாருமறிந்தநுஸந்திக்கைக்காக. ஆகையாலே யெல்லார்க்கும் இவ்வர்த்தம் எப்போதும் அநுஸந்தேயம்.

திருமந்த்ரப்ரகரணம் முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# த்வயப்ரகரணம் அவதாரிகை.



ப்ரதமரஹஸ்யமான திருமந்த்ரத்திநுடைய அர்த்தத்தை அருளிச்செய்த அநந்தரம், அதில்மத்யமபதத்தாலும், த்ருதீய பதத்தாலும் ப்ரதிபாதிக்கப்பட்ட உபாயோபேயங்களை விசுதமாக ப்ரதிபாதியாநின்றுள்ள த்வயத்திநுடைய அர்த்தத்தை அருளிச்செய்கிறார்.

முன்பருளிச்செய்த மூன்று ப்ரபந்தத்திலும், திருமந்த்ராநந்தரம் சரமச்லோகத்தை அருளிச்செய்து, பின்பு த்வயத்தை யருளிச்செய்தவர் இப்போது த்வயத்தை முந்தற அருளிச்செய்வானென்னென்னில், இரண்டு ப்ரகாரமுமருளிச்செய்பலா யிருக்கையாலே. ஆச்சான்பிள்ளை ஜீயர் முதலானோரும், இந்தப்ரகாரமிறே, அருளிச்செய்தது.

இவ்விரண்டு ப்ரகாரந்தனக்கும் கருத்தென்னென்னில், சரமச்லோகம் முன்னாகத்வயத்தைச் சொல்லுகிறது - விதத்யநுஷ்டாநரூபங்களாயிருக்கையாலே, விதிமுன்னாக அநுஷ்டாநத்தைச் சொல்லுகை ப்ராப்தமாகையாலும், திருமந்த்ரம் ப்ராப்யபரமாய், த்வயம் உபயத்திநுடையவும் அநுஷ்டாந ப்ரதிபாதகமாயிருக்கையாலும்.

த்வயம்முன்னாக சரமச்லோகத்தைச்சொல்லுகிறது - திருமந்த்ரத்தில் மத்யமத்ருதீயபதங்களுக்கு வாக்யத்வயம் விவரணமாய், அதுதனக்கு சரமச்லோகத்தில் அர்த்தத்வயம் விவரணமாயிருக்குமாகாரத்தாலே. ஆனபின்பு இரண்டுப்ரகாரமும் அநுஸந்திக்கத் தட்டில்லை.

அதிலொரு ப்ரகாரத்தை மூன்று ப்ரபந்தத்திலும் அருளிச்செய்தவராகையாலே, மற்றைப்ரகாரத்தையும் அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றி திருமந்த்ரார்த்தம் அருளிச்செய்தவநந்தரம், த்வயார்த்தத்தை யருளுச்செய்கிறார்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முமுக்ஷுப்படி வ்யாக்யாநம்.

## த்வய ப்ரகரணம்.

—•○✻○•—

அவ—அதில் ப்ரதமத்திலே வைஷ்ணவனாயிருப்பானொருவனுக்கு ஸ்வாதிகாரார்த்தமாக அவஶ்யாபேக்ஷிதமாயுள்ளவற்றை, ஸங்க்ரஹமாக அருளிச்செய்கிறார்—(புறம்புண்டான பற்றுக்களையுடைய வாஸனையோடே விடுகை) என்று தொடங்கி ஒரு சூர்ணையாலே.

---

மூ—(க.) புறம்புண்டான பற்றுக்களையுடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்ஜமென்று பற்றுகையும்,

---

வ்யா—(க.) (புறம்புண்டான பற்றுக்களையுடைய வாஸனையோடே விடுகை) ஆவது *(பிதரம்மாதரம்தாராந்) இத்யாதிப்படியே, பாஹ்ய விஷயஸங்கங்களையுடைய மறுவலிடாதபடி ஸவாஸநமாக விடுகை.

(எம்பெருமானையே தஞ்ஜமென்று பற்றுகை) ஆவது, வேறொன்று தஞ்ஜமென்கிற நினைவு கலஶாதபடி, நிருபாதிகரக்ஷகனான ஸர்வேஶ்வரனையே தஞ்ஜமாக ஸ்வீகரிக்கை.

இவ்விரண்டு வாக்யத்தாலும், சரமஶ்லோகத்தில் பூர்வார்த்தத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம். எங்ஙனேயென்னில், 'புறம்புண்டான பற்றுக்களையுடைய' என்று [ஸர்வதர்மாந்] என்கிறபதத்தில் அர்த்தத்தையும் 'வாஸனையோடே விடுகையும்' என்று, [பரித்யஜ்ய] என்கிறபதத்தில் அர்த்தத்தையும், 'ஏ' என்று ஏவகாரத்தாலே [ஏக] பதத்தில் அர்த்தத்தையும், 'தஞ்சம்' என்கை

---

* விஹகே-ஶ்வர ஸம்ஹி 22. படலம், பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந்। ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச ॥ ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந்। லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ ॥

யாலே [ஶரண] பதத்தில் அர்த்தத்தையும், 'பற்றுகையும்' என்று, [வ்ரஜ] பதத்தில் அர்த்தத்தையும் அடைவே சொல்லுகையாலே.

மூ—(1.) பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்குத்வரிக்கையும்,

வ்யா—(1.) (பேறுதப்பாதென்று துணிந்திருக்கை) ஆவது, உபாயபல்குத்வமும், உத்தேஶ்யதுர்லபத்வமும், ஸ்வக்ருததோஷ பூயஸ்த்வமும் அடியாகவரும் ஶங்காத்ரயமுமின்றிக்கே, பலந்தப்பாமல் ஸித்திக்குமென்று விஶ்வஸித்திருக்கை.

(பேற்றுக்குத்வரிக்கை) யாவது, இப்படி விஶ்வஸித்துப் பேறு ஸித்தித்தபோது காண்கிறோமென்றிருக்கையன்றிக்கே, (௩௬) "மாகவைகுந்தங் காண்பதற்கென் மனமேகமெண்ணும்" (௩எ) "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ" என்கிறபடியே, க்ரமப்ராப்திபற்றுமற் பதறுகை. ஆக இவை இரண்டாலும் உபாயோபேயாதிகாராபேக்ஷிதங்களான மஹாவிஶ்வாஸத்தையும், ப்ராப்யத்வரையையும் சொல்லுகிறது.

மூ—(2.) இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய், குணாநுபவ கைங்கர்யங்களே பொழுதுபோக்காகையும், இப்படி இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும்,

வ்யா—(2.) (இருக்கும் நாளுகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே பொழுதுபோக்காகை) ஆவது, பரமபதத்திலேபோய் பகவதநுபவகைங்கர்யங்களைப் பண்ணுகையாகிறபேற்றில்த்வரை நடவாநிற்கச்செய்தேயும், இஶ் ஶரீரத்தோடே இருக்கும்நாள் (௩அ) "தானுகந்தவூர்" என்கிறபடியே, ஸர்வேஶ்வரனுகந்துவர்த்திக்கிற திவ்ய தேஶங்களிலே, (௩௬) "கண்டியூரரங்கமெய்யங்கச்சிபேர்மல்லை" என்று மண்டுகையாகிற ப்ராவண்யத்தையுடையனாய், அவ்வோதிவ்யதேஶங்களிலே நிற்கிறவனுடைய கல்யாண குணாநுபவமும், அதடியாகக் கரணத்ரயத்தாலும், அவன் விஷயத்திற்பண்ணுங் கைங்கர்யமுமே காலக்ஷேபவிஷயமாம்படியிருக்கை.

(இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றம் அறிந்து உகந்திருக்கை) ஆவது, கீழ்ச்சொன்ன இவ்வாகாரங்களெல்லாமுடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், இந்தகாலத்திலே தாமரைபூத்தாப்போலே இந்தவிபூதியிலே இங்ஙனேயுஞ்சிலருண்டாவதே! என்று அவர்கள் வைபவத்தையறிந்து அவர்கள் அளவில் ப்ரீதியுக்தனாயிருக்கை. கீழ்ச்சொன்னவை யெல்லாமுண்டானாலும் உண்டாக வரிதாயிருப்பதொன்றிறே யிது.

---

மூ—(3.) திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும்,

---

வ்யா—(3.) (திருமந்த்ரத்திலும் த்வயத்திலும்நியதனாகை) ஆவது, மந்த்ராந்தரங்களினுடைய வருகுமறந்தும்போகாதே த்யாஜ்யோபாதேயங்களைத் தெளியவறிவிக்குந் திருமந்த்ரத்திலும், அதின் அர்த்தத்துக்கு விவரணமானத்வயத்திலும் நிஷ்டனாயிருக்கை.

(ஆசார்யப்ரேமம்கனத்திருக்கை) ஆவது, கீழ்ச்சொன்ன ஆகாரத்தையெல்லாம் உபதேசத்தாலேதனக்குண்டாக்கின ஆசார்யவிஷயத்தில்,*"யஸ்ய தேவே பராபக்திர் யதா தேவே ததா குரௌ" என்கிறபடியே, ப்ரேமம் அதிசயித்திருக்கை.

(ஆசார்யன்பக்கலிலும், எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப்போருகை) ஆவது, நித்யஸம்ஸாரியான தன்னை நித்யஸூரிகள் பேற்றுக்காளாம்படி, இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே திருத்தின ஆசார்யன் பக்கலிலும், அத்மவஸ்துவை [illegible]த்துக்கொண்டுவந்து, ஆசார்யவிஷயத்தோடேசேர்த்த எம்பெருமான் பக்கலிலும், உபகாரஸ்ம்ருதியுடையனாய்ப்போருகை.

---

மூ—(4.) ஜ்ஞாநமும், விரக்தியும், ஸாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும், வைஷ்ணவாதிகாரிக்கவஸ்யாபேக்ஷிதம்.

---

* ஸ்வே-உப. சு-உஉ."தஸ்யைதே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:" என்றுத்தரார்த்தம்.

வ்யா—(4.) (ஜ்ஞாநமும், விரக்தியும், சாந்தியுமுடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம்பண்ணுகை) ஆவது, தான் கலங்கினாலும் கலங்காமல் நோக்குகைக் குறுப்பாகவும் கீழ்ச்சொன்ன ஆகாரங்கள் தனக்குவர்த்திக்கைக்குறுப்பாகவும், தத்த்வ யாதாத்ம்ய ஜ்ஞாநமும், அப்ராப்தவிஷய விரக்தியும் இவைதானிரண்டும் நமக்குண்டென்று இறுமாப்பற்றிருக்கையாகிற ஶாந்தியுமுடையனாயிருக்கும்பரம ஸத்வநிஷ்டனாயிருப்பானொருபாகவதனோடேகூட வஸித்துப்போருகை.

(வைஷ்ணவாதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதம்) என்றது, இவையித்தனையும் வைஷ்ணவனென்றிருப்பானொரு அதிகாரிக்கு அவஶ்யமுண்டாகவேணுமென்கை,

(உ) இப்படியிருக்கும் இவனுக்கு அநுஸந்தாந விஷயம் வகுத்தருளிச்செய்கிறார்மேல், (இந்த) என்றுதொடங்கி.

---

ஸூ—(உ) இந்த வதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தேயம்.

---

வ்யா—அதாவது கீழ்ச்சொன்ன ஆகாரங்களை யுடையனாயிருக்கும் இவ் வதிகாரிக்கு, அந்த ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கு வர்த்தகமான ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தாந விஷயமாகவேணுமென்கை.

(ங) இனி, த்வயத்திற் சொல்லுகிற அர்த்தத்தின் வீறுடைமையை யறிவிக்கைக்காக ஶாஸ்த்ரம், திருமந்த்ரம், சரமஶ்லோகம், இவற்றிற்சொல்லுகிற ப்ரகாரங்களை அருளிச்செய்துகொண்டு சென்று, பின்னையது தன்னை அருளிச்செய்கிறார், (எல்லா ப்ரமாணங்களிலும்) என்றுதொடங்கி.

---

ஸூ—(ங.) எல்லாப்ரமாணங்களிலும் தேஹந்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஶ்லோகத்தில் ஈஶ்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரியபிராட்டியாராலே பேறென்கிறது.

---

வ்யா—அதாவது. சேதநனுடைய விஶிஷ்டவேஷத்திலே நோக்கான ஸகல ஶாஸ்த்ரங்களிலும், ஸாதநாநுஷ்டாநயோக்யமான தேஹத்தாலே இவனுக்கு புருஷார்த்தலாபம் என்கிறது. நிஷ்க்ருஷ்டவேஷத்திலே நோக்கான திருமந்த்ரத்தில், இவன் ஸ்வரக்ஷணத்தில்

கின்றும் கைவாங்கினலொழிய ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வஞ் ஜீவியாமையாலே, தத்ப்ரவ்ருத்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியைவிட்டிருக்கும் ஆத்மாவாலே புருஷார்த்தலாபம் என்கிறது.

ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கான சரமஶ்லோகத்தில், இவனுடைய ஸ்வீகாரமும் மிகையாம்படி, தானே கைக்கொண்டு, ப்ராப்திப்ரதிபந்தக ஸகலபாபங்களையும் தள்ளிப்போகட்டு, தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளும் ஈஶ்வரனாலே புருஷார்த்த லாபம் என்கிறது. ஈஶ்வரனுடைய லக்ஷ்மீவிஶிஷ்டவேஷத்திலே நோக்கான த்வயத்தில், விஶேஷணபூதையான பெரிய பிராட்டியாராலே புருஷார்த்தலாபமென்கிறதென்கை.

(௯) உபாயம் ஈஶ்வரனாயிருக்க, இவளாலே பேறுகையாவதென்னென்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார், (பெரிய பிராட்டியாராலே) என்றுதொடங்கி.

---

மூ—(௯) பெரிய பிராட்டியாராலே பேறுகையாவது இவள் புருஷகாரமாக லல்லது ஈஶ்வரன்கார்யஞ் செய்யானென்கை.

---

வ்யா—அதாவது, இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரங்கள் இரண்டும் பண்ணுவான் ஈஶ்வரனேயாயிருக்க, பெரிய பிராட்டியாராலே இவனுக்குப் பேறுகை ஆகிறது, இவனுடைய வபராதத்தைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் புருஷகாரமானல் ஒழிய, ஈஶ்வரன் இவன் கார்யஞ்செய்யான் என்றபடி என்கை.

(௱) கீழ், ஸாமாந்யத்திலே வைஷ்ணவாதிகாரிக்கு அபேக்ஷிதங்களிறே, சொல்லிற்று; விஶேஷித்து த்வயத்துக் கதிகாரியாமவனுக்கு அபேக்ஷிதத்தை அருளிச்செய்கிறார், (த்வயத்துக்கு) என்று தொடங்கி

---

மூ—(௱) த்வயத்துக்கதிகாரி, ஆகிஞ்சந்யமும், அநந்யகதித்வமுமுடையவன்.

---

வ்யா—அதாவது, ஸித்தோபாயவரண ப்ரதிபாதகமான த்வயத்துக்கதிகாரி * அகிஞ்சநோகதி: த்வமேவோபாய பூதோமேபவ" † "அகிஞ்சநோநந்யகதிஶ்ஶரண்ய" என்றும், (௬௦) "புகலொன்

---

* அஹி ஸம்ஹிதை ௩௭-௩௱. † ஸ்தோ-௨௨.

நில்லாவடியேன்" என்றும் சொல்லுகிறபடியே ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமும் ஆகிற விரண்டும் உடையவன் என்கை.

அவ—(கூ) இவையிரண்டின் வேஷமுந் தானெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார், (இவை யிரண்டும்) என்றுதொடங்கி.

---

மூ—(கூ) இவை இரண்டும் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்.

---

வ்யா—அதாவது, உபாயாந்தர ராஹித்யமாகிற ஆகிஞ்சந்யத்தின்வேஷமும், ரக்ஷகாந்தர ராஹித்யமாகிற அநந்யகதித்வத்தின் வேஷமும், ப்ரபந்நபரித்ராணமாகிறப்ரபந்தத்திலே ஸுஸ்பஷ்டமாகச் சொன்னோம், அதிலே கண்டுகொள்வது என்கை.

(எ) இனி, த்வயத்துக்கு வாக்யார்த்தம் அருளிச்செய்கிறார், (இதில் முற்கூற்றால்) என்று தொடங்கி,

---

மூ—(எ) இதில் முற்கூற்றால், பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈஸ்வரன் திருவடிகளை யுபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால், அச்சேர்த்தியிலே அடிமையிரக்கிறது.

---

வ்யா—அதாவது, இந்தத்வயத்தில் பூர்வகண்டத்தாலே 'ஸ்ரீமத்' என்று பெரிய பிராட்டியாரை முன்னிட்டு, 'நாராயணசரணௌ' என்று ஈஸ்வரன் திருவடிகளை, 'ஶரணம் ப்ரபத்யே' என்று உபாயமாகப் பற்றுகிறது. உத்தரகண்டத்தாலே 'ஸ்ரீமதே' என்று, பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே, 'நாராயணாய' என்கிற சதுர்த்தியாலே கைங்கர்யத்தை யர்த்திக்கிறது என்கை. 'நமஸ்ஸு' கைங்கர்ய விரோதி நிவ்ருத்தி ப்ரதிபாதகமாகையாலே, அடிமையை இரக்கிறது என்றவிதிலே அந்தர்ப்பூதம்.

(அ) இனி, ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ஸ்ரீமத்பதார்த்தம் அருளிச்செய்ய உபக்ரமிக்கிறார், (ஸ்ரீ என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம்)என்று.

---

மூ—(அ) ஸ்ரீ என்று பெரிய பிராட்டியாருக்குத் திருநாமம்.

வ்யா—ஸ்ரீஸப்தம், ஸம்பதாதிகளுக்கும் வாசகமாகலோகத்திலே நடந்துபோரக் காண்கையாலே, அதை வ்யாவர்த்திக்கைக்காக 'ஸ்ரீ' என்கிறவிது பெரியபிராட்டியார்க்குத் திருநாமம் என்கிறார். ஆகையிறே,*(லக்ஷ்மீ:பத்மாலயா பத்மாகமலா ஸ்ரீர் ஹரிப்ரியா) என்று, திருநாமங்களோடே ஸஹபடிதமாயிற்று. இதுதான் எல்லாத்திருநாமங்கள்போலன்றிக்கே, " ஸ்ரீரிதிப்ரதமம்நாமலக்ஷ்ம்யா: " என்கிறபடியே, இவளுக்கு ப்ரதமாபிதாநமாயிருக்கும். ¶ " அஇதிபகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநம்" என்று, அகாரம் ஈஸ்வரனுக்கு ப்ரதமாபிதாநமானாப்போலே யாயிற்று, இவளுக்கும் ப்ரதமாபிதாநமாயிருக்கும்படி. அது, அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு ஏகாந்தமான ஸ்வபாவங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும், இது, இவளுடைய புருஷகாரத்வத்துக்கு ஏகாந்தமான ஸ்வபாவங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும்.

அவ—(கூ) இனி, இந்த ஸ்ரீஸப்தத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக ப்ரதமம் இதின்மேல் வந்த வ்யுத்பத்தித்வயத்தை அருளிச்செய்கிறார், (ஸ்ரீயதே, ஸ்ரயதே)என்று.

---

மூ—(கூ) ஸ்ரீயதே,ஸ்ரயதே.

---

அதாவது, † (ஸ்ரீஞ் ஸேவாயாம்)என்கிற தாதுவிலே, (ஸ்ரீயத இதிஸ்ரீ: ஸ்ரயத இதி ஸ்ரீ:) என்று ஸித்தமான கர்மணிவ்யுத்பத்தியையும், கர்த்தரிவ்யுத்பத்தியையும் சொன்னபடி.

அவ—(கo) இவ்யுத்பத்தித்வயத்துக்கும், அர்த்தம் அருளிச்செய்கிறார், (இதுக்கர்த்தம்) என்று தொடங்கி.

---

மூ—(கo) இதுக்கர்த்தம் எல்லார்க்கு மிவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய் இவள் தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கும் என்று.

---

வ்யா—அதாவது, இவ்வுபயவ்யுத்பத்திக்கும் அர்த்தம், (ஸ்ரீயதே)என்று, எல்லாராலும் ஸேவிக்கப்படாநின்றாள் என்கையாலே, ஸகலசேதநர்க்கும் இவளைப்பற்றித் தங்களுடைய ஶேஷத்வரூப

---

* அமர-கா-கா - க-க - வ- ஸ்லோ-உஎ.

¶ மஹாபாஷ்ய வ்யாக்யாநம். ‡ தா - ப்வாதி -ஸ.

ஸ்வரூபலாபமாய், (ஶ்ரயதே) என்று, ஈஶ்வரனை ஸேவியாநின்றாள் என்கையாலே, இவள் தனக்கும் ஈஶ்வரனைப்பற்றி த்தன்னுடைய ஸ்வரூபலாபமாயிருக்கும் என்று என்கை. இவள் தனக்கு, சேதந விஷயத்தில் ஶேஷித்வமும், ஈஶ்வரவிஷயத்தில் ஶேஷத்வமும் என்று முண்டாயிறே யிருப்பது. ஆகையால், இந்த ஸேவ்யத்வ ஸேவகத்வங்கள் இரண்டும் இவளுக்கு நித்யமாய்ச் செல்லாநிற்கும்.

அவ. (கO) ஈஶ்வரனுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற ஆகாரத்வயம் உண்டானாற்போலே, இவளுக்கும் புருஷகாரத்வமும் ப்ராப்யத்வமுமாகிற ஆகாரத்வயமும் உண்டாகையாலே, இதில் எவ்வாகாரத்தை நினைத்து இவளை இப்போது சொல்லுகிறதென்ன அருளிச்செய்கிறார், (இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக) என்று.

---

(நO) இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.

---

(புருஷகாரமாக) என்கையாலே, உபாயவஸ்து விஶேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு, இவளுக்கும் உபாயத்வத்தில் அந்வயஞ் சொல்லும்பக்ஷம் நிரஸ்தம்.

அவ. (கக) ஈஶ்வரனுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தாதி ஜ்ஞாநத்தையுடையனாய்க்கொண்டு, அவனையாஶ்ரயிக்கிற விச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிட வேண்டுகிறதுதானென்னென்ன வருளிச்செய்கிறார், (நீரிலே) என்று தொடங்கி.

---

(நக) நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம்பிறந்தால் பொறுப்பதிவளுக்காக.

---

அதாவது, ஶீதளமான ஜலத்திலே சென்றனுகவொண்ணாதபடியான நெருப்புக் கிளருமாபோலே, * (ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்) † (ஸமோஹம் ஸர்வபூதேஷு) என்கிறபடியே, ஸர்வபூத ஸுஹ்ருத்வம் ஸமாஶ்ரயணீயத்வே ஸமத்வமாகிற ஸ்வபாவவிஶே

---

* ஸ்ரீகீதை - டு-உக. † ஸ்ரீகீதை - கூ-உகூ.

ஷங்களாலேப்ரஸந்நமாய்,குளிர்ந்திருக்கிற திருவுள்ளத்திலே, *(பரிபூர்ணகலி ஜநே ஹிதஸ்ரோதோ வர்த்யாபவதிச கதாசித்கலுஷதீ:) என்கிறபடியே, சேதநன் நிரக்கழியப்பண்ணின அபராதமடியாக †(க்ஷிபாமி) ‡(நக்ஷமாமி) என்னும்படியான சீற்றம்பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது *(கிமேதந்நிர்த்தோஷக இஹஜகதி) இத்யாதிப்படியே தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சீற்றத்தை யாற்றி, தயையைஜநிப்பிக்கும் இவளுக்காக என்கை. ஆகையாலே, ஸம்பந்தஜ்ஞாநம் பிறந்தவனுக்கும் அபராத பயத்தாலே புருஷகாரபுரஸ்கரணம் அபேக்ஷிதமென்று கருத்து.

அவ. (கஉ) இத்தலையிற் கார்யமேறிட்டுக்கொண்டும், அத்தலையை வசீகரித்தும், இரண்டுதலையையும் பொருத்துகைக்கு, இவள்தான் கண்ணழிவற்ற புருஷகாரமோவென்ன அருளிச்செய்கிறார்; (இவள் தாயாய்) என்றுதொடங்கி,

---

(கஉ) இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்.

---

அதாவது, ¶(த்வம் மாதா ஸர்வலோகாநாம்) என்றும், =(அகிலஜகந்மாதரம்) என்றும் சொல்லுகிறபடியே, இச்சேதநர்க்கு இவள் மாதாவாய், (சா ௩) "தந்தம்மக்களழுது சென்றால்தாய்மாராவார் தரிக்ககில்லார்" என்கிறபடியே, அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய க்லேசங் கண்டால் ஸஹிக்கமாட்டாதே, ○(விஷ்ணுபத்நீ) என்கிறபடியே அவனுக்கு பத்நியாய், (சா உ) "பித்தர்பனிமலர் மேற்பாவைக்கு" என்கிறபடியே, அவன் தன்னைலக்ஷ்யத்தைக் கண்டு பிச்சேறித் தன்சொல்வழி நடக்கும்படி அபிமதவிஷயமாயிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம் என்கை.

அவ. (கங) எல்லாஞ்செய்தாலும், நிரங்குசஸ்வதந்த்ரனான ஈச்வரன், சேதநருடைய அபராதங்களை நிறுத்துநிறுத்துத் தீர்த்துவன்

---

* ஸ்ரீ - கு - நிஉ. † ஸ்ரீகீதை - ௧௬ - ௧௯. ‡ வராஹே,
¶ ஸ்ரீவிஷ்- புரா - ௧ - ௯ - ௧௨௨. சா - (சா ௨) பெ - ஆ - தி - உ - உ - உ,
= ஸ்ரீ ஸ்த - ௧. ○ யஜு - ஸ்ரீ - ௪ - ௪ - ௪ - ப்ர - ௯ உ.

என்று நிற்குமளவில், இவளாலே பொறுப்பிக்கப் போமோவென்ன அருளிச்செய்கிறார், (திருவடியை) என்று தொடங்கி.

---

(௧௩) திருவடியை பொறுப்பிக்கு மவள், தன்சொல் வழிவருமவனைப் பொறுப்பிக்கச் சொல்லவேண்டா விறே.

---

அதாவது, தன்னை பக்துமாஸம் தர்ஜநபர்த்ஸநம் பண்ணின அந்தராக்ஷஸிகளுடைய அபராதங்களைக் கணக்கிட்டு, சித்ரவதம் பண்ண உத்யோகித்து நின்ற சொல்பிறக்களுன திருவடிக்கு * (நகுப்யேத்) என்றும், (நகஸ்சிந்நாபராத்யதி) என்றும் இத்யாத்யுபதேசத்தாலே பொறுப்பிக்குமவள், (௬௩) "மலராள்தனத்துள்ளான்" என்றும், (௬௪) "மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்" என்றும், (௬௫) "அல்லிமலர்மகள்போக மயக்குக்களாகியும் நிற்கும்" என்றும் சொல்லுகிறபடியே, தன்போக்யதையிலே குமிழ்நீருண்டு, (௬௬) "நின்னன்பின் வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக" என்கிறபடியே மாயாம்ருகத்தின்பின்னே போவென்னிலும் விளைவதறியாதே அதின்பின்னே போம்படி தன்சொல்வழிவருமவனைப் பொறுப்பிக்க வல்லளென்னுமிடம் கிம்புநர்ந்யாயஸித்தமிறே, என்கை.

(௬௭) "செய்தகவினுக்கில்லை கைம்மாறு" என்னும்படி, இரண்டுதலைக்கும் தலைதடுமாறாக உபகரித்துத்தன் சொல்வழிபோக வேண்டும்படியான திருவடியோடே மறுதலைக்குமவள், (௬௮) "தான்மயங்கும்" என்னும்படியான போக்யதைக்குத்தோற்று, எத்தைச்செய்வோம் என்று தலைதடுமாறி, (௬௬) "நின்னன்பின் வழிநின்று" (௬௯) "அதனின்பின்னே படர்ந்தான்" என்னும்படி விளைவதறியாதே, முறுவலுக்குத்தோற்றுச் சொல்வழிபோமவனைப்

---

* இராமா-யுத்-௧௧௭. திரு-நெ-தா-௧௮.
(௬௩) ௩-திரு-அந்-௩. (௬௪) பெ-திரு-மொ-௮-௰-௧.
(௬௫) திரு-வா-௩-௰-௮. (௬௬) பெரி-ஆ-தி-மொ-௩-௰-௭.
(௬௭) பெ-தி-மொ-௫-௮-௨ (௬௮) ௩-திரு-அந்-௱.
(௬௯) பெ-திரு-மொ-௨-௫-௬.

* (தேவ்யா காருண்யரூபயா) என்கிறபடியே, க்ருபைதான் ஒரு வடிவுகொண்டாப்போலே யிருப்பாளாய், ஸ்வதந்த்ரனான ஈஶ்வரனுக்கும் ஸ்வாதந்த்ர்யத்தையமுக்கி க்ருபையைக் கிளப்புமவளான இவள் ஸந்நிதியாலே, அபராதத்தைத் தீரக்கழியச்செய்து, ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கிலக்காய்த் தலையறுப்புண்ணத்தேடின காகம் †(க்ருபயா பர்யபாலயத்) என்கிறபடியே, க்ருபாவிஷயமாய்த் தலைபெற்றுப் போயிற்று; அப்படியிருக்கிற இவள்ஸந்நிதி இல்லாமையாலே போக்கற்றுச்செயல் மாண்டுநின்ற நிலையொத்திருக்கச்செய்தேயும், காகத்தோபாதி அபராதமுமின்றிக்கேயிருக்க, ராமஶரத்துக்கிலக்காய் ராவணன்முடிந்து போனான் என்கை. ஆகையால், ஆஶ்ரயிப்பார்க்கு இவள்ஸந்நிதியேவேணுமென்று கருத்து. ஆக, ஸ்ரீமத்பதார்த்தத்தை யருளிச்செய்தாராயிற்று.

அவ—(உக) அநந்தரம், நாராயணபதார்த்தத்தை அருளிச்செய்கிறார், (புருஷகாரபலத்தாலே) என்று தொடங்கி.

---

(உக) புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ர்யத்தலை சாய்ந்தால் தலையெடுக்குங் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்.

---

அதாவது, ஆஶ்ரயணோந்முகனான சேதநன் அநாதிகாலம் பண்ணின அபராதங்களைப்பார்த்துச் சீறி, "அங்கீகரியேன்" என்றிருக்குமீஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தலை மடிந்தால் அதின்கீழ் தலையெடுக்கப் பெறாதசெறிப்புத்தீர்ந்து, தலையெடுக்குங் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம் என்கை.

அவ—(உஉ) அவைதானவையென்ன அருளிச்செய்கிறார், (அவையாவன) என்றுதொடங்கி.

---

(உஉ) அவையாவன - வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாநமும், ஶக்தியும்.

---

இவற்றில் (வாத்ஸல்யம்) ஆவது, வத்ஸத்தின்பக்கல் தேநுவிருக்கும் இருப்பு; அதாவது அதினுடைய தோஷத்தைப் போக்யமாகக்

---

* லக்ஷ்மீதந்த்ர-உஅ-கரு.

† இராமா - ஸுந் - ஸதந்நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம் வதார்ஹமபி காகுத்ஸ்த்த: க்ருபயா பர்யபாலயத்.

கொள்ளுகையும், க்ஷீரத்தைக்கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவர்களைக் கொம்பிலும் குளம்பிலுங்கொண்டு நோக்குகையுமிறே. அப்படியே ஈஶ்வரனும், தோஷத்தை போக்யமாகக்கொண்டு (௭௦) "பாலேபோற்சீர்" என்கிற குணங்களாலே தரிப்பித்து, *(ந தஜ் ஜஹ்யாம்-ஸ-ந்த்யஜேயம்) என்றும், † (அபயம் ஸர்வபூதேப்ய:) என்றும் சொல்லுகிறபடியே, அநுகூலர் நிமித்தமாகவும், ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும். (ஸ்வாமித்வம்) ஆவது, இவன் விமுகனான தஶையிலும் விடாதே நின்று, ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவான ஒருபந்தவிஶேஷம். அதாகிறது, உடையவனாயிருக்குமிருப்பு; அத்வேஷந்தொடங்கி கைங்கர்ய பர்யந்தமாகவுண்டான ஸ்வபாவ விஶேஷங்களையெல்லாம் உண்டாக்குகிறது, இந்தபந்தவிஶேஷமடியாக. (ஸௌஶீல்யம்) ஆவது, உபயவிபூதியோகத்தாலும், பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியாலும், நிரங்குஶமாயிருக்கிற ஈஶ்வரனுடைய மேன்மையும், தங்கள் சிறுமையையும் பார்த்து, [௭௧] "அவனெவ்விடத்தான்யானார்" என்று பிற்காலியாதபடி எல்லாரோடும் ஒக்கமேல்விழுந்து புரையறக்கலக்கையும், அது தன் பேறாயிருக்கையும், எதிர்த்தலையில் அபேக்ஷையன்றியிலே இருக்கக் கலக்கையும். (ஸௌலப்யம்) ஆவது, கண்ணுக்கு விஷயமன்றிக்கேயிருக்கிறதான், கண்ணாலேகண்டு ஆஶ்ரயிக்கலாம்படி எளியனாயிருக்கை. (ஜ்ஞாநம்) ஆவது, இச்சேதநனுக்குக் கழிக்கவேண்டும் அநிஷ்டங்களையும், கொடுக்கவேண்டும் இஷ்டங்களையும் நேராக அறிகைக்கிடான ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தபதார்த்தங்களையும், ஒருக்காலே அபரோக்ஷிக்கவல்ல அறிவு. (ஶக்தி) ஆவது, ஹேயரான நித்யஸம்ஸாரிகளை, உபாதேயதமரான நித்யஸூரிகளோடு ஒருகோவையாக்கவல்ல அகடிதகடநாஸாமர்த்யம். இவற்றில் வாத்ஸல்யாதிகள் நாலும், ஆஶ்ரயண ஸௌகர்யாபாதகம்; ஜ்ஞாநாதிகள் இரண்டும், ஆஶ்ரிதகார்யாபாதகம்; [௭௨] "நிகரில்புகழாய்" என்று தொடங்கி வாத்ஸல்யாதிகள் நாலையுமிறே, ஆஶ்ரயணத்துக்குடலாக ஆழ்வார் அருளிச்செய்தது. ஜ்ஞாநஶக்திகள் இரண்டுஞ்சொன்ன இது, ப்ரா

---

(௭௦) பெரி-திரு-௮-௫-௮.  * இராமா-யுத்-௧௮-௩.
† இராமா-யுத்-௧௮-௩௩.
[௭௧] திரு-வா-௫-௧-௭.
[௭௨] திரு-வா-௬-௧௦-௧௦.

ப்திபூர்த்திகளுக்கும் உபலக்ஷணம்; கார்யகரத்வத்துக்கு அவையும் அபேக்ஷிதங்க ளாகையாலே.

அவ—(௨௩) இக்குணங்களுக்கு இவ்விடத்தில் விநியோகங் கள் எவையென்ன அருளிச்செய்கிறார், (குற்றங்கண்டு) என்று தொடங்கி,

---

(௨௩) குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யம் செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங்கண் டகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப்போக்கித் தன்னைக்கொடுக்கைக்கு ஜ்ஞாநசக்திகள்.

---

அதாவது, ஆஸ்ரயணோந்முகனான இச்சேதநன், தன்தோஷத் தைப்பார்த்து அஞ்சாமைக்குறுப்பு, தோஷத்தைப் போக்யமாகக் கொள்ளும் (வாத்ஸல்யம்.) நங்கார்யம் செய்யுமோ, செய்யானோ வென்று ஸங்கியாதே (கார்யஞ்செய்யும்) என்று விஸ்வஸிக்கைக்குறு ப்பு, இழவுபேறு தன்னதாம்படியான (ஸ்வாமித்வம்.) உபயவிபூதிக் கும் கடவனாயிருக்கும் பெருமைக்கு ப்ரகாஸமான (ஸ்வாமித்வ) த்தைக்(கண்டு,) ஸ்வநிகர்ஷாநுஸந்தாநத்தாலே (அகலாமை)க்குறு ப்பு, தாழ்நின்றவர்களோடே புரையறக்கலக்கும் ஸ்வபாவமான (ஸௌசீல்யம்.) அதிந்த்ரியன் என்று பிற்காலியாமல் கண்ணாலே (கண்டு) ஆஸ்ரயிக்கைக் குறுப்பு, தன் வடிவைச்சக்ஷுர் விஷயமா க்குகையாகிற (ஸௌலப்யம்) *(ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்கிறபடியே, ப்ராப்தி விரோதியைப்போக்கி, ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக் குறுப்பு, ப்ராப்தாவான இவன் கீழ்நின்றநிலையையும் மேல்போக்கடியும் அறிக்கைக்கும் அறிந்தபடியேசெய்து தலைக் கட்டுகைக்கும் ஏகாந்தங்களான (ஜ்ஞாநசக்திகள்) என்கை.

(௨௪) ஸௌகர்யாபாதககுண சதுஷ்கத்திலும் ஸௌலப்யம் ப்ரதாநமாகையாலே, அந்த ஸௌலப்யகாஷ்டையை அருளிச் செய்கிறார், (இங்குச்சொன்ன) என்று தொடங்கி.

---

(௨௪) இங்குச்சொன்ன ஸௌலப்யத்துக்கெல்லை நிலம் அர்ச்சாவதாரம்,

---

* ஸ்ரீகீதை-௧௮.௬௬.

அதாவது, இப்பதத்தில் ஆஸ்ரயணோப யோகியாகச் சொன்ன ஸௌலப்யத்துக்கு ஸீமாபூமி, (எச) "தமருகந்த தெவ்வுருவம் அவ் வுருவந்தானே" என்கிறபடியே, ஆஸ்ரிதர் உகந்ததொன்றைத் திரு மேனியாகக்கொண்டு ஸதாஸந்நிதி பண்ணியிருக்கும் (அர்ச்சாவதா ரம்) என்கை.

அவ—(உடு) இதுதன்னை யுபபாதிக்கிறார், (இதுதான்) என்று தொடங்கி,

(உடு) இதுதான் பரவ்யூஹவிபவங்கள் போலன்றிக் கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்.

அதாவது, இவ்வர்ச்சாவதாரந்தான் தேசவிப்ரக்ருஷ்டதை யாலே கண்ணுக்கு விஷயமாகாத (பரவ்யூஹங்)களும், காலவிப்ர க்ருஷ்டதையாலே கண்ணுக்கு விஷயமாகாதபடிபோன விபவமும் (போலன்றிக்கே,) ஆஸந்நமாய் அநவரதஸந்நிதிபண்ணிக் கொண்டி ருக்கையாலே, அநவரதம் (கண்ணாலேகாணலாம்படி இருக்கும்) என்கை.

அவ—(உசா) இக்குணங்களெல்லாம் அர்சாவதாரத்திலே காண லாமோ வென்னவருளிச்செய்கிறார், (இவையெல்லாம் நமக்குநம் பெருமாள் பக்கலிலே காணலாம்) என்று.

(உசா) இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்க லிலே காணலாம்.

அதாவது, ஸௌகர்யா பாதகமாகவும், கார்யாபாதகமாகவும் சொன்ன இக்குணங்கள் (எல்லாம்), இவை காண்கையிலே அபே க்ஷையுடைய நமக்கு நம்முடைய (பெருமாள்பக்கலிலே காணலாம்) என்கை.

அவ—(உஎ) பெருமாள் பக்கலிலே இக்குணங்களுக்கு ப்ரகா ஸகங்களா யுள்ளவற்றைச்சொல்லி, இவற்றுடனே நிற்கிறநிலையே நமக்குத்தஞ்சம் என்கிறார், (திருக்கையிலே) என்றுதொடங்கி.

(உஎ) திருக்கையிலேபிடித்த திவ்யாயுதங்களும் வைத்தஞ்ஜல் என்றகையும் கவித்தமுடியும் முகமும

(எச) க-திரு-அந்-சச.

முறுவலும், ஆஸநபத்மத்திலே யழுந்தின திருவடிகளு மாய் நிற்கிறநிலையே நமக்குத்தஞ்ஜம்.

---

அதாவது, கார்யகரத்வோபயோகியான ஜ்ஞாநஶக்திகளுக்கு ப்ரகாஶகமாம்படி, திருக்கைகளிலே தரித்துக்கொண்டிருக்கிற ஶங்க சக்ராதி (திவ்யாயுதங்களும்), வாத்ஸல்ய ப்ரகாஶகமாம்படி (வைத் தஞ்ஜலென்றகையும்), ஸ்வாமித்வப்ரகாஶகமாகக் (கவித்தமுடியும்), ஸௌஶீல்யப்ரகாஶகமான (முகமும்முறுவலும்), அனைவர்க்குங் கண்டு பற்றலாம்படியாய் (ஆஸநபத்மத்திலேஅழுந்தினதிருவடிகளு மாய்க்) கொண்டு எழுந்தருளி (நிற்கிறநிலையே) அநந்யகதிகளான (நமக்கு) ரக்ஷகமென்கை.

அவ—(உஅ) உபாயோபேய நிஷ்டர்க்கு அபேக்ஷிதமான ஆகாரங்கள் இரண்டும் கீழ்ச்சொன்னபடியே நிற்கிற திருமேனி யிலே தோற்றும் என்கிறார், (ரக்ஷகத்வபோக்யத்வங்கள் இரண்டுந் திருமேனியிலே தோற்றும்) என்று.

---

(உஅ) ரக்ஷகத்வபோக்யத்வங்கள் இரண்டுந் திரு மேனியிலே தோற்றும்.

---

அதாவது, ரக்ஷணபரிகரமான (திவ்யாயுதங்க)ளோடும், ரக்ஷ ணத்துக்குக் (கவித்தமுடி) யோடுங் கூடியிருக்கையாலே, ரக்ஷகத் வம்தோற்றுகையாலும், (எரு) "அணியாராழியுஞ் சங்குமேந் தும்" (எசா) "முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்கிறபடியே, அவைதானே அழகுக்குடலாய்(வைத்தஞ்ஜல் என்ற கையும், முகமும், முறுவலும், ஆஸநபத்மத்திலே அழுந்தின திருவடிகளும்) ஒரோன்றே அழகுக்கு எல்லை நிலமாயிருக்கையாலே (போக்யத்வம்) தோற்றுகையாலும்,(இரண்டுந் திருமேனியிலே) ப்ர காஶிக்கும் என்கை. ஆக, நாராயணபதார்த்தத்தை அருளிச்செய்தா ராயிற்று.

அவ—(உகூ) இனி, (சரணௌ) என்கிற பதத்துக்கு அர்த்த மருளிச்செய்கிறார், (சரணௌ திருவடிகளை) என்று.

---

(உகூ) [சரணௌ] திருவடிகளை.

---

(எரு) திரு-வா-எ-ரு-சா, (எசா) திரு-வா-ரு-க-க.

அவ—(௩௦) இந்த த்விவசநந்தால் சொல்லுகிற அர்த்தத்தை அருளிச் செய்கிறார், (இத்தால்) என்று தொடங்கி.

(௩௰) இத்தால் சேர்த்தியழகையும், உபாயபூர்த்தியை யுஞ் சொல்லுகிறது.

(சரணௌ) என்று, இரண்டுதிருவடிகளையும் சொல்லுகிற இத்தால், (எஎ) "இணைத்தாமரையடி" என்கிறபடியே, இரண்டுதாமரைப்பூவை நிரைத்துவைத்தாப்போலே யிருக்கிற (சேர்த்தி அழகையும்), த்விவசநம், இரண்டுக்குமேல் மற்றொன்று புகுராஸஹியாமையாலே, ஸஹாயாந்தர நிரபேக்ஷமான (உபாயபூர்த்தியையுஞ் சொல்லுகிறது) என்கை.

அவ—(௩௧) இனி, உபாயத்வைகாந்தமான இதின் குணாதிக்யத்தை அருளிச்செய்கிறார், (பிராட்டியும்) என்றுதொடங்கி.

(௩௧) பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது ; *திண்கழலாயிருக்கும்.

அதாவது, ஸ்ரீமத்பதத்திலே புருஷகாரபூதையாகச்சொன்ன (பிராட்டியும்) அவள்தானே (எஅ) "சிதகுரைக்கிலும் என்னடியாரதுசெய்யார்" என்னும்படி, நாராயணபதத்தில்சொன்ன குணவிசிஷ்டனை (அவனும்) கைவிடிலும், திருவடிகள், தன்வைலக்ஷண்யத்தாலே துவக்கிக்கொள்ளுகையாலே கைவிடாது. (எகூ) "வண்புகழ்நாரணன் திண்கழல்" என்கிறபடியே, பற்றினாரை நழுவவிடாத தண்மையையுடைத்தாயிருக்கும் என்கை.

அவ—(௩௨) இந்த குணாதிக்யத்தைப்பற்றவும் அன்றிக்கே, இவன் தன்ஸ்வரூபாநுகுணமும், திருவடிகளிலே இழிகையென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார், (சேஷிபக்கல்) என்று தொடங்கி.

(௩௨) சேஷிபக்கல் சேஷபூதனிழியும் துறை, ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே.

(எஎ) திரு-வா-௩-அ-௩.

(எஅ) பெரி - ஆ-தி-மொ-௪-௯-௨, (எகூ) திரு - வா - ௧-௨-௧௦.

வ்யா—அதாவது, (ஸேஷிபக்கல்) ஆஶ்ரயிக்கவிழியும் (ஸேஷபூதன்), தன் ஸ்வரூபாநுகுணமாக (இழியுந்துறை) திருவடிகள்; ஸ்தநந்தய ப்ரஜை தாயினுடைய அவயவமெல்லாங்கிடக்க, தனக்கு வகுத்ததாயுள்ள (முலையிலே வாய்வைக்குமாபோலே) என்கை.

அவ—(கூகூ) திருவடிகளைச்சொன்ன இது திருமேனிக்கு உபலக்ஷணம் என்கிறார்மேல், (இத்தால்) என்று தொடங்கி.

(கூகூ) இத்தால் பிராட்டிக் கிருப்பிடமாய் குணப்ரகாஸகமுமாய் ஸிஸுபாலனையும் அகப்படத்திருத்திச்சேர்த்துக்கொள்ளுந் திருமேனியை நினைக்கிறது.

வ்யா—அதாவது, (சரணௌ) என்றைகதேஸமான திருவடிகளைச் சொன்ன (இத்தால்), (அ0) "திருவிருந்த மார்பன்" என்னும்படி, ஸ்ரீமத்பதத்தில்சொன்ன புருஷகாரபூதையான (பிராட்டிக்கிருப்பிடமாய்), நாராயணபதத்தில் சொன்ன குணங்களுக்கு (ப்ரகாஸக)மாய், (அக) "பலபல நாளுஞ்சொல்லிப் பழித்தஸிசுபாலன்" என்கிறபடியே, ப்ரத்வேஷபரனாய் நிந்தோக்திகளைப் பண்ணித்திரிந்த (ஸிஸுபாலனை)யும் உட்பட, (அச) "அலவலமை தவிர்த்தவழகன்" என்கிறபடியே, தன்னழகாலே த்வேஷாதிகள் போம்படி திருத்தி, (அஉ) "திருவடிதாட்பாலடைந்த" என்கிறபடியே, (சேர்த்துக்கொள்ளும்) ஸ்வபாவத்தையுடைத்தான திவ்யமங்கள விக்ரஹத்தை (நினைக்கிறது) என்கை.

அவ—(கூச) அநந்தரம், ஸரணபதார்த்தத்தை அருளிச்செய்கிறார், (ஸரணம்) என்று தொடங்கி.

(கூச) [ஸரணம்] இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்டநிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக.

வ்யா—அதாவது, * (உபாயே க்ருஹரக்ஷித்ரோஶ் ஸப்தஶ்ஸரணமித்யயம்—வர்த்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசகः) என்கிறபடியே, ஸரணஸப்தம், ரக்ஷிதாவுக்கும், க்ருஹத்துக்கும், உபாயத்துக்கும் வாசகமேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்துக்கே

(அ0) ௬ - திரு - அ௩ - ருள.　　(அக) பெ-ஆ-தி-மொ-௪-௬-௫.
(அஉ) திரு - வா - எ - ரு - ௬.
* அஹி - ஸம் - ௬௬ - ௬ உ.

வாசகமாகையாலும், உபாயக்ருத்யம் இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹார காரணமாகையாலும், (இஷ்டப்ராப்திக்கும், அநிஷ்டநிவாரணத்துக்கும் தப்பாதஉபாயமாக) என்று, இப்பதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்.

இஷ்டாநிஷ்டங்கள் தான் இன்னதென்னுமத்தைப் பரந்தபடியிலே விஸ்தரேண அருளிச்செய்தார். ஸ்ரீயஃப்பதிப்படியிலும், "அநிஷ்டமாகிறது - அவித்யையும், அவித்யாகார்யமான ராகத்வேஷங்களும், புண்யபாபரூபமான கர்மங்களும், தேவாதி சதுர்விதசரீரங்களும், ஆத்யாத்மிகாதி து:கபரம்பரைகளும்; இஷ்டமாகிறது - அர்ச்சிராதி மார்க்ககமநமும், பரமபதப்ராப்தியும், பரமாத்மதர்சநமும், குணாநுபவ கைங்கர்யங்களும்" என்று, ஸங்க்ரஹேண அருளிச்செய்தார்; ஆகையால் இவ்விடத்திலும் அவைவக்தவ்யங்கள்.

அவ—(௩௫) கீழ்நிர்த்தேசித்த வஸ்துவை உபாயமாகச்சொன்னதின் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார், (இத்தால் ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது) என்று.

(௩௫) இத்தால்ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது.

வ்யா—அதாவது, கீழ்சொன்ன விஷயத்தை உபாயமாகச் சொல்லுகிற (இத்தால், ப்ராப்ய) வஸ்து(தானே, ப்ராபகம்) என்னுமிடஞ்சொல்லுகிறது என்கை.

அவ—(௩௬) கீழ், ப்ராப்யப்ரஸங்க மூண்டோவென்ன அருளிச்செய்கிறார், (கீழ்ச்சொன்னமூன்றும் ப்ராப்யமிறே) என்று.

(௩௬) கீழ்ச்சொன்னமூன்றும் ப்ராப்யமிறே.

வ்யா—அதாவது, ஸமஸ்தபதமான பூர்வபதத்தில்சொன்ன லக்ஷ்மீவிசிஷ்டத்வமும், கல்யாண குணயோகமும், திவ்யமங்கள விக்ரஹோபேதத்வமும் ஆகிற (மூன்றும்), † (ஸ்ரியாஸார்த்தம் - ஆஸ்தே)‡ (ஸதாபஶ்யந்தி) என்று அநுபவவிஷயமாகச் சொல்லப்படுகிறவை ஆகையாலே (ப்ராப்யமிறே) என்கை.

---

† வைகுண்டேது பரேலோகே ச்ரியாஸார்த்தம் ஜகத்பதி: ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ.

‡ ரிவே - உ.ப, கூ. தத்விஷ்ணோ: பரமம்பதம் ஸதாபஶ்யந்தி ஸூரய:.

அவ—(௩௭) ஆநுஷங்கிகமாக உபாயமாக்குகிறது தானென்னென்ன அருளிச்செய்கிறார், (இவன்செயல் அறுதியாலே உபாயமாக்குகிறானித்தனை) என்று.

(௩௭) இவன் செயலறுதியாலே உபாயமாக்குகிறானித்தனை.

வ்யா—அதாவது, அகிஞ்சநனாய், அநந்யகதியாயிருக்கிற இவன் தன் (செயல்) மாட்சியாலே போக்யமானபாலை மருந்தாக்குவாரைப் போலே, ப்ராப்யமானது தன்னையே ப்ராபக (மாக்குகிறானித்தனை) என்கை.

அவ—(௩௮) இது தன்னாலே இவ்வுபாயத்துக்கு ஓரதிஶயம் சொல்லுகிறதென்கிறார், (சரணௌஶரணம் என்கையாலே) என்று தொடங்கி.

(௩௮) "சரணௌஶரணம்" என்கையாலே, உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயம் என்கிறது.

வ்யா—அதாவது, (சரணௌஶரணம்) என்று, ப்ராப்யவஸ்து தன்னையே ப்ராபகமாகச் சொல்லுகையாலே, ப்ராப்யம்வேறும், தான் வேறுமாயிருக்கும் (உபாயாந்தரங்) களிற்காட்டில் (வ்யாவ்ருத்தமான உபாயம்) ஈதென்னுமிடம் சொல்லுகிறது என்கை.

அவ—(௩௯) அநந்தரம், க்ரியாபதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார். (ப்ரபத்யே - பற்றுகிறேன்) என்று.

(௩௯) [ப்ரபத்யே] பற்றுகிறேன்.

வ்யா—இப்பதம் (பதகதேள) என்கிறதாது ஸித்தமாகையாலே, கதிவாசி ஆகையாலும், உத்தமன் ஆகையாலும் (பற்றுகிறேன்) என்று, இதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார்.

அவ—(௪0) இதுதான் மாநஸ வாசிக காயிக ரூபையான த்ரிவிதகதியையும் காட்டவற்றாகையாலே, அதில் எந்த கரணத்தால் உண்டான பற்றுதலைச் சொல்லுகிறதென்ன அருளிச்செய்கிறார், (வாசிகமாகவும்) என்று தொடங்கி.

(௪௰) வாசிகமாகவும், காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு இழவில்லை; "ஜ்ஞாநாந்மோக்ஷம" ஆகையாலே மாநஸமாகக்கடவது.

வ்யா—அதாவது, *(பவஶரணம்) இத்யாதிப்படியே, ரக்ஷிக்க வேணும் என்று ப்ரார்த்திக்கையாகிற கேவலவாசிகமாகவும் †(அஞ்சலிः பரமாமுத்ராக்ஷிப்ரं தேவப்ரஸாதிநீ) என்கிறபடியே, பகவத்ப்ரஸாதஹேது பூதமான அஞ்ஜலியை ப்ரயோகித்தல், ஷிஷாதகாகாதிகளைப்போலே, ரக்ஷகவஸ்து இருந்த இடத்தே வருதல் செய்கையாகிற கேவல (காயிகமாகவும் பற்றினாலும் பலஸித்திக்கு இழவில்லை. ‡(ஜ்ஞாநாந்மோக்ஷம்) என்கிறபடியே, ஜ்ஞாநத்தாலே மோக்ஷம் என்கையாலே, மாநஸமான பற்றுதல் (ஆகக்கடவது) என்கை.

அதாவது, ஒரு புத்திவிஶேஷம். இந்த புத்திவிஶேஷந்தன்னைப் பரந்தபடியிலே விஸ்தரேண அருளிச்செய்தார். ஸ்ரீயः பதிப்படியிலும், "இந்தபுத்தி விஶேஷமாகிறது - அநந்யார்ஹஶேஷத்வ ஜ்ஞாநகார்யமாய், இதரோபாயவ்யாவ்ருத்தமாய், பகவத்ரக்ஷகத்வாநுமதிரூபமாய், ஸக்ருதநுஷ்ட்டேயமாய், அந்திமஸ்ம்ருதிநிரபேக்ஷமாய், ஸுஶகமாய், யாச்ஞாகர்ப்பமாய், த்ருடாத்யவஸாயரூபமாய் இருப்பதொரு ஜ்ஞாநவிஶேஷம்" என்று அருளிச்செய்தார். ஆகையால், இவ்விடத்தே அதுவும் அநுஸந்தேயம்.

அவ—(சக) இப்படி மாநஸமாத்ரமே அமையுமோ (அ௩) "சிந்தையாலும்" இத்யாதிப்படியே, த்ரிவிதகரணத்தாலும் ஸ்வீகரிக்கவேண்டாவோ என்ன அருளிச்செய்கிறார், (உபாயம் அவனுகையாலும்) என்றுதொடங்கி.

---

(சந) உபாயம் அவனுகையாலும், இவை நேரே உபாயம் அல்லாமையாலும் இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை.

---

* வி - பு - ௩ - எ - ௩௩. கமலநயந வாஸுதேவ விஷ்ணோ தரணிதராச்யுத சங்கசக்ரபாணே। பவ சரணமிதீரயந்தி யேவைத்யஜ பட தூரதரேண தாநபாபாந்.॥

† கருடபு. பூர்வ. கக - ௨௬.

‡ பார - ஶா - ௩க௮-எஎ. ஜ்ஞாநாந்மோக்ஷோ ஜாயதே ராஜஸிம்ஹ நாஸ்த்யஜ்ஞாநாத் ஏவமாஹுர்நரேந்த்ர। தஸ்மாத்ஜ்ஞாநம் தத்த்வதோந்வேஷணீயம் யேநாத்மாநம் மோக்ஷயேஜ்ஜந்மம்ருத்யோः॥ (அ௩) திரு - வா - ௬ - ௫ - கக.

வ்யா—அதாவது, பலஸித்திக்கு (உபாயம்) பற்றப்படுகிற ஈஶ்வரன் (ஆகையாலும்), கரணத்ரயத்தாலும் உண்டான பற்றுதல்களான (இவை) ஆபாதப்ரதீதியில் உபாயம்போல் தோற்றிக்கழியுண்டு போமத்தொழிய, ஸாக்ஷாத் (உபாயம் அல்லாமையாலும்), பலஸித்திக்கு அத்யவஸாயாத்மகமான ஸ்வீகாரம் ஒன்றுமே யமையும், (இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை) என்கை.

அதவா, இப்படி ஒரொன்றிலே ஒதுக்கிச் சொல்லுகிறதென், த்ரிவிதகரணத்தாலும் பற்றுதலைச் சொன்னாலோவென்ன, ('உபாயம்') இத்யாதியாலே அருளிச்செய்கிறாராகவுமாம். அப்போதைக்கு ஒரொன்றே அமையும், (இம்மூன்றும்வேணும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை) என்கை.

நிர்ப்பந்தம் இல்லை என்கையாலே, இந்த ஸ்வீகாரம் த்ரிவித கரணத்தாலும் உண்டானாலும் குறையில்லையென்னுமிடம் தோற்றுகிறது. "இப்ரபதநம் கரணத்ரயத்தாலும் உண்டாகவுமாம்; ஏக கரணத்தாலே உண்டாகவுமாம்; பலஸித்திக்குக் குறையில்லை. அதிகாரிபூர்த்திக்கு கரணத்ரயமும் வேணும். பலஸித்திக்கு ஏககரணமே அமையும்; உபாயபூர்த்திக்கு, ஸ்ரீயபதித்வமும், வாத்ஸல்யாதி குணயோகமும், திவ்யமங்கள விக்ரஹமும் அபேக்ஷிதமாயிருக்கிறாப்போலே, அதிகாரிபூர்த்திக்குக் கரணத்ரயமும் அபேக்ஷிதமாயிருக்கும்." என்றிறே, பரந்தபடியில் இவர்தாம் அருளிச்செய்தது.

அவ—(௪௨) † (ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந்நரம்.) ‡ (ஸக்ருதேவ ப்ரபந்நாய) இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ப்ரபத்தி ஸக்ருத்கரணீயையாயிருக்க, வர்த்தமாநமாகச் சொல்லுகிறது ஏதுக்காகவென்ன அருளிச்செய்கிறார், (வர்த்தமாந நிர்த்தேஶம்) என்றுதொடங்கி.

---

(௪௨) வர்த்தமாந நிர்த்தேஶம் ஸத்வம் தலையெடுத்து அஞ்சினபோது அநுஸந்த்திக்கைக்காக.

---

வ்யா—அதாவது, (லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தேவ்ரஜம்) (௮௪) "நின்னடியிணை அடைந்தேன்" (௮௫) "அடிக்கீழ

---

† லக்ஷ்மீதந்த்ரம். ௧௭ - ௯௦. ‡ ரா - யுத் - ௧௮ - ௩௩ - ௪.

(௮௪) பெரி-தி-மொ-௫-௮-௩. (௮௫) திரு - வா - ௯ - ௧௦ - ௫.

மர்ந்து புகுந்தேன்” என்கிறபடியே சொல்லாதே, (‘ப்ரபத்யே’) என்று வர்த்தமாநமாகச் சொல்லுகிறது, ப்ரக்ருதியோடே இருக்கிற இவன் ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கி, உபாயாபாயங்களில் ஏதேனும் ஒன்றிலே அந்வயித்து, பின்னை (ஸத்வந்தலையெடுத்து) அநுதாபம் பிறந்து பயப்பட்டகாலத்திலே, * (ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ரயத்புநஶ்ஶரணம் வ்ரஜேத்) என்கிறபடியே, ப்ரபத்தியொழிய அதுக்குப் பரிஹாரம் இல்லாமையாலும், அதுதான் ஸக்ருத் க்ருதமானபின்பு புநக்கரணம் ஆகாமையாலும், பூர்வப்ரபதநத்தை (அநுஸந்திக்கைக்காகக்) கொழுந்து படக்கிடக்கிறதென்கை.

அவ—(சங) இன்னமும் இவ்வர்த்தமானத்துக்குச் சில ப்ரயோஜனங்களை அருளிச்செய்கிறார், (உபாயாந்தரங்களில்) என்று தொடங்கி.

---

(சங) உபாயாந்தரங்களில் நெஞ்சுசெல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்.

---

வ்யா—அதாவது பூர்வவாஸனையாலே, அவஶமாக உபாயாந்தரங்களிலே மநஸ்ஸு செல்லாமைக்காகவும், இவ்வநுஸந்தாநத்தாலொழியப் போதுபோக்க அரிதாகையாலே (காலக்ஷேபத்துக்)காகவும், இதினுடைய ரஸ்யதையாலே விடமாட்டாமையாலும் இவ்வநுஸந்தாநம் இடைவிடாமல் நடக்கக்கடவதாயிருக்கும் என்கை.

அவ—(சச) இங்ஙனன்றிக்கே பலஸித்திக்குப் பலகாலும் அநுஸந்திக்க வேணுமென்றாலோ என்ன அருளிச்செய்கிறார், (பேற்றுக்கு) என்றுதொடங்கி,

---

(சச) பேற்றுக்குப் பலகாலும்வேணும் என்று நினைக்கில் உபாயம் நழுவும்.

---

* லக்ஷ்மீத. கஎ - அத்யா - கக - கஉ. ஶ்லோ.

உபாயாபாயஸம்யோகே நிஷ்டயாஹீயதே நயா
அபாயஸம்ப்லவேஸத்ய: ப்ராயஶ்சித்தம் ஸமாசரேத்
ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ரயத்புநஶ்ஶரணம் வ்ரஜேத்
உபாயாநாமுபாயத்வ ஸ்வீகாரே ப்யேதமேவஹி.

வ்யா—அதாவது, கீழ்ச்சொன்ன ப்ரயோஜநங்களுக்காக அன்றிக்கே, பேற்றுக்கு உறுப்பாகப் (பலகாலும்) அநுஸந்திக்க (வேணுமென்று) ப்ரதிபத்திபண்ணில், ஸஹாயாந்தர ஸம்ஸர்க்காஸஹமான ஸித்தோபாயம், சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே, தன்னைக்கொண்டு (நழுவும்) என்கை. ஆக, பூர்வ வாக்யத்துக்கு அர்த்தம் அருளிச்செய்தாராயிற்று.

அவ—(சரு) இனி, உத்தரவாக்கியத்துக்கு அர்த்தமருளிச்செய்வதாக உபக்ரமிக்கிறார், (உத்தர வாக்யத்தாலே ப்ராப்யஞ் சொல்லுகிறது) என்று.

(சரு) உத்தரவாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது.

வ்யா—ப்ராப்யமாவது, ஸ்ரீயஃபதியாய் ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிற் பண்ணும் கைங்கர்யம்.

அவ—(சசு) ப்ராபகவரணாநந்தரம் ப்ராப்யம் சொல்லுகிற இதுக்கு அபிப்ராயம் அருளிச்செய்கிறார், (ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை) என்று.

(சசு) ப்ராப்யாந்தரத்துக்கு அன்றெக்கை.

வ்யா—அதாவது, பூர்வவாக்யத்தில் ப்ரதிபாதிதமான ஸாதநம், பல சதுஷ்டய ஸாதாரணம் ஆகையாலே, கீழ்ப்பண்ணின ப்ராபக வரணம் (ப்ராப்யாந்தரத்துக்கு அன்று) என்னுமிடஞ் சொல்லுகை, இப்போது ப்ராப்யம் சொல்லுகிற இதுக்கு ப்ரயோஜநம் என்றபடி.

அவ—(சஎ) ப்ராப்யாந்தரங்களை விட்டு இந்த ப்ராப்யத்தை அபேக்ஷிக்க வேண்டுவானென்னென்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார், (உபாயாந்தரங்களைவிட்டு) என்று தொடங்கி.

(சஎ) உபாயாந்தரங்களைவிட்டு சரமோபாயத்தைப் பற்றினாற்போலே, உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களைவிட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது.

வ்யா—அதாவது, உபாயவரணம் பண்ணுகிற வளவில் அநந்யஶரணத்வரூபமான ஸ்வரூபத்துக்கு அநுகுணமாகக் கர்மஜ்ஞாநபக்

திகளாகிற (உபாயாந்தரங்களை விட்டு சரமம்) ஆன (ஸித்தோபாயத்தைப் பற்றினாற்போலே), உபேய ப்ரார்த்தனை பண்ணுகிற வளவிலும், அநந்யபோகத்வ ரூபமான ஸ்வரூபத்துக்கு அநுகுணமாக (உபேயாந்தரமான ஐஸ்வர்ய கைவல்யங்களை விட்டு) சரமமான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது) என்கை.

அவ—(சஅ) நினைவறியும் ஈஸ்வரன் பக்கல் ப்ரார்த்தனை மிகையென்றிருப்பார் பண்ணும் ப்ரஸ்நத்தை அநுவதிக்கிறார், (இவன் அர்த்திக்கவேணுமோ, ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோவென்னில்) என்று.

(சஅ) இவன் அர்த்திக்கவேணுமோ ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ என்னில்.

அவ—(சகூ) அதுக்குத்தரம் அருளிச்செய்கிறார். (இவன் பாசுரங் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும்) என்று.

(சகூ) இவன் பாசுரங்கேட்டவாறே திருவுள்ளமுகக்கும்.

வ்யா—அதாவது, ருக்ணதையாலே சோற்றில் ஆசையற்றுக் கிடந்த ப்ரஜை, ரோகந்தீர்ந்து பசிவிளைந்து, சோறு என்றபேக்ஷிக்கும் பாசுரங்கேட்டால் பெற்றதாயுகக்குமாபோலே, அநாதிகாலம் ப்ராப்யாந்தர ப்ராவண்யமாகிற நோய்கொண்டு இந்த (ப்ராப்யத்தில்) நசையற்றுக் கிடந்தவன், இதிலே ருசிபிறந்து தன்பக்கலிலே வந்து இத்தை அபேக்ஷிக்கிற (பாசுரங்கேட்டவாறே), ஸுஹ்ருதியான அவன் (திருவுள்ளமுகக்கும்), அதுக்காக வர்த்திக்கிறானித்தனை என்கை.

அவ—(ருo) இனி, இவ்வாக்யத்துக்கு ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமபதத்தைஉபாதாநம் பண்ணுகிறார், (ஸ்ரீமதே) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்,(பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு)என்று.

(ருo) (ஸ்ரீமதே) பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு.

வ்யா—இங்கும், ஸ்ரீசப்தத்துக்கு பூர்வவாக்கியத்தில்சொன்ன வ்யுத்பத்தி த்வயமும், அதில் அர்த்தமும், மதுபர்த்தமான நித்ய யோகமும் அநுஸந்தேயம்.

அவ—(௩௪) இரண்டிடத்திலும் நித்யயோகம் ஒத்திருக்கச் செய்தே, அவ்வவதாராநுகுணமாக இவளிருக்கும் இருப்பை அருளிச்செய்கிறார், (அவனுபாயமாமிடத்தில்) என்றுதொடங்கி.

---

(௩௪) அவனுபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனாமிடத்தில் தான் ப்ராப்யையுமாய், கைங்கர்ய வர்த்தகையுமாயிருக்கும்.

---

வ்யா—அதாவது, (அவன்) சேதநர்க்கு அநிஷ்ட நிவ்ருத்தீஷ்ட ப்ராப்திகளுக்கு (உபாயமாமிடத்தில்) ஸஹாயாந்தர ஸம்ஸர்க்கத்தை ஸஹியாமையாலே (தான்) உபாயபாவத்தில் அந்வயமின்றிக்கே, ஸாபராதசேதநருடைய அபராதங்களைப்பார்த்து, அவன் சீறுமளவில், அத்தைஸஹித்து அங்கீகரிக்கும்படியாகப் பண்ணும் (புருஷகாரமாயிருக்கும்); (அவன்) சேதநர்க்குக் கைங்கர்யப்ரதிஸம்பந்தியா (ப்ராப்யனாமிடத்தில்), அவனோபாதிகைங்கர்ய ப்ரதி ஸம்பந்தியாய்க்கொண்டு (தான் ப்ராப்யையுமாய்), இவர்கள் செய்யுங் கைங்கர்யத்தை அவன் திருவுள்ளத்திலே ஒன்றுபத்தாகப் படுத்தி யுகப்பிக்கையாலே, (கைங்கர்ய வர்த்தகையுமாயிருக்கும்) என்கை.

இது தன்னைப்பார்த்தபடியிலே "பூர்வவாக்யத்தில், ஸ்ரீமச்சப்தம் சேதநருடைய அபராதத்தையும், ஈஸ்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையுங்கண்டு இவர்கள் அவனுடைய க்ரோதத்துக்கு விஷயபூதராய் நசித்துப்போகாதே, இவனைக்கிட்டி யுஜ்ஜீவித்துப்போகவேணும் என்று, ஸாபராதரானசேதநரை ஈஸ்வரனோடே சேர்க்கைக்காக என்று மொக்கவிடாதே இருக்கும் இருப்பைச்சொல்லுகிறது; இங்குத்தை ஸ்ரீமச்சப்தம் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தைப்பற்றவும், இவர்கள்பண்ணுங் கைங்கர்யத்தை ஈஸ்வரன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப் படுத்துகைக்காகவும், அநுபவவிச்சேதத்தில் தனக்கு ஸத்தாஹாநி பிறக்கும்படி இருக்கையாலே, நிரந்தர ஸம்ஶ்லேஷத்துக்காகவும், அவனை க்ஷணகாலமும் பிரியாதே

ஸர்வகாலமும் ஸம்ச்லிஷ்டையாயிருக்கும் இருப்பைச் சொல்லு கிறது" என்று விஸ்தரேண அருளிச்செய்தார்.

அவ—(ருஉ) திருமந்த்ரத்தில் உத்தரபதத்துக்கு இவ்வுத்தர வாக்கியம் விவரணமா யிருக்கிறபடியை அருளிச்செய்கிறார், (இதி லே) என்றுதொடங்கி.

(ருஉ) இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்ய த்தை விசதமாக அநுஸந்திக்கிறது.

வ்யா—அதாவது, கைங்கர்ய ப்ரதிஸம்பந்தி ஒருமிதுநமெ ன்னுமிடத்தை ஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கிற இந்த வாக்யத்திலே, (திருமந்த்ரத்தில்), "நாராயணாய" என்று கைங்கர்யப்ரதி ஸம்பந்தி ஒருமிதுந மென்னுமிடம் ஆர்த்தம் ஆகையாலே, அவிசதமாகச் சொன்ன (ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது) என்கை.

அங்கு, (நாராயணனுக்கே அடிமை செய்யப்பெறுவேனாக வேணும்) என்கிற இவ்வளவொழிய, அடிமைகொள்ளுமவன் ஸ்ரீமா னாகவேணும் என்றும்; அடிமைசெய்யும் அவன், நிர்மமனாகவே ணும் என்றும் அங்குச் சொல்லாமையாலும், அவை இரண்டும் இங்குச் சொல்லுகையாலுமிறே, அந்தப்பதத்துக்கு இவ்வாக்யம் விவரணமாயிற்று.

அவ—(ருங) இம்மிதுநத்துக்கே அடிமை செய்யவேணும் என்கிற நிர்ப்பந்தந் தந்தாமென்னென்ன அருளிச்செய்கிறார், (இளைய பெருமாளைப்போலே) என்று தொடங்கி.

(ருங) இளையபெருமாளைப் போலே இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கைமுறை.

வ்யா—அதாவது, * (பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யாகிரி ஸாநு ஷுரம்ஸ்யதே - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச்சதே) என்று, பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமைசெய்த (இளையபெருமாளைப்போலே, இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை) இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபப்ராப்தம் என்கை.

மிதுநசேஷத்வம் ஸ்வரூபமானால், மிதுநகைங்கர்யமிறே, ஸ்வ ரூபப்ராப்தம்.

---

* இராமா - அயோ, கக - உ௫.

அவ—(௫ச) இன்னமும் இச்சேர்த்தியிலே அடிமைசெய்யு மளவிலுள்ள வாசியை அருளிச்செய்கிறார், (அடிமைதான்) என்று தொடங்கி.

---

(௫ச) அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்பதும் அச்சேர்த்தியிலே.

---

வ்யா—அதாவது, ஸ்வதந்த்ரனான ஈஶ்வரன் உபேக்ஷியாமல் கைங்கர்யங் கொண்டருளும்படி பண்ணுமவளிவளாகையாலே *(ஸீதாமுவாச) †(ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்த்தமிதம் வசநமப்ரவீத்) என்று, இவள்முன்னிலையாகத் தம்முடைய ஸ்வரூபாநுரூபமான அடிமையை அபேக்ஷித்துப்பெற்ற (இளையபெருமாளைப்போலே), இவன் ப்ரார்த்திக்கிற (அடிமைதான் ஸித்திப்பதும்) மாதாபிதாக்கள் இருவருமான சேர்த்தியிலே ஶுஶ்ரூஷைபண்ணும் புத்ரனுக்குப்போலே, செய்கிற (அடிமைதான்) (ரஸிப்பதும்) பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே என்கை.

அவ—(௫௫) இனி, இரண்டாம்பதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (நாராயணாய) என்று. அதுக்கர்த்தம் அருளிச்செய்கிறார், (ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு) என்று.

---

(௫௫) (நாராயணாய) ஸர்வஶேஷியா யுள்ளவனுக்கு.

---

வ்யா—நாராயணத்வம், உபயவிபூதி நாதத்வமாகையாலே, (ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு) என்கிறார். கைங்கர்ய ப்ரதிஸம்பந்தி ஆவான்ஶேஷியிறே.

அவ—(௫௬) கைங்கர்யத்தாநுபவஜநித ப்ரீதிகாரிதமாகையாலும், அந்த ப்ரீதிதான் அநுபாவ்யவிஷயாதீனையாகையாலும், அநுபாவ்யவிஷயஞ் சொல்லவேண்டுகையாலே அருளிச்செய்கிறார். (இதிலே திருமேனியையுங் குணங்களையுஞ்சொல்லும்) என்று.

---

* இரா - அயோ - ௩௧ - உ. ஸப்ராது ஶ்சரணௌகாடம்நிபீட்யரகுநந்தந:—ஸீதாமுவாசாதியஶா ராகவஞ்ச மஹாவ்ருதம்.

† இரா - ஆர. ௧௫ - ௬. ஏவமுக்தஸ்துராமேண லக்ஷ்மணஸ்ஸம்யதாஞ்சலி:—ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்த்தமிதம் வசநமப்ரவீத்.

(௫௬) இதிலே திருமேனியையுங் குணங்களையுஞ் சொல்லும்.

வ்யா—அதாவது, கைங்கர்யப்ரதி ஸம்பந்தியைச்சொல்லுகிற இப்பதத்திலே, கைங்கர்யத்துக்கு பூர்வபாவியாயிருக்கும் அநுபவத்துக்கு விஷயமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், கல்யாண குணங்களையும் சொல்லும் என்கை.

‡ (ஸதாபஶ்யந்திஸூரய:) என்றும் ¶ (ஸோஶ்நுதே ஸர்வாந் காமாந்) என்றும் இத்யாதிகளில் சொல்லுகிறபடியே, திவ்யமங்கள விக்ரஹமும், கல்யாணகுணங்களும், § (ரஸஂஹ்யேவாயஂலப்த்வா நந்தீபவதி) என்கிற ஸ்வரூபத்தோ பாதிகைங்கர்ய வர்த்தகங்களுமாய், போக்யங்களுமாயிறே, யிருப்பது; 'குணங்கள்' என்று ஸாமாந்யேந சொல்லுகையாலே, ஜ்ஞாநஶக்த்யாதி குணங்களோடு வாத்ஸல்யாதிகுணங்களோடு, ஸௌஶீல்யாதி குணங்களோடு வாஸிபற எல்லாக் குணங்களும் அநுபாவ்யங்களா யிருக்கையாலே, பூர்வவாக்யத்தில் நாராயணபதத்தில், உபாயவரணத்துக்கு உபயுக்ததயா அநுஸந்தேயங்களான குணவிஶேஷங்களும் இப்பதத்தில் ப்ராப்யதயா அநுஸந்தேயங்கள்; ஆஶ்ரயமான ஸ்வரூபத்துக்கு ஆகாரத்வயமுண்டாயிருக்கிறாப் போலே, ஆஶ்ரிதங்களான குணவிஶேஷங்களுக்கும் ஆகாரத்வயமும் உண்டாயிறேயிருப்பது. இவையெல்லாம் பரந்தபடியிலே அருளிச்செய்தார்.

அவ—(௫௭) இனி, இப்பதத்துக்கு தாத்பர்யம் இன்னதிலே என்கிறார், (ஶேஷித்வத்திலே நோக்கு) என்று.

(௫௭) ஶேஷித்வத்திலே நோக்கு.

வ்யா—அதாவது, அநுபாவ்யத்வம விஶிஷ்டம் ஆகையாலே ஸகலகுணங்களும் ப்ரதிபாதிதமாயிருந்ததே ஆகிலும், சதுர்த்த்யம்ஶத்தில் சொல்லுகிற வ்ருத்திவிஶேஷத்துக்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது (ஶேஷித்வ) மாகையாலே, அதிலே இப்பதத்துக்கு நோக்கு என்கை.

அவ—(௫௮) இந்தஶேஷித்வ கதநத்துக்கு ப்ரயோஜந மருளிச்செய்கிறார், (ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே, ரஸிப்பது) என்று.

‡ யஜுஃஷ-ச-கா-உ-௩௧. ¶ தைத்-உப-௧-உ௫. § தைத்-உப-௧-உ௫.

(௫அ) ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது.

---

வ்யா—அதாவது, *(ஸர்வம்பரவசம்து:கம்) என்றும், ‡(ஸேவா ஶ்வவ்ருத்தி:) என்றும் சொல்லுகிறபடியே, நிஷித்தமான அப்ராப்த விஷயத்தில் கைங்கர்யம்போலன்றிக்கே, ¶(ச்சாயாவாஸத்வ மநுகச்சேத்) என்றும், §(ஸாகிமர்த்தம்நஸேவ்யதே) என்றும் சொல்லுகிற படியே, விஹிதமான (ப்ராப்தவிஷயத்தில்) பண்ணுங் (கைங்கர்ய மிறே), இவனுக்கு (ரஸிப்பது) என்கை.

அவ—(௫௯) இனி, இப்பதத்தில் விபக்த்யம்ஶத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (இந்தசதுர்த்தி) என்று தொடங்கி.

---

(௫௯) இந்த சதுர்த்தி, கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது.

---

வ்யா—அதாவது, ஶேஷத்வ ஜ்ஞாநகார்யமான உபாயபரிக்ரஹத்துக்கு அநந்தரம் ப்ராப்தமாயுள்ளது ஆகையாலே, தாதர்த்ய ப்ரதிபாதகம் அன்றிக்கே, (இந்தசதுர்த்தி), பரிக்ரஹித்த உபாயத்தினுடையபலமான (கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது) என்கை.

(கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கை) ஆவது, கைங்கர்ய ப்ரார்த்தனையை ப்ரதிபாதிக்கை. கைங்கர்யமாவது, பகவன்முகவிகாஸ ஹேதுவான வ்ருத்திவிஶேஷம். இக்கைங்கர்யந்தான், †(ஏதத்ஸாம காயந்நாஸ்தே) என்றும், ‖(நம்இத்யேவவாதிந:) என்றும், (யேநயேந தாதாகச்சதிதேநதேந ஸஹகச்சதி) என்றும் இத்யாதிகளில் சொல்லுகிறபடியே, வாசிககாயிக ரூபமாயிருக்கும்.

அவ—(௬0) இக்கைங்கர்யம் ப்ரார்த்தநீயமாகில் காதாசித்கமாகாதோ என்ன அருளிச்செய்கிறார், (கைங்கர்யந்தான் நித்யம்) என்று.

---

(௬0) கைங்கர்யந்தான் நித்யம்.

---

* மநு - ச - ௧௬. ‡ மநு. ச - ௬. ¶ பரமஸம்ஹிதா.

§ விஹகே - ஸம். உச - ௧ச. வாசுதேவதருச்சாயா நாதிஶீதா நகர்மதா । நரகாங்காரஶமநீ ஸாகிமர்த்தம் நஸேவ்யதே ॥

† தை - உப - ௧ - சச. ‖ பார - சா - மோ.

வ்யா—அதாவது, ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலும், (அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி:) என்கிறபடியே கிஞ்சித்காராபாவத்தில் அதுதான் அநுபபந்நமாகையாலும், (கைங்கர்யம்) ஆத்மாவுக்கு (நித்யம்) என்கை. ஆகையாலிறே, * (நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி) என்றும், † (நித்யகிங்கரோபவாநி) என்றும் ஆசார்யர்கள் அருளிச்செய்தது.

அவ—(௬௧) நித்யமாயிருக்குமாகில் ப்ரார்த்திக்கவேணுமோ என்ன அருளிச்செய்கிறார், (நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும்) என்று.

(௬௧) நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும்.

வ்யா—அதாவது, விஷயம் உத்துங்கதத்வமாயிருக்கையாலும், ஆஶ்ரயபூதனான சேதநன் அத்யந்த பரதந்த்ரனாயிருக்கையாலும், ப்ரார்த்தநாவிஶேஷம் இல்லாதபோது கைங்கர்யம் ஸித்தியாமையாலும் (நித்யமாக ப்ரார்த்தித்தே பெறவேணும்) என்கை.

அவ—(௬௨) இது நித்யப்ரார்த்தநீயம் ஆகைக்கு நிதாநத்தை அருளிச்செய்கிறார், (ஶேஷிக்கு) என்று தொடங்கி.

(௬௨) ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும், ப்ராப்யமும்.

வ்யா—அதாவது, (நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்) என்கிறபடியே, ஶேஷிக்கு அதிஶயகரமல்லாத வஸ்துவுக்கு ஶேஷத்வம் இல்லாமையாலே, ஶேஷியான ஈஶ்வரனுக்குத் தன்னுடையவ்ருத்திவிஶேஷங்களாலே ப்ரீதிரூபமான (அதிஶயத்தை விளக்கை) ஶேஷபூதனானவனுக்குத்தன் ஸ்வரூபலாபமாய், அவனுடைய முகோல்லாஸாநுபவத்துக்கு உறுப்பாயிருக்கையாலே, (ப்ராப்யமும்) ஆயிருக்கும் என்கை. ஆகையாலே, நித்யப்ரார்த்தநீயமாயிருக்கும் என்று கருத்து.

அவ—(௬௩) அநந்தரம், சரமபதத்தை யுபாதாநம் பண்ணுகிறார், (நம:) என்று, அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (கைங்கர்யத்தில் களையறுக்கிறது) என்று.

* ஸ்தோத் - ௬௬. † ஸ்ரீ கத்ய - உ.

(சாங) (நம:) கைங்கர்யத்தில் களையறுக்கிறது,

வ்யா—அதாவது, நமஶ்ஶப்தம் ஸாமாந்யேந அஹங்கார மமகாரங்களைக் கழிக்கையாலே, திருமந்த்ரத்தில் மத்யமபதமான நமஶ்ஶப்தம்போலே, ஸ்வரூபோபாய புருஷார்த்த விரோதிகள் மூன்றையுங்கழிக்க வற்றாயிருந்ததேயாகிலும், இங்கந்நனன்றிக்கே, கைங்கர்யப்ரார்த்தநாநந்தரோக்தம் ஆகையாலே, அந்த (கைங்கர்யத்தில்) விரோதியைக்கழிக்கிறது என்கை.

அவ—(சாச) 'கைங்கர்யத்துக்குக் களையேதென்ன அருளிச்செய்கிறார், (களையாவது தனக்கென்னப்பண்ணுமது) என்று.

(சாச) களையாவது தனக்கென்னப் பண்ணுமது.

வ்யா—தனக்கென்னப் பண்ணுகையாவது, (போக்தாஹம மமபோகோயம்) என்கிறபடியே, அத்தைத்தன்னுடைய ரஸத்துக்குறுப்பாக நினைத்துப்பண்ணுகை; பகவந்முகவிகாஸஹேது ஆகையாலே இது நமக்காதரணீயம் என்கிற ப்ரதிபத்தியொழிய, இதில் போக்த்ருத்வ ப்ரதிபத்தியும், மதீயத்வப்ரதிபத்தியும் நடக்குமாகில், அபுருஷார்த்தமாயிறே, இருப்பது.

அவ—(சாரு) இன்னமும் இந்த கைங்கர்யப்ராப்திக்கு விரோதிகளானவையும் இதிலே தள்ளுண்ணும் என்கிறார், (இதிலே அவித்யாதிகளுங்கழியுண்ணும்) என்று.

(சாரு) இதிலே அவித்யாதிகளுங் கழியுண்ணும்.

வ்யா—அதாவது, அஹங்கார மமகார நிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிற இந்நமஸ்ஸிலே, ¶(அநாத்மந்யாத்ம புத்திர்யா அஸ்வேஸ்வமிதியாமதி:—அவித்யாதருஸம்பூதிபீஜமேதத்த்விதாஸ்திதம்) என்கிறபடியே, அநாத்மந்யாத்ம புத்யாதிகளை வடிவாகவுடைத்தாய், கர்மோத்பத்தி காரணமாயிருந்துள்ள அவித்யையும், தத்கார்யமான கர்மங்களும், தத்கார்யமாய்வரும் ப்ரக்ருதி ஸம்பந்தமும் எல்லாங் (கழியுண்ணும்) என்கை.

ஆகையிறே த்வயவிவரணமான கத்யத்திலே நமஶ்ஶப்தார்த்தத்தை அநுஸந்தித் தருளுகிறவளவில், * (மநோவாக்காயை:)

¶ வி - பு - ௬ - எ - கக. * ஸ்ரீகத்யே - க.

இத்யாதிசூர்ணையாலே, அக்ருத்யகரணத்யகில கர்மநிவ்ருத்தியை யும், * (அநாதிகாலப்ரவர்த்த) இத்யாதிசூர்ணையாலே, அவித்யா நிவ்ருத்தியையும், * (மதீயாநாதி) இத்யாதி சூர்ணையாலே, ப்ரக்ருதி ஸம்பந்த நிவ்ருத்தியையும் பாஷ்யகாரர் ப்ரார்த்தித்தருளிற்று.

ஆனாலும், இதுக்குப் ப்ரதாநார்த்தம் கைங்கர்யத்தில் ஸ்வப்ர யோஜந நிவ்ருத்தியாகையாலே அத்தை உபபாதிக்கிறார்மேல்.

அவ—(கூகூ) அதில் ப்ரதமத்திலே கைங்கர்யம் பண்ணும் போது தான் எப்படி யாகவேணுமென்ன அருளிச்செய்கிறார், ("உனக்கே நாமாட்செய்வோம்" என்னும்படியே யாகவேணும்) என்று.

---

(கூகூ) "உனக்கே நாமாட்செய்வோம்" என்னும் படியே ஆகவேணும்.

---

வ்யா—அதாவது, கைங்கர்யம் பண்ணுமளவில் (அகூ) "உன க்கே நாமாட்செய்வோம்" என்று, உனக்கும் எங்களுக்கும் ஆயி ருக்கு மிருப்புத்தவிர, உனக்கேயுகப்பாக நாங்களடிமை செய்ய வேணும் என்கிறபடியே, ஶேஷிக்கே உகப்பாகப் பண்ணவேணும் என்கை,

(அஎ) "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்றிறே, ஆழ் வாரும் அருளிச்செய்தது.

அவ—(கூஎ) இனி, இந்த கைங்கர்யத்துக்கு விக்நங்களை அரு ளிச்செய்கிறார், (ஸௌந்தர்யமி) த்யாதி வாக்யத் வயத்தாலே.

---

(கூஎ) ஸௌந்தர்யம் அந்தராயம்; கீழ்ச்சொன்ன கைங்கர்யமும் அப்படியே,

---

வ்யா—அதாவது, அவனுடைய விக்ரஹஸௌந்தர்யமும், சித் தாபஹாரியாய்க் கைசோரப் பண்ணுகையாலே கைங்கர்யத்துக்கு விக்நம்; இந்தமஸ்ஸூக்கு, கீழேசதுர்த்தியில்சொன்ன கைங்கர்ய மும் அபிமதவிஷய பரிசர்யைபோலே ஸ்வரஸத்துக்கு உடலாயிருக் கையாலே, அவனுடைய முகமலர்த்தியே ப்ரயோஜநமாக விருக்கு மதுக்கு அதுவும் விக்நமென்கை.

---

[அகூ] திருப்பா - உக. [அஎ] திரு - வா - ௨ - க - ௯.

அவ—(௬அ) இப்படியாகையால் இவ்விரோதி நிவர்த்தி ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கும்படியை யருளிச்செய்கிறார், (கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே) என்று தொடங்கி.

---

(௬அ) கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு.

---

வ்யா—அதாவது, சதுர்த்தியில் சொல்லுகிற கைங்கர்யப்ரார்த்தனை காதாசித்தமன்றிக்கே நித்யமாய்ச் செல்லுமாபோலே, இப்பதத்தில் சொல்லுகிற கைங்கர்யவிரோதி நிவர்த்திப் ப்ரார்த்தனையும், இங்கிருக்கும் காலத்தோடு, ப்ராப்ய பூமியில் போனகாலத்தோடு வாசியற எல்லாக்காலமும் நடக்கக்கடவதா யிருக்குமென்கை.

அவ—(௬௯) கந்தல் கழிந்த வங்கிலத்திலும் ஸ்வபோக்த்ருத்வோதய முண்டாமோ வென்ன அருளிச்செய்கிறார், (மருந்தேநங்கள்போக மகிழ்ச்சிக்கு என்று நின்றதிறே) என்று.

---

(௬௯) "மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்று நின்றதிறே.

பிள்ளை லோகாசிரியன் திருவடிகளே சரணம்.

முமுக்ஷுப்படி த்வயப்ரகரணம்

முற்றிற்று.

---

வ்யா—அதாவது, உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்கு வரும் ஆநந்தத்துக்கு ஸ்வபோக்த்ருத்வ புத்தியைவிளைவித்து, ஸ்வரூபத்தை அழியாதபடி ஸாத்மிப்பிக்கும் பேஷஜமானவனே என்று நித்யஸூரிகள்பேசும் பாசுரமாகச் சொல்லா நின்றதிறே யென்கை.

ஆகையால், அவ்விஷய வைலக்ஷண்ய ப்ரயுக்தமாய்வரும் ஸ்வபோக்த்ருத்வபுத்தி அங்கும் விளைகையாலே, இப்பதத்தில் ப்ரார்த்தனை என்றுமுண்டு என்னுமிடம் ஸித்தமென்றதாயிற்று. ஆகையிறே, முக்தர்க்கு லக்ஷணம் சொல்லுகிறவிடத்திலே (நமஇத்யேவவாதிந:) என்றது.

ஆக, புருஷகாரத்தையும், தந்நித்யயோகத்தையும், தததப்ராவிதமான வாத்ஸல்யாதி குணங்களையும், அந்த குணப்ரகாசகமான

திவ்யமங்கள விக்ரஹத்தையும், குணவிக்ரஹ விஶிஷ்ட வஸ்துவி னுடைய உபாயத்வத்தையும், அவ்வுபாய ஸ்வீகாரத்தையும், தத் பலமான கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தி ஒருமிதுநமென்னுமத் தையும், அவ்வஸ்துவினுடைய ஸர்வஶேஷித்வத்தையும், தத்விஷய கைங்கர்யத்தையும், கைங்கர்யவிரோதி நிவர்த்தியையும் சொல்லிற்று யிற்று.

பெரியஜீயர் திருவடிகளே ஶரணம்.

---

முமுக்ஷுப்படி வ்யாக்யாநம்

த்வயப்ரகரணம்.

முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

முமுக்ஷுப்படி—வ்யாக்யாநம்.

# சரமச்லோகப்ரகரணம்.



அவதாரிகை:—மத்யமரஹஸ்யமான த்வயத்தினுடைய அர்த்தத்தை அருளிச்செய்த அநந்தரம், அதில் பூர்வவாக்யத்தில் சொல்லுகிற உபாயவரணம் ஸர்வேஶ்வரன் தானே விதிக்கையாலே ததபிமதமென்னுமத்தையும், வரணாங்கமான ஸாதநாந்தர பரித்யாகத்தையும், வரணத்தில் ஸாதநத்வபுத்தி ராஹித்யத்தையும் ஶாப்தமாகப் பூர்வார்த்தத்தாலே ப்ரதிபாதிக்கையாலும், உத்தரவாக்யத்தில் சொல்லுகிற கைங்கர்யத்துக்கு பூர்வபாவியான ப்ராப்தி ப்ரதிபந்தக ஸகலபாப விமோசநத்தையும், உத்தரார்த்தத்தாலே ஶாப்தமாக ப்ரதிபாதிக்கையாலும், த்வயத்துக்கு விவரணமாய், பஞ்சமவேதஸாரபூதகீதோபநிஷத்தாத்பர்யமாய், சரமரஹஸ்யமாயிருக்கிற சரமச்லோகத்தினுடைய அர்த்தத்தை ஸம்ப்ரதாயவிபர்யயமற அருளிச்செய்கிறார்.

இதில் அர்த்தங்கேட்கைக்காகவிறே, எம்பெருமானார் பதினெட்டுபர்யாயந் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் எழுந்தருளிற்று.

நம்பிதாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும், இதுக்கதிகாரிகள் இல்லாமையையும் பார்த்திறே, இவருடைய ஆஸ்திக்யாதர பரீக்ஷார்த்தமாகவும் பலகால் நடந்து துவளப்பண்ணி, சூழரவுகொண்டு மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தி அருளிச்செய்தருளிற்று.

நிஷ்க்ருஷ்ட ஸத்வநிஷ்டனாய், பரமாத்மநிரக்தனாய், அபரமாத்மநி வைராக்யமுடையனாய், ப்ரமாண பரதந்த்ரனாய், பகவத்வைபவம் ஶ்ருதமானால் அது உபபந்நம் என்னும்படியான விஸ்ரம்ப பாஹுள்யமுடையனாய், ஆஸ்திகாக்ரேஸரனாயிருப்பான் ஒருவனுண்டாகில் அவன் இந்த ச்லோகார்த்த ஶ்ரவணாநுஷ்டாநத்துக் கதிகாரி யாகையாலே, அதிகாரி துர்லபத்தாலும், அர்த்த கௌரவத்தாலும், இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு

போந்தார்கள் எம்பெருமானருக்கு முன்புள்ளார். ஸம்ஸாரிகள் துர்க்கதிகண்டு பொறுக்கமாட்டாதபடி க்ருபைகரை புரண்டிருக்கையாலே, அர்த்தத்தின் ஶீர்மைபாராதே அநர்த்தத்தையே பார்த்து வெளியிட்டருளினர் எம்பெருமானர்.

அப்படி உபதேஶித்துவிடுகிற மாத்ரமன்றிக்கே, இவ்வர்த்தத்தை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்க வேணுமென்னும் பரம க்ருபையாலேயிறே, இது தன்னைப் பலப்ரபந்தங்களிலும் ஸங்க்ரஹ விஸ்தரரூபேண இவரருளிச்செய்தது. மற்றுள்ள ப்ரபந்தங்கள் எல்லாவற்றிலும் போலன்றிக்கே, ஸ்த்ரீபாலர்களுக்கும் அதிகரிக்கலாம்படி தெளிய அருளிச்செய்தது, இப்ப்ரபந்தத்திலேயிறே.

அவ—(க) இதில் ப்ரதமத்திலே இந்த ஶ்லோகார்த்தத்தினுடைய கௌரவத்தை எல்லாருடைய நெஞ்சிலும் படுத்துகைக்காக இது தனக்கு சரமஶ்லோகம் என்று திருநாமம் ஆகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிருர், (கீழே சில உபாயவிஶேஷங்களை) என்று தொடங்கி.

---

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

(க) கீழே சில உபாயவிஶேஷங்களை உபதேஶிக்க, அவை துஶ்ஶகங்கள் என்றும், ஸ்வரூபவிரோதிகள் என்றும் நினைத்து ஶோகாவிஷ்டனுன அர்ஜ்ஜுநனைக் குறித்து அவனுடைய ஶோகநிவ்ருத்யர்த்தமாக இனி இதுக்கு அவ்வருகில்லை என்னும்படியான சரமோபாயத்தை அருளிச்செய்கையாலே சரமஶ்லோகம் என்றிதுக்குப் பேராயிருக்கிறது.

---

வ்யா—அதாவது, இந்த ஶ்லோகத்துக்குக் (கீழே) அநேகாத்யாயங்களிலே, கர்மஜ்ஞாநாதிகளான (சில உபாயவிஶேஷங்களை) ஸ்வப்ராப்தி லக்ஷணமோக்ஷஸாதநமாக விஸ்தரேண வுபதேசித்தருளக்கேட்டு, காயக்லேஶரூபமாகையாலும், இந்த்ரியஜயம் அரிதாகையாலும் ஸாவதாநமாகச் சிரகாலம் ஸாதிக்கவேண்டி யிருக்கையாலும், (அவை) அநுஷ்டிக்க அஶக்யங்கள் என்றும், ஸ்வஶரீரத்வ கதநாதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்ட பரதந்த்ரமான (ஸ்வரூ

பத்துக்கு ஸ்வயத்நரூபங்களான இவை, விரோதிகள் என்றும் புத்தி பண்ணி, இவற்றாலே எம்பெருமானைப் பெறவேணும் என்பதொன் றில்லை, இனி, இழந்தேபோமத் தனையாகாதே (என்கிற) ஶோகத் தாலே யாவிஷ்டனான அர்ஜுநனைக்குறித்து, அவனுடைய அந்த ஶோகம் போகைக்காக ஸௌலப்யத்தாலும், ஸ்வரூபாநுரூபதை யாலும், (இனி இதுக்கு) மேலில்லை யென்னும்படியான சரமமான உபாயத்தை அருளிச்செய்கையாலே சரமஶ்லோகம் என்று இதுக் குத் திருநாமமா யிருக்கிறது என்கை.

அவ—(௨) இனி, இஶ்ஶ்லோகத்துக்கு வாக்யார்த்தம் அருளிச் செய்கிறார், (இதில் பூர்வார்த்தத்தாலே) என்றுதொடங்கி.

(௨) இதில், பூர்வார்த்தத்தாலே அதிகாரிக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்; உத்தரார்த்தத்தாலே உபாயக்ருத் யத்தை அருளிச்செய்கிறான்.

வ்யா—அதாவது, அர்த்தத்வயாத்மகமான இந்தஶ்லோகத்தில் (பூர்வார்த்தத்தாலே) இவ்வுபாயத்துக்கு (அதிகாரி)ஆனவன் செய்யு மம்ஶத்தை (அருளிச்செய்கிறான்); (உத்தரார்த்தத்தாலே) உபாய பூதனான தான் இவனுக்குச்செய்யும் அம்ஶத்தை (அருளிச்செய் கிறான்) என்கை.

அவ—(௩) அதிகாரி க்ருத்யமாவதேதென்ன அருளிச்செய் கிறார், (அதிகாரிக்கு க்ருத்யமாவது உபாயபரிக்ரஹம்) என்று.

(௩) அதிகாரிக்கு க்ருத்யமாவது உபாயபரிக்ரஹம்.

வ்யா—அதாவது, (அதிகாரி) ஆனவனுக்கு இங்கு செய்யத் தக்கது இவ்வுபாயத்தை ஸ்வீகரிக்கை என்கை.

அவ—(௪) ஆனால் அவ்வளவை விதியாதே உபாயாந்தரபரித் யாகஞ் சொல்லுவானென்னென்ன அருளிச்செய்கிறார், (அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்) என்று.

(௪) அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்.

வ்யா—அதாவது, அந்த உபாயஸ்வீகாரத்தை உபாயாந்தர பரித்யாகமாகிற அங்கத்தோடே கூட விதிக்கிறான் என்கை.

"ப்ரக்ஷாள்ய பாதாவாசாமேத் ஸ்நாத்வா விதிவதர்ச்சயேத் - ஸ்த்தித் வார்க்க்யம் பாகவேதத்யாத் த்யாத்வாதேவம் ஜபேந்மநும்" என்று, ஆசமநாதிகளுக்கு அங்கமாகச்சொன்ன பாதப்ரக்ஷாளநாதிகளையொழிய இவையநுஷ்டிக்க வோண்ணுதாப்போலே, இங்கும் ல்யபந்தபதத்தாலே அங்கமாகச் சொல்லுகிற உபாயாந்தரத்யாகத்தையொழிய ஸ்வீகாரம் அநுபபந்நம் என்னுமிடம் ஸித்தமிறே.

ஆகையால் (ஸர்வதர்மாந் பரித்யஜ்ய்த்திதஸ்சேத்) என்று, துஷ்கரத்வ புத்தியாலே ஸ்வதஃ ப்ராப்தமான உபாயாந்தர பரித்யாகத்தை அநுவதித்து, ஸித்தோபாய ஸ்வீகாரத்தை விதிக்கிறதுஃ என்கிற அநுவாதபக்ஷம் அயுக்தம் என்றதாயிற்று.

அவ—(ரு) ஆனால் ஸ்வரூபத்வாதிகளாலே ராகப்ராப்தமான இதுக்கு விதிதான் வேணுமோவென்ன அருளிச்செய்கிறார், (ராகப்ராப்தமான) என்று தொடங்கி.

---

(ரு) ராகப்ராப்தமான உபாயந்தானே வைதமானால் கடுகபரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே.

---

வ்யா—அதாவது, போக்யதையாலே (ராகப்ராப்தமான) க்ஷீரத்தை பித்தரோகத்துக்கு மருந்தாகக் கொடுக்கச்சொல்லி விதித்தால் ஶீக்ரமாகக் கைக்கொள்ளுகைக்கு (உடல்) ஆமாபோலே. உபாயாந்தரங்களில் காட்டில் இதுக்குண்டான வைலக்ஷண்யத்தாலே, சேதநனுடைய (ராக)தஃ (ப்ராப்தமாய்) இருந்துள்ள (உபாயந்தானே) இத்தைஸ்வீகரியென்னும் விதி ப்ரயுக்தமும் (ஆனால்) ஶீக்ரமாகஸ்வீகரிக் (கைக்குடலாயிருக்குமிறே) என்கை.

அவ—(சு) இனி இதுக்கு ப்ரதிபதம், அர்த்தமருளிச்செய்வதாக பூர்வார்த்தபத ஸங்க்யையை அருளிச்செய்கிறார், (இதில் பூர்வார்த்தம் ஆறுபதம்) என்று.

---

(சு) இதில் பூர்வார்த்தமாறுபதம்.

---

அவ—(எ) அதில் ப்ரதமபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (ஸர்வதர்மாந்) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (எல்லாதர்மங்களையும்) என்று.

---

(எ) [ஸர்வதர்மாந்] எல்லாதர்மங்களையும்.

---

அவ—(அ) இதுதான் தர்மமும் பஹுவசநமும் ஸர்வஸப்தமுமாய், த்ரிப்ரகாரமுமாய் இருக்கையாலே, மூன்றுக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக ப்ரதமம் தர்மலக்ஷணத்தை அருளிச்செய்கிறார், (தர்மமாவது, பலஸாதநமா யிருக்குமது) என்று.

(அ) தர்மமாவது பலஸாதநமாய் இருக்குமது.

அவ—(கூ) தர்மஸப்தம் த்ருஷ்டபல ஸாதநத்திலும் வ்யாப்தமாகையால் அத்தை வ்யாவர்த்திக்கிறார், (இங்குச்சொல்லுகிற தர்மஸப்தம்) என்றுதொடங்கி.

(கூ) இங்குச்சொல்லுகிற தர்மஸப்தம் த்ருஷ்ட பல ஸாதநங்களைச் சொல்லுகை அன்றிக்கே, மோக்ஷபல ஸாதநங்களைச் சொல்லுகிறது.

வ்யா—அதாவது, பூர்வோபாயங்கள் தன்னை உபதேசிக்கிறபோதே த்ருஷ்டபல ஸாதநங்கள் வ்யாவ்ருத்தங்களாகையாலும், மோக்ஷோபாயங்களை உபதேசித்துவருகிற ப்ரகரணமாகையாலும் இவ்விடத்தில் (சொல்லுகிற தர்மஸப்தம்) புத்ரபஸ்வந்நாத்யைஹிகமாயும்; ஸ்வர்க்காத்யாமுஷ்மிகமாயு மிருக்குமுள்ள த்ருஷ்டபலங்களுக்கு (ஸாதநங்களானவற்றைச் சொல்லுகை அன்றிக்கே) பகவத்ப்ராப்திரூபமான (மோக்ஷபல)த்துக்கு ஸாதநமா யுள்ளவற்றைச் (சொல்லுகிறது) என்கை.

அவ—(கo) இனிமேல் பஹுவசநார்த்தத்தை அருளிச்செய்கிறார், (அவைதான்) என்றுதொடங்கி.

(ய) அவைதான் ஶ்ருதி ஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே பஹுவசநப்ரயோகம் பண்ணுகிறது.

வ்யா—அதாவது, அந்த மோக்ஷபலஸாதநங்கள் தான் உபப்ருஹ்மயோப ப்ருஹ்மணங்களாய் யிருக்குமுள்ள (ஶ்ருதிஸ்ம்ருதிகளாலே), (விஹிதங்களாய்)க்கொண்டு அநேகங்களாய் (இருக்கையாலே), (தர்மாந்) என்று, (பஹுவசநப்ரயோகம் பண்ணுகிறது) என்கை.

அவ—(கக) அப்படியிருந்துள்ளவை தானெவையென்ன அருளிச்செய்கிறார், (அவையாவன) என்று தொடங்கி.

---

(கக) அவையாவன, கர்மஜ்ஞாந பக்தியோகங்களும், அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தமவித்யை, தேஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாயபுத்யா செய்யுமவையும்.

---

வ்யா—அதாவது, கீழ் பலவாகச் சொல்லப்பட்ட அவையாவன *(கர்மணைவஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய꞉) †(தஸ்மாதஸக்தஸ்ஸததம் கார்யம் கர்மஸமாசர) என்று, ஸ்வதந்த்ர ஸாதநமாக உக்தமான (கர்ம) யோகமும், ‡(ஸர்வம் கர்மாகிலம்பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே) ¶(நஹிஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிஹவித்யதே) §(ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதேததா) என்று, சொல்லப்பட்ட கர்மஸாத்யமான (ஜ்ஞாந) யோகமும், ‖(பக்த்யாத்வநந்யயாஶக்ய꞉) ††(மந்மநாபவமத்பக்த꞉) இத்யாதிகளாலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞாநஸஹக்ருதமான (பக்தியோகமும்) ஆகிற இவையும், ‡‡(ஜந்மகர்ம சமேதிவ்யம் ஏவம்யோவேத்தி தத்த்வத꞉—த்யக்த்வாதேஹம்புநர்ஜந்ம நைதிமாமேதிஸோர்ஜுந) என்று விரோதிநிவ்ருத்தி பூர்வகமான பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாகச் சொல்லப்பட்ட, அவதார ரஹஸ்யஜ்ஞாநம், ¶¶(ஏதத்புத்த்வா புத்திமாந்ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்சபாரத) என்று, அபிமத பலலாபத்தாலே க்ருதக்ருத்யனுக்குமென்கிற (புருஷோத்தமவித்யை), §§(தேஶோயம் ஸர்வகாமதுக்) என்று, ஸர்வகாம பல ப்ரதமாகச் சொல்லுகிற புண்யக்ஷேத்ர (வாஸம்), ‖‖(ஸர்வபாப விஶுத்தாத்மாயாதி ப்ரஹ்மஸநாதநம்) என்று, ஸர்வபாபவிமோசந பூர்வகமான பகவத்ப்ராப்தியைப் பலமாகச்சொல்லுகிற (திருநாம ஸங்கீர்த்தநம்), **(க்ருதேநவாத

---

* ஸ்ரீகீதை-௩-௨௦. † ஸ்ரீகீதை-௩-௧௯. ‡ ஸ்ரீகீதை-௪-௩௩.
¶ ஸ்ரீகீதை-௪-௩௮. § ஸ்ரீகீதை-௪-௩௭.
‖ ஸ்ரீகீதை-௧௧-௫௪. †† ஸ்ரீகீதை-௯-௩௪. ‡‡ ஸ்ரீகீதை-௪-௯.
¶¶ ஸ்ரீகீதை-௧௫-௨௦. §§ காருட-ஸ்ரீரங்கமாஹாத்ம்யம். ௧௧-௫.
‖‖ பார-ஆநு-௧௪௯-௧௩௧. ** நாரஸிம்ஹபுராணம்-௩௪-௨௭.

ஸதைலேநதீபம் யோஜ்வாலயேந்நரஃ—விஷ்ணவே விதிவத்பக்த்யா தஸ்யபுண்ய பலம்ச்ருணு-விஹாயஸகலம்பாபம் ஸஹஸ்ராதித்ய ஸந்நிபஃ—ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே) என்று, பாபநிவ்ருத்தி பூர்வகமான பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாகச் சொல்லப்படுகிற (திருவிளக்கெரிக்கை), அப்படி விரோதிநிவ்ருத்தி பூர்வக பகவத்ப்ராப்தி ஸாதநமாகச் சொல்லப்படும் (திருமாலையெடுக்கை) முதலாக ஸாதந (புத்யாசெய்யப்படு மவையும்) என்கை.

அவ—(கஉ) இனி, ஸர்வஶப்தார்த்தத்தை அருளிச்செய்கிறார், (ஸர்வஶப்தத்தாலே) என்றுதொடங்கி.

(கஉ) ஸர்வஶப்தத்தாலே அவ்வோஸாதந விஶேஷங்களை அநுஷ்டிக்கு மிடத்தில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது.

வ்யா—அதாவது, தர்மவிஶேஷணமான ஸர்வஶப்தத்தாலே பஹுவசநோக்தமான (அவ்வோஸாதந விஶேஷங்களை அநுஷ்டிக்கும் இடத்தில்), *(ஸந்த்யாஹீநோஶுசி ர்நித்யமநர்ஹஸ் ஸர்வகர்மஸு) என்கிறபடியே அயோக்யனாகாமல் தன்னை அநுஷ்டிக்கையாலே, (அவற்றுக்கு யோக்யன்) ஆகையை உண்டாக்கிக்கொடுக்கும் ஸந்த்யாவந்தந பஞ்சமஹாயஜ்ஞாதிகளான (நித்யகர்மங்களைச் சொல்லுகிறது) என்கை.

அவ—(கஙு) உக்தத்தை நிகமிக்கிறார், (ஆக) என்றுதொடங்கி.

(கஙு) ஆக, ஶ்ருதிஸ்ம்ருதி சோதிதங்களாய், நித்ய நைமித்திகாதி ரூபங்களான கர்மயோகாத்யுபாயங்கள் என்றபடி.

வ்யா—அதாவது, (ஆக), கீழ்ச்சொன்ன எல்லாவற்றாலும் †(சோதநாலக்ஷணோர்த்தோதர்மஃ)என்று, சோதனையாகிற விதிவாக்யத்தை ப்ரமாணமாக வுடைத்தான அர்த்தம் தர்மம் என்கையாலே, (ஶ்ருதிஸ்ம்ருதி) களாகிற ப்ரமாணங்களாலே விதிக்கப்பட்டுள்ளவையாய், (நித்யநைமித்திகம்) முதலானவற்றை வடிவாக வுடைத்தான (கர்மயோகம்) தொடக்கமான (உபாயங்களை யென்றபடி) என்கை.

* வ்யாஸஸ்ம்ருதி க - கஎ. † பூர்வமீமாம்ஸா க - க . உ,

அவ—(கச) ஸ்வரூப விருத்தத்வாத் அதர்மமாகச் சொல்ல வேண்டுமவற்றை தர்மம் என்கிறதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார், (இவற்றை) என்றுதொடங்கி.

---

(கச) இவற்றை தர்மம் என்கிறது ப்ரமித்த அர்ஜுநன் கருத்தாலே.

---

வ்யா—அதாவது, பகவதத்யந்த பாரதந்த்ர்யமாகிற உத்தேஶ்யத்துக்கு விரோதியா யிருக்கையாலே, அதர்மரூபத வாச்யங்களாக ப்ராப்தங்களாயிருக்கிற (இவற்றைத் தர்மமென்று) சொல்லுகிறது, ஸ்வதர்மமான யுத்தத்தை அதர்மம் என்றும், இவற்றைதர்மம் என்றும் (ப்ரமித்த அர்ஜுநந)னுடைய நினைவாலே இத்தனை என்கை.

அவ—(கரு) ஆக, ப்ரதமபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று. அநந்தரம், த்விதீயபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (பரித்யஜ்ய) என்று.

---

(கரு) (பரித்யஜ்ய.)

---

அவ—(கஎ) இதுவும் த்யாகமும், ல்யப்பும், உபஸர்க்கமுமாய், த்ரிப்ரகாரமா யிருக்கையாலே, அதில் த்யாகவேஷத்தை முந்துற அருளிச்செய்கிறார், (த்யாகமாவது) என்றுதொடங்கி.

---

(கஅ) த்யாகமாவது, உக்தோபாயங்களை அநுஸந்தித்து, ஶுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப் போலேயும், விபரீததிஶாகமநம் பண்ணுவாரைப்போலேயும், அநுபாயங்களிலே உபாயபுத்தி பண்ணினோம் என்கிற புத்திவிஶேஷத்தோடே த்யஜிக்கை.

---

வ்யா—அதாவது, இவ்விடத்தில் சொல்லுகிற த்யாகமாவது கேவலம் விடுகை அன்று, கீழ்ச்சொல்லப்பட்ட உபாயங்களின் படியை (அநுஸந்தித்து), ரஜதமல்லாத (ஶுக்திகையிலே ரஜத புத்தி பண்ணுவாரைப்போலேயும்), ஸ்வகார்ய ஸித்திக்குடலான ஒருதிக்கிலே போகக்கோலி, தத்விபரீதமான திக்கை அதுவாக நினைத்துப் போவாரைப்போலேயும், பகவத்ப்ராப்த்யுபாயா பேக்ஷரான நாம், உபாய மல்லாதவற்றிலே (உபாயபுத்தி பண்ணினோம் என்கிற புத்தி விஶேஷத்தோடே) விடுகை என்றபடி.

அவ—(கஎ) இனி, உபஸர்கார்த்தத்தை அருளிச்செய்கிறார், (பரி என்கிற) என்றுதொடங்கி.

(கஎ) (பரி) என்கிற உபஸர்க்கத்தாலே பாதகாதிகளை விடுமாபோலே, ருசிவாஸனைகளோடும், லஜ்ஜையோடுங்கூட மறுவலிடாதபடி விடவேணும் என்கிறது.

வ்யா—அதாவது, (பரித்யஜ்ய) என்று, ஸாகல்யபரமாகக் கொள்ளுமளவில், அது ஸர்வஶப்தத்திலே உக்தமாகையாலே அபேக்ஷிதமல்லாமையாலே, நிவ்ருத்திக்கு வாசகமான பரியென்கிற இந்த வுபஸர்க்கத்தாலே *(ப்ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் குர்வங்கநாகமஃ) என்கிற, பாதகங்கள் முதலானவற்றை விடுமளவில், அவற்றில் புநரந்வயத்துக்கு உறுப்பான ருசிவாஸனைகளோடேகூட நாம் இதைச்செய்வதே! என்கிற லஜ்ஜாஸஹிதநாய்க்கொண்டு விடுமாபோலே, †(அதபாதக பீதஸ்த்வம்) என்று, தர்மதேவதை பாதகமாகச்சொன்ன உபாயாந்தரங்களை விடுமளவில், புத்திபூர்வகமாக அவற்றிலே ப்ரவர்த்திக்கைக்கு உறுப்பான ருசியும், அபுத்திபூர்வகமாக மூளுகைக்கு உறுப்பான வாஸனையும் ஆகிற அவற்றோடேகூட பகவதேகஸாதநதைக வேஷமான ஸ்வஸ்வரூபத்துக்கு அத்யந்த விருத்த மானவற்றை நாம்செய்வதே! என்கிற லஜ்ஜாஸஹிதனாய்க் கொண்டு, மீளவும் அவற்றில் அந்வயம்வாராதபடி விடவேணும் என்று, சொல்லுகிறது என்கை.

அவ—(கஅ) இனி, ல்யபர்த்தத்தை அருளிச்செய்கிறார், (ல்யப்பாலே) என்றுதொடங்கி,

(கஅ) ல்யப்பாலே, "ஸ்நாத்வாபுஞ்ஜீத" என்னுமாபோலே, உபாயாந்தரங்களைவிட்டே பற்றவேணும் என்கிறது.

வ்யா—அதாவது, (த்யஜ்ய) என்கிற ல்யப்பாலே, ¶(புக்த்வா சாந்த்ராயணஞ்சரேத்) என்னுமாபோலன்றிக்கே, (ஸ்நாத்வாபுஞ்ஜீத) என்கிறவிதி, புஜிக்குமளவில் ஸ்நாநம்பண்ணியே புஜிக்கவேணும் என்கிற நியமத்தைச் சொல்லுமாபோலே, ஸித்தோபாயத்தைப் பரி

* மநுஸ்ம்ருதி - கக - ருச. † விஷ்ணுதர்மம், எஎ - எக.
¶ பார-ஆதி-வைஷ்ணவதர்ம-கூஎ-கச.

(க்ரஹிக்குமளவில் த்யாஜ்யமான வுபாயாந்தரங்களை த்யஜித்தேபரி) க்ரஹிக்கவேணும் என்கிற நியமத்தைச் சொல்லுகிறது என்கை.

அவ—(கக) இப்படிவிட்டே பற்றவேணும் என்கிற இதின் கருத்தை அருளிச்செய்கிறார், (சசால) என்று தொடங்கி,

(கக) "சசாலசாபஞ் சமுமோசவீர:" என்கிறபடியே, இவை அநுபாயங்களான மாத்ர மன்றிக்கே காலீகட்டு என்கிறது.

வ்யா—அதாவது, § (யோவஜ்ரபாதாஶநி ஸந்நிபாதாந்நசுக்ஷுபே நா பிசசாலராஜா—ஸராமபாணாபிஹதோப்ரஶார்த்தஶ் சசால சாபஂச முமோசவீர:) என்கிற ஶ்லோகத்தில், ராவணன் ராமஶரங்களாலே மிகவும் ஈடுபட்டு, நிலைகலங்கி, போகப்பார்த்த வளவிலும் கையில் வில்லிருக்குமளவும் பெருமாள் போகவொட்டாமையாலே பின்பு பொகட்டவில்லு, கையில் இருந்தபோது, ப்ரதிபக்ஷஜயத்துக்கு ஸாதநமாகாத மாத்ரமன்றிக்கே, * (கச்சாநுஜாநாமி) என்று, பின்புபண்ணின அநுமதி, பெருமாள் அப்போது பண்ணக்காணாமையாலே, போகவுமொண்ணாதபடி கால்கட்டானமைச் சொல்லுகிறபடியே, உபாயாந்தரங்களான இவற்றிலே, ஈஷதந்வயங்கிடக்கிலும் இவைபேற்றுக்கு ஸாதநமாகாத மாத்ரமன்றிக்கே, பேற்றுக்கு ப்ரதிபந்தகமாய்த் தலைக்கட்டும் என்றபடி.

அவ—(உ0) இன்னமும், இவற்றில் அந்வயம் இழவுக்குடலாம் என்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார், (சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்குறுப்பு) என்று.

(உ0) சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்குறுப்பு.

வ்யா—அதாவது, முன்பே வரப்ரதாநத்தைப் பண்ணிவைத்து இப்போதாக மறுக்கவொண்ணாது என்று, ஆபாஸமான ஸத்யதர்மத்தைப்பற்றி நின்று, † (ராமோவிக்ரஹவாந்தர்ம:) என்கிறபெருமாளோடேகூடி வாழ்விருந்த பேற்றையிழந்த சக்ரவர்த்தியைப்போலே, ஆபாஸமான உபாயாந்தரங்களிலே அந்வயித்து நிற்கையாகிறது, ¶ (க்ர்ஷ்ணஂ தர்மஂ ஸநாதநம்) என்று, ஸநாதநதர்மமான

§ ஸ்ரீரா - யுத் - கஉக.   * ஸ்ரீரா - யுத் - நிக - கஉஎ
† ஸ்ரீரா - அயோ - ந - சங.   ¶ பார - ஆ - அ - உக.

பகவத் விஷயத்தோடேகூடி வாழுகையாகிற பேற்றை (இழக்கைக் குறுப்)பாய்விடும் என்கை.

அவ—(உக) இனி, இங்குச்சொன்ன ஸர்வதர்ம பரித்யாகத்தின் கருத்தறியாதார் சொல்லும் தூஷணத்தைப் பரிஹரிக்கைக்காக தத்பக்ஷத்தை உத்க்ஷேபிக்கிறார், (ஸர்வதர்மங்களையும்) என்று தொடங்கி,

---

(உக) ஸர்வதர்மங்களையும் விட்டென்று சொல்லுகையாலே சிலர் அதர்மங்கள் புகுரும் என்றார்கள்.

---

வ்யா—அதாவது, த்யாஜ்யமான தர்மந்தான், (இதம்குரு, இதம்மாகார்ஷீ:) என்று, விதிநிஷேதாத்மகமா யிருக்கையாலே, (ஸர்வதர்மங்களையும்விட்டு என்று சொல்லுகையாலே), விஹிதாநுஷ்டாநத்தோபாதி நிஷித்தபரிஹாரமும் ஒக்கத்தள்ளுண்ணுமளவில், அடைத்தகதவைத் திறந்தால் நிஹீநபதார்த்தங்கள் புகுருமாபோலே, அதர்மங்களான நிஷித்த ப்ரவ்ருத்திகள் புகுரும் என்று சிலர் சொன்னார்கள் என்கை.

அவ—(உஉ) அத்தைப்பரிஹரிக்கிறார், (அதுகூடாது, அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே) என்று.

---

(உஉ) அதுகூடாது; அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே.

---

வ்யா—அதாவது, ஸர்வதர்மங்களையும் விடச்சொன்ன இத்தால் அதர்மங்கள் புகுரும் என்கிற விது ஸம்பவியாது ; தர்மங்களை விடசொன்ன மாத்ரம் ஒழிய, (அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே) என்கை.

அவ—(உ௩) அதர்ம நிவ்ருத்தியையும் தர்மஶப்தவாச்யமாகையாலே, அத்தைவிடச்சொன்னால், அதர்மத்தைச் செய்யென்னுமிடம் அர்த்தாதுக்தமாகாதோ என்கிற ப்ரதிவாத்யுக்தியை அநுவதிக்கிறார், (தன்னடையே சொல்லிற்றாகாதோ வென்னில்) என்று.

---

(உ௩) தன்னடையே சொல்லிற்றாகாதோ என்னில்.

---

அவ—(உச) அதுக்குத்தரம் அருளிச்செய்கிறார், (ஆகாது, தர்மஶப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டாமையாலே) என்று.

(உச) ஆகாது, தர்மபந்தம் அதர்மநிவ்ருத்தியைக் காட்டாமையாலே.

வ்யா—அதாவது, தர்மங்களை விடச்சொன்ன இத்தால், அதர்மங்களைச் செய்யென்னும் இடம் (தந்நடையே சொல்லிற்று) காது, (தர்மபந்தம், அதர்மநிவ்ரு) த்யாத்யங்க ஸஹிதமாய் ப்ரதாநமாயிருந்துள்ள விஹிதாநுஷ்ட்டாநத்தைக் காட்டுமதொழிய, ஸாமாந்யேந (அதர்மநிவ்ருத்தி) மாத்ரத்தைக் (காட்டாமையாலே) என்கை.

அவ—(உரு) அதர்மநிவ்ருத்திக்கு தர்மபந்த வாச்யத்வம் முக்யமாக வில்லையேயாகிலும், ஸர்வபந்த ஸாஹித்யத்தாலே தர்மபந்தம், விஶேஷணபூதமான இதுதன்னையுங்காட்டாதோ என்ன அருளிச்செய்கிறார், (காட்டினாலும்) என்றுதொடங்கி.

(உரு) காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்று மித்தனை.

வ்யா—அதாவது, அப்படி (காட்டிற்று)கிலும், அது இவ்விடத்தில் விவக்ஷிதம் அல்லாமையாலே, (அத்தையொழிந்த) விஹிதாநுஷ்ட்டாந ரூபதர்மங்களான (வற்றைச் சொல்லிற்று மித்தனை) என்கை.

அவ—(உசா) இங்ஙன், ஒதுக்குகிறது என்கொண்டென்ன அருளிச்செய்கிறார், (தன்னையும்) என்றுதொடங்கி.

(உசா) தன்னையும், ஈஶ்வரனையும், பலத்தையும் பார்த்தால் அவை புகுரவழி இல்லை.

வ்யா—அதாவது, அதர்மாநுஷ்ட்டாநம் ஶேஷிக்கு அநிஷ்டம் ஆகையாலே, அவனுக்கு அதிஶய கரணமதுஒழிய அநிஷ்டகரணத்தை சேராதபடியான ஸ்வரூபத்தையுடைய (தன்னைப்பார்த்தாலும்), ஸஹாயாந்தர ஸம்ஸர்காஸஹதையாலே, இத்தலையில் ஸ்வயத்ந நிவ்ருத்தி ஒழிய ப்ரவ்ருத்யம்ஶத்தில் ஒன்றையும்பொறாத உபாயபூதனான (ஈஶ்வரனைப் பார்த்தாலும்), இவனுடைய ப்ரவ்ருத்திக்கு பலம் அவனுடைய ப்ரீதி ஆகையாலே, தாத்ருஶமான (பலத்தைப் பார்த்தாலும்); இம்மூன்றுக்கும் விருத்தங்களான (அவை

புகுரவழி இல்லை) என்கை. ஆகையால் தர்மஸப்தம் அதர்ம நிவ்ரு த்தியைக் காட்டிற்றாகிலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்று கக் கொள்ளவேணும் என்றுகருத்து.

அவ—(உஎ)ஆக, த்விதீயபதார்த்தத்தை அருளிச்செய்தாரா யிற்று. அநந்தரம் த்ருதீயபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (மாம்) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (ஸர்வரக்ஷகனாய்) என்றுதொடங்கி.

---

(உஎ) (மாம்) ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையா ளாய், உன்னிசைவுபார்த்து, உன்தோஷத்தைப் போக்ய மாகக்கொண்டு, உனக்குப்புகலாய், நீர்சுடுமாபோலே சேர்ப்பாரே பிரிக்கும்போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை.

---

வ்யா—அதாவது, நம்முடைய ரக்ஷணம் இவன் பண்ணுமோ, பண்ணானோ என்று ஸம்ஸயிக்க வேண்டாதபடி ஸர்வருடையவும் ரக்ஷணத்திலே தீக்ஷிதனாய், தன் பெருமையையும், நம் சிறுமையை யும் பார்த்து நம்மோடு கலப்பற்றிருக்குமோ என்ன வேண்டாதபடி ‡ (ஸேநயோருபயோர்மத்யேரதம் ஸ்த்தாபய) என்று, ஏவிக்கார்யங்கொள்ளலாம்படி (உனக்குக்கையாளாய்), உன்னை ரக்ஷிக்கையில் உண்டான நசையாலே, † (ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே) என்கிற படியே, ரக்ஷ்யபூதனை (உன்னிசைவுபார்த்து), நங்குற்றங்கண்டு இகழுமோ என்று அஞ்சவேண்டாதபடி அஸ்த்தாநஸ்நேஹகா ருண்யதர்மாதர்மதியாகுலனை (உன்தோஷத்தைப் போக்கியமாகக் கொண்டு), அஸரண்யஸரண்யனாகையாலே நீயும், பிறரும் உனக் குத் தஞ்சமல்லாததசையில் ஒதுங்கலாம்படியான (புகலாய்), சைத் யமே ஸ்வபாவமானஜலம் ஔஷ்ண்யத்தைப் பஜிக்குமாபோலே,

---

‡ ஸ்ரீகீதா. க-உஉ. ஹ்ருஷீகேசம் ததாவாக்யம் இதமாஹ மஹீபதே - ஸேநயோருபயோர்மத்யேரதம் ஸ்தாபயமேச்யுத.

† லக்ஷ்மீதந்த்ரம், கஎ-எஅ. ஸர்வஜ்ஞோபிஹிஸர்வே ஸஸ்ஸதாகாருணிகோபிஸந் - ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத்ரக்ஷ்யா பேக்ஷாம் ப்ரதீக்ஷதே.

அபராதக்ஷாமணம்பண்ணி கடிப்பிக்கும் புருஷகாரபூதரே, (அக) "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்" என்கிறபடியே, குற்றத்தைக்காட்டி அகற்றும்போதும், விடக்ஷமனன்றிக்கே, (அக) "என்னடியாரது செய்யார்" என்று, மறுதலித்து ஒருதலை நின்று ரக்ஷிக்கும் (என்னை) என்கை.

அவ—(உஅ) (மாம்) என்று,விபவரூபத்தைக் காட்டுகையாலே வ்யாவர்த்திக்கப் படுகிறவற்றை அருளிச்செய்கிறார், (இத்தால்) என்று தொடங்கி.

---

(உஅ) இத்தால் பரவ்யூஹங்களையும், தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது.

---

வ்யா—அதாவது, (என்னை) என்று, அவதரித்துக்கண்ணுக்கிலக்காய் அணுகியிருக்கிற தன்னை, வரணீயனாகச் சொன்ன (இத்தாலே), தேஶவிப்ரக்ருஷ்டதையாலே காணவுங்கிட்டவும் ஒண்ணாதபடியிருக்கிற (பரவ்யூஹங்களையும்), அஸாதாரண விக்ரஹ யுக்தமன்றிக்கே, உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேஶ்யமாயிருக்கிற அக்நீந்த்ராதி (தேவதாந்தர்யாமித்வத்தையும்) வ்யாவர்த்திக்கிறது என்கை.

அவ—(உகூ) தர்மங்களையெல்லாம் விட்டுத் தன்னைப்பற்றச் சொல்லுகையாலே, பலிதமானதொரு அர்த்தவிஶேஷத்தை அருளிச்செய்கிறார், (தர்மஸம்ஸ்தாபநம்) என்று தொடங்கி,

---

(உகூ) தர்மஸம்ஸ்த்தாபநம் பண்ணப்பிறந்தவன் தானே, ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப்பற்று என்கையாலே, ஸாக்ஷாத்தர்மம் தானே யென்கிறது.

---

வ்யா—அதாவது, * (தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய ஸம்பவாமி) என்கிறபடியே, ஸ்வப்ராப்திக்கு உடலானதர்மத்தை ஸ்த்தாபிப்பதாகப் (பிறந்தவன்தானே) (ஸர்வதர்மான் பரித்யஜ்ய) என்று, மோக்ஷஸாதநதயா ஶாஸ்த்ரஸித்தங்களான (ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப்பற்று) என்று, சொல்லுகையாலே, அவை ஸாக்ஷாத் தர்மங்களன்று, ஸ்த்தாபநீயமான (ஸாக்ஷாத்தர்மம்) † (க்ர்ஷ்ணம்தர்

---

(அக) பெரி - ஆ - திரு - மொ - ௪ - கூ - உ.

* ஸ்ரீகீதை - ௪ - அ. † பார - ஆர - அஅ - உகூ.

மம்ஸநாதநம்) என்று, ஸநாதநதர்மமான தானே என்னுமிடம் சொல்லுகிறது என்கை.

அவ—(௩0) இத்தாலென் சொல்லுகிறதென்ன அருளிச்செய்கிருர், (இத்தால் விட்ட ஸாதநங்களில் ஏற்றஞ்சொல்லுகிறது) என்று.

---

(௩0) இத்தால் விட்ட ஸாதநங்களில் ஏற்றஞ்சொல்லுகிறது.

---

வ்யா—அதாவது, இப்படிச்சொன்ன (இத்தால்), கீழ் (விட்ட ஸாதநங்களில்) காட்டில், இந்த ஸாதநத்துக்குண்டான (ஏற்றஞ் சொல்லுகிறது) என்கை.

அவ—(௩க) அதுதானேதென்ன அருளிச்செய்கிருர், (அதாவது) என்றுதொடங்கி.

---

(௩க) அதாவது - ஸித்தமாய், பரமசேதநமாய், ஸர்வஶக்தியாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை.

---

வ்யா—இத்தால், கீழ்விட்ட ஸாதநங்களில்காட்டில், இதுக்கு ஏற்றமாவது, சேதநப்ரவ்ருத்தியாலே தன் ஸ்வரூபஸித்தியாம்படியிருக்கையன்றிக்கே, ஸநாதநதர்மமாகையாலே, (ஸித்தமாய்,) ‡ (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) இத்யாதிகளிற்சொல்லுகிற ஸர்வஜ்ஞவிஷயமாகையாலே, (பரமசேதநமாய்), * (பராஸ்யஶக்திர் விவிதைவஶ்ரூயதே) என்கிறபடியே, (ஸர்வஶக்தியாய்), சேதநஸாத்யமாய், நடுவே அபாயங்கள் புகுருகைக்கு அவகாஶமுண்டாம்படியிருக்கையன்றிக்கே, ஸித்தவஸ்துவா யிருக்கையாலே, (நிரபாயமாய்,) பாரதந்த்ரனை இச்சேதநனுடைய ஸ்வரூபத்துக்கு அப்ராப்தமாயிராதே (ப்ராப்தமாய்) கீழ்ச்சொன்ன பரமசேதனத்வாதிகளாலே, (ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை) என்றபடி.

அவ—(௩உ) இந்தஸஹாயாந்தர நிரபேக்ஷத்வத்தை ஸஹேதுகமாக ஸ்தாபிக்கிருர், (மற்றை உபாயங்கள்) என்று தொடங்கி மேல்மூன்று வாக்யத்தாலே.

---

‡ முண்ட-உப-உ-எ. * ஶ்வேதா - உப - ௬.

(௯உ) மற்றை உபாயங்கள் ஸாத்யங்களாகையாலே, ஸ்வரூப ஸித்தியில் சேதநனை அபேக்ஷித்திருக்கும். அசேதநங்களுமாய் அஶக்தங்களுமாய் இருக்கையாலே கார்யஸித்தியில் ஈஶ்வரனை யபேக்ஷித்திருக்கும். இந்த உபாயம் அவற்றுக்கெதிர்த்தட்டா யிருக்கையாலே, இதர நிரபேக்ஷமா யிருக்கும்.

---

வ்யா—அதாவது, இத்தையொழிந்த (உபாயங்கள்) சேதநப்ர வ்ருத்தியாலே ஸாதிக்கப்படுமவை ஆகையாலே, தன்னுடைய (ஸ்வ ரூபஸித்தியில்) ப்ரவ்ருத்திகரனான (சேதநனை அபேக்ஷித்திருக்கும்;) இவனுக்குச்செயய வேண்டுமவை அறிகைக்கும், அதுதன்னைச் செய்து தலைக்கட்டுகைக்கும் யோக்யதையில்லாத (அசேதநங்களு மாய், அஶக்தங்களுமா யிருக்கையாலே) சேதநனுடைய இஷ்டா நிஷ்டப்ராப்தி பரிஹாரமான (கார்ய) த்தினுடைய (ஸித்தியில்) † (பலமத உபபத்தே:) என்கிறபடியே பலப்ரதத்வோபயோகியான, ஸர்வஶக்தித்வாத்யுப பத்தியுடையனான (ஈஶ்வரனையபேக்ஷித்திருக் கும்;) (இந்த உபாயம்) ஸித்தத்வ பரமசேதநத்வ ஸர்வசக்தித்வங் களாலே (அவற்றுக்கு எதிர்த்தட்டா யிருக்கையாலே,) அந்ய (நிர பேக்ஷமாயிருக்கும்) என்கை.

அவ—(௯௩) இனி, இப்பதத்திலே ஆஶ்ரயணஸௌகர்யா பாதகங்களான குணவிஶேஷங்களெல்லாம் ப்ரகாஶிக்கிறபடியை அருளிச்செய்கிறார், (இதிலே) என்று தொடங்கி.

---

(௯௩) இதிலே வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீ ல்ய ஸௌலப்யங்களாகிற குணவிஶேஷங்கள் நேராகப் ரகாஶிக்கிறது.

---

வ்யா—அதாவது, அதர்மபுத்தியாலே தர்மத்தில் நின்றும் நிவ் ருத்தனான அர்ஜ்ஜுநனுக்கு; குற்றம்பாராதே அபேக்ஷிதார்த்தங் களை அருளிச்செய்கையாலே, (வாத்ஸல்யம்) ப்ரகாஶிக்கிறது; தன் னுடைய பரத்வத்தைப் பலகாலும் அருளிச்செய்தவளவன்றிக்கே, அர்ஜுநன் ப்ரத்யக்ஷிக்கும்படி பண்ணுகையாலே, ஸ்வாமித்வம்

---

† உத்தர - மீமா - ௩-உ-௩௭.

(ப்ரகாஶிக்கிறது); * (ஹேக்ருஷ்ண ஹேயாதவ) என்று, அர்ஜுநன் தானேசொல்லும்படி இவனோடேகலந்து பரிமாறுகையாலே (ஸௌஶீல்யம் ப்ரகாஶிக்கிறது); அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கிலக்காம்படி பண்ணுகையாலே, (ஸௌலப்யம் ப்ரகாஶிக்கிறது); என்கை. (குணவிஶேஷங்கள்) என்றது, ஆஶ்ரயணத்துக்கு அபேக்ஷிதங்களானவையென்று தோற்றுகைக்காக. (நேராகப்ரகாஶிக்கிறது) என்றது, ஸ்ப்புடமாக ப்ரகாஶிக்கிறதென்றபடி.

அவ—(ருச) இவை எல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு, மிகவும் அபேக்ஷிதம் ஸௌலப்யமாகையாலே, அவதாரப்ரயுக்தமான ஸௌலப்யத்தளவன்றிக்கே, ஸாரத்யேவஸ்த்திதனாய் நிற்கிற ஸௌலப்யாதிஶயத்தை தர்ஶிப்பித்தமையை அருளிச்செய்கிறார், (கையும் உழவுகோலும்) என்று தொடங்கி.

---

(ருச) கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளி தூஸரிதமான திருக்குழலும்,தேருக்குக்கீழே நாட்டின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை (மாம்) என்று காட்டுகிறான்.

---

வ்யா—அதாவது, குதிரைகளைப்ப்ரேரித்து நடத்துகைக்காகத் திருக்கையிலேதரித்த (உழவுகோலும்), அவற்றை இடவாய் வலவாய்த் திருப்புகைக்காகவும், நிறுத்தருளவேண்டும் இடத்திலே தாங்கி நிறுத்துகைக்காகவும் (பிடித்த சிறுவாய்க்கயிறும்), திருமுடியில் ஒன்றுச்சாதியாமல் நிற்கையாலே (ஸேநாதூளி) யாலே புழுதிபுடைத்த திருக்குழலும், (கூo) "தேர்கடவிய பெருமான்கனைழகல்" என்கிறபடியே, சாத்தின சிறுசதங்கையுந் தானுமாகத் (தேருக்குக்கீழே நாட்டின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்யவேஷத்தை) என்னை (என்று காட்டுகிறான்) என்கை. ஆக, த்ருதீயபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

---

* கீதா. கக-சக. ஸகேதிமத்வாப்ரஸபம்யதுக்தம் ஹேக்ருஷ்ண ஹேயாதவஹேஸகேதி - அஜாநதாமஹிமாநம்தவேதம் மயாப்ரமாதாத்ப்ரணயேநவாபி.

(கூo) திரு - வா - ரு - சா - கo.

அவ—(நடரு) அநந்தரம், சதுர்த்தபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (ஏகம்) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (இந்த ஏகஶப்தம்) என்று தொடங்கி.

---

(நடரு) இந்த ஏகஶப்தம் ஸ்த்தாநப்ரமாணத்தாலே அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது.

---

வ்யா—அதாவது, இவ்வுபாய விஶேஷத்தைச் சொல்லும் இடங்களிலே, பலவிடங்களிலும் அவதாரண ப்ரயோகம் உண்டாகையாலே, உகாரம்போலே இந்த ஏகஶப்தமும் ஸ்த்தாநப்ரமாணத்தாலே அவதாரணமாகிற அர்த்தத்தைக் காட்டுகிறது என்கை.

அவ—(நடசா) இவ்வுபாயத்தை நிர்த்தேஶித்த அநந்தரம், அவதாரணப்ரயோகம் பண்ணின வசநங்கள் பலவற்றையும் இதுக்கு உதாஹரணமாக அருளிச்செல்கிறார், (மாமேவ) என்று தொடங்கி.

---

(நடசா) "மாமேவயே ப்ரபத்யந்தே" "தமேவசாத்யம்" "த்வமேவோபாய பூதோமேபவ" "ஆறெனக்கு நின்பாதமேசரணாகத்தந் தொழிந்தாய்" என்றும், சொல்லுகிற படியே.

---

வ்யா—அதாவது, * (மாமேவயேப்ரபத்யந்தே) என்று, என்னையேயாவர் சிலர்ப்ரபத்தி பண்ணுகிறார்கள் என்றும், † (தமேவ சாத்யம்புருஷம்ப்ரபத்யே) என்று, ஆத்யனான அந்தபுருஷனையே ப்ரபத்தி பண்ணுகிறேன் என்றும், ‡ (த்வமேவோபாயபூதோமேபவ) என்று, நீயே எனக்கு உபாயமாக வேணும் என்றும், (கூக) "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந் தொழிந்தாய்" என்று, எனக்கு உபாயந்தருகிற இடத்தில் உன்திருவடிகளையே உபாயமாகத் தந்தாயென்றும் சொல்லுகிற இவ்விடங்களில், (மாமேவ) (தமேவ) (த்வ

---

* ஸ்ரீகீதா. எ-கஙு. தைவீஹ்யேஷாகுணமயீமமமாயாதுரத்யயா - மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாந்தரந்திதே.

† ததஃபதம்தத்பரிமார்கிதவ்யம் யஸ்மிந்கதாநநிவர்தந்திபூயஃ— தமேவசாத்யம்புருஷம்ப்ரபத்யே யதஃப்ரவ்ருத்திஃப்ரஸ்ருதாபுராணீ.

‡ அஹிர் - ஸம்ஹிதை. நடசா-நடசு.(கூக) திரு-வா-ரு-எ-கo.

மேவ) (கின்பாதமே) என்று, ஸ்வீகார்யவஸ்து கிர்தேஶாநந்தரம் அவதாரணத்தைச் (சொல்லுகிற) ப்ரகாரத்திலே என்கை.

அவ—(கஎ)ஏதத்வ்யாவர்த்யம் ஏதென்ன அருளிச்செய்கிறார், (இத்தால்) என்றுதொடங்கி.

---

(கஎ) இத்தால் (வ்ரஜ) என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது.

---

வ்ய—அதாவது, உபாயாந்தரங்கள் வ்யாவர்த்யமாமளவில் பௌநருக்த்யம் ப்ரஸங்கிக்கையாலும், தேவதாந்தரங்கள் வ்யாவர்த்யமா மளவில் (மாம்) என்று அஸாதாரணாகாரத்தைச் சொல்லுகையாலே அது கிழே ஸித்தமாகையாலும், இந்த அவதாரணத்தால் (வ்ரஜ) என்று, மேல்சொல்லுகிற (ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தைக்) கழிக்கிறது என்கை. இந்த ஸ்வீகாரந்தான் அந்வய வ்யதிரேகத்தாலே ஸாதநம் என்று நினைக்கலா யிருக்கையாலே, இதில் ஸாதநத்வம் அவஶ்யங்கழிக்க வேணுமிறே.

அவ—(கஅ) ஸ்வீகாராநந்தரமொழிய உபாயங்கார்யகரமாகாமையாலே, பேற்றுக்கு இது அவஶ்யம் வேண்டியிருக்க, இதில் உபாயத்வத்தைக் கழிக்கிறபடி தானெங்ஙனே என்ன அருளிச்செய்கிறார், (ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது) என்று.

---

(கஅ) ஸ்வீகாரந்தானும் அவனாலேவந்தது.

---

வ்யா—அதாவது, ஸ்வீகாராநந்தரம் இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும், இஷ்டப்ராப்தியும் பண்ணுகையாகிற இது (அவனாலே) ஆனாப்போலே, தத்பூர்வபாவியான (ஸ்வீகாரந்தானும் அவனாலே) உண்டானது என்கை. இத்தால், ஸ்வீகாரத்துக்கு உபாயகார்யத்வமொழிய உபாயத்வம் இல்லை என்றதாயிற்று.

அவ—(கக) அவனாலே வருகையாவதென்னென்ன அருளிச்செய்கிறார், (ஸ்ருஷ்டி) என்றுதொடங்கி.

---

(ககூ) ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்.

---

வ்ய—அதாவது, காணகளேபரவிதுரனாய், போகமோக்ஷஶூந்யனாய், அசித்விஶேஷிதனாய்க் கிடக்கிறதசையிலே, கரணகளேபரவிஶிஷ்டனாய், ஜ்ஞாநவிகாஸயுக்தனும்படி ஸ்ருஷ்டித்து, (கூஉ) "எதிர்சூழல்புக்கு" என்கிறபடியே, இவனை அங்கீகரிக்கைக்காக அநேகா (வதார) ங்களைப்பண்ணி அவதரித்தவிடங்களிலே, ஆஶ்ரயணருசிவிஶ்வாஸ ஜநகமான தத்குணசேஷ்டிதாதிகளை ப்ரகாஶிப்பித்து, இவ்வழியாலே அவன்பண்ணினக்ருஷியாலே பலித்ததுஇதுவென்கை.

அவ—(சo) இவ்வர்த்தத்தில் ப்ரமாணம் காட்டுகிறார், (அதுவுமவனதின்னருளே) என்று.

(சo) "அதுவும் அவனதின்னருளே"

வ்யா—அதாவது, (கூரு) "உணர்விலும்பரொருவனை யவனதருளா லுறற்பொருட்டென் னுணர்வினுள்ளே யிருத்தினேன்" என்று, உணர்வுமிக்கிருக்கக் கடவரான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகளுக்கு நிர்வாஹகனான அத்விதீயனானவனை, அவனுடைய அருளாலே ப்ராபிக்கைக்காக என்னுடைய அபேக்ஷாரூப ஜ்ஞாநத்துக்குள்ளே யிருத்தினேனென்று தம்முடைய ஸ்வீகாரத்தை யருளிச்செய்தவநந்தரம், (கூரு) "அதுவுமவனதின்னருளே" என்று, அந்தஸ்வீகாரந்தானு மவனுடைய நிர்ஹேதுகக்ருபையாலே உண்டானதென்று ஆழ்வாரருளிச்செய்கையாலே, (ஸ்வீகாரம்) அவனுடைய (க்ருஷிபலம்) என்றே கொள்ளவேணும் என்கை.

அவ—(சக) இப்படி ஆகையால் இந்தஸ்வீகாரத்தில் சரக்கற நினைக்கக் கடவனென்கிறார், (இத்தையொழியவும்) என்றுதொடங்கி,

(சக) இத்தை ஒழியவும் தானே கார்யஞ் செய்யும் என்று நினைக்கக்கடவன்.

வ்ய—அதாவது, இந்த ஸ்வீகாரத்துக்கும் தானே க்ருஷிபண்ணுவானொருவன் ஆகையாலே, இதுக்காக அன்று அவன் நமக்குக் கார்யஞ் செய்கிறது, (இத்தை ஒழியவும்) இவ்வாத்மோஜ்ஜீவநகா

(கூஉ) திருவா - உ - எ - சா,  (கூரு) திருவா - அ - அ - ரு

னு (தானே) நம்முடைய இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரரூபமான கார்யத்தைச் (செய்யும் என்று) ப்ரதிபத்திபண்ணக் (கடவன்) என்கை.

அவ—(சஉ) இப்படி நினைக்கவேண்டுகிற தென்னென்ன அருளிச்செய்கிறார், (அல்லாதபோது) என்று தொடங்கி.

---

(சஉ) அல்லாதபோது உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாது.

---

வ்யா—அதாவது, இத்தையொழியவும் கார்யஞ்செய்யுமென்று நினையாதே, இதுவும்வேணும் அவன் கார்யஞ்செய்கைக்கு என்று நினைக்குமளவில், (உபாய)த்தினுடைய ஸஹாயாந்தர (நைரபேக்ஷ்யம் ஜீவிக்கப்)பெறாது என்கை.

அவ—(சங) ஆனால் இந்தஸ்வீகாரந்தான் ஏதாவதென்ன அருளிச்செய்கிறார், (இது) என்று தொடங்கி.

---

(சங) இது ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹாரார்த்தம், புத்திஸமாதாநார்த்தம், சைதந்யகார்யம், ராகப்ராப்தம், ஸ்வரூபநிஷ்டம், அப்ரதிஷேதத்யோதகம்.

---

வ்யா—அதாவது, இந்தஸ்வீகாரம் இத்தலையிலொன்று மின்றிக்கேயிருக்க ஈஶ்வரன்தானே உஜ்ஜீவிப்பிக்குமளவில், எல்லாரும் பின்னை முக்தராகவேண்டாவோ என்கிற (ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹார)த்துக் குறுப்பு; இதுதான், நெடுங்காலம் நம்மை ரக்ஷியாதவன் இன்றுநம்மை ரக்ஷிக்கும் என்றிருக்கிறது நாமென்கொண்டென்று இவன் தளும்பாமல் (புத்திஸமாதாநம்) பிறந்திருக்கைக் குறுப்பு; இவன்தான் அசேதநமன்றிக்கே சேதநனுகையாலே, அவனே உபாயம் என்கிற அத்யவஸாயம் இவன் (சைதந்யத்)தினுடைய (கார்யம்); வைதமாக அன்றிக்கே இதில் ரஸஜ்ஞனான இவனுடைய (ராக)த்தாலே (ப்ராப்தமான) இது ஸ்வரூபாதிரேகியன்றிக்கே தத்சேஷத்வரூபமான (ஸ்வரூபத்)திலே நிற்குமது, அநாதிகாலம் ஸ்வரக்ஷணாதிகளாலே அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்கிப் போந்த இவன் அநுதவிர்த்தமைக்கு ப்ரகாஶகம் என்கை.

அவ—(சச) இனி, "மாம்" என்கிற பதத்துக்குக் கீழும், இங்கும், ஈச்வரனுடைய செயல்களை அருளிச்செய்கிறார், (கீழ்) என்று தொடங்கி.

---

(சச) கீழ் தானும் பிறருமான நிலையைக்குலைந்தான், இங்குத்தானும் இவனுமான நிலையைக் குலைக்கிறான்.

---

வ்யா—அதாவது, (ஸர்வதர்மாந் பரித்யஜ்ய) என்கிற இடத்தில், ஸகலோபாயங்களையும் விடச்சொல்லுகையாலே, பலப்ரதனை (தானும்), உபாயாந்தரங்களுமாய்க் கூடிநிற்கிற (நிலையைக் குலைத்தான்; "ஏகம்" என்கிற இடத்தில், ஸ்வீகாரத்தில் உபாய பாவத்தைக் கழிக்கையாலே, உபாயபூதனை (தானும்), தன்ஸ்வீகாரத்தில் உபாயபுத்திபண்ணி நிற்கிற (இவனுமான) நிலையைக்குலைக்கிறான் என்கை. உபாயாந்தரங்களைப் பிறர் என்றது, (கூச) "உன்னையல்லால் யாவராலும்" என்றாப்போலே.

அவ—(சரு) இனி, ஸாதநபுத்த்யா இவன்பண்ணும் ஸ்வீகாரத்தினுடைய தோஷத்தை அருளிச்செய்கிறார், (அவனை) என்று தொடங்கி.

---

(சரு) அவனை இவன் பற்றும்பற்று அஹங்காரகர்ப்பம், அவத்யகரம்.

---

வ்யா—அதாவது, நிருபாதிகரக்ஷகனை (அவனை,) தத்ரக்ஷ்யபூதனை (இவன்), தன்ரக்ஷணத்துக்குறுப்பாக ஸ்வீகரிக்கிற ஸ்வீகாரம், ஸ்வகர்த்ருத்வரூப (அஹங்காரகர்ப்ப)முமாய், பிதாவுக்குப் புத்ரன் எழுத்துவாங்குமாபோலே, (அவத்யகர)முமாயிருக்கும் என்கை.

அவ—(சகூ) ஆனால், ரக்ஷகமாவது தானேதென்ன அருளிச்செய்கிறார், (அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்) என்று.

---

(சகூ) அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்.

---

வ்யா—அதாவது, இவ்வாத்மாவினுடைய ரக்ஷணத்துக்குக் கடவானான அவன், இவனை நாம் ரக்ஷிக்கக்கடவோம் என்று அபி

---

(கூச) திரு - வா - ரு - அ - ங.

மாகித்துக்கொள்ளுகையாகிற (ஸ்வீகாரமே,) இவனுக்கு (ரக்ஷக) மாயறுவது என்கை.

அவ—(சஎ) சேதந ப்ரவ்ருத்தியில் ஒன்றையும் இவ்வுபாயம் ஸஹியாதென்னு மத்தைத் தெளிவிக்கைக்காக, உபாயாந்தரங்களும் இவ்வுபாயத்துக்கும் உண்டானவிஶேஷத்தை அருளிச்செய்கிறார், (மற்றை) என்றுதொடங்கி.

(சஎ) மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம், இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்.

வ்யா—அதாவது, ஸித்தோபாயமான இத்தையொழிந்த (உபாயங்களுக்கு), சேதந ப்ரவ்ருத்தியாலே ஸ்வரூபஸித்தியாக வேண்டுகையாலே, இவனுடைய ஸ்வயத்ந (நிவ்ருத்தி தோஷ) மாயிருக்கும்; இந்த உபாயத்துக்கு, ஸஹாயாந்தரஸம் ஸர்க்கம் அஸஹ்யமாகையாலே, இச்சேதநனுடைய (ப்ரவ்ருத்தி) என்பதொன்றுமே, (தோஷ) மாயிருக்கும் என்கை.

அவ—(சஅ) சேதந வ்யாபாரமொன்றும் வேண்டாவென்னுமிடத்துக்கு ப்ரமாணங்காட்டுகிறார், (சிற்றவேண்டா) என்று.

(சஅ) "சிற்றவேண்டா"

வ்யா—அதாவது, ஸித்தோபாய ஸ்வீகாரஞ்சொல்லுகிற(கூ0) "மற்றொன்றில்லை" என்கிறபாட்டிலே, (சிற்றவேண்டா) என்று, 'சிற்றுதல், சிதறுதலாய், பரக்கவொருவ்யாபாரம் பண்ணவேண்டா' என்கையாலே, இவ்வுபாயத்தில் இழியுமவனுக்கு ஒருவ்யாபாரம் பண்ணவேண்டாவென்னு மிடஞ்சொல்லிற்றிறே யென்கை.

அவ—(சகூ) இதுதான் இப்ப்ஶ்லோகந் தனக்குள்ளே சொல்லிற்றென்கிறார், (நிவ்ருத்தி கீழேசொல்லிற்று) என்று.

(சகூ) நிவ்ருத்திகீழே சொல்லிற்று.

வ்யா—அதாவது, (ஸர்வதர்மாந்பரித்யஜ்ய) என்று, ஸகலப்ரவ்ருத்தியினுடையவும் (நிவ்ருத்தி) யே இவனுக்குவேண்டுவதென்னுமிடம், (கீழேசொல்லிற்று) என்கை,

(கூ0) திரு - வா - க - உ - எ.

அவ—(ருo) ஆனால் உபகாரஸ்ம்ருதிதான் வேணுமோ, அது உபாயத்தில் முதலிடாதோவென்ன அருளிச்செய்கிறார், (உபகாரஸ்ம்ருதியும்) என்றுதொடங்கி.

---

(ருo) உபகாரஸ்ம்ருதியும் சைதந்யத்தாலேவந்தது; உபாயத்தில் அந்தர்பவியாது.

---

வ்யா—அதாவது, (கசா) "என்னைத் தீமனங்கெடுத்தாய்" (கஎ) "மருவித் தொழுமனமேதந்தாய்" இத்யாதியாலே இவ்வுபாயவிஷயத்தில், இவன் பண்ணும் (உபகாரஸ்ம்ருதியும்), இவனுடையசைதந்ய (ப்ரயுக்தமாய்) வந்ததித்தனை; இது உண்டாகையாலேயன்றோ ஈஶ்வரன் கார்யஞ்செய்தது என்று (உபாயத்தில்) உட்புகாது என்கை. ஆக, சதுர்த்தபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அவ—(ருக) இனி, பஞ்சமபதத்தை உபாதாநம்பண்ணுகிறார், (ஶரணம்) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (உபாயமாக) என்று.

---

(ருக) (ஶரணம்) உபாயமாக.

---

அவ—(ருஉ) அர்த்தாந்தரங்களையுங் காட்ட வற்றாயிருக்க, இவ்விடத்தில் இது உபாயத்தையே காட்டுகிறமையை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார், (இந்தஶரணஶப்தம்) என்று தொடங்கி.

---

(ருஉ) இந்த ஶரணஶப்தம், ரக்ஷிதாவையும் க்ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக்கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது, கீழோடேசேரவேண்டுகையாலே.

---

வ்யா—அதாவது, ✻ (உபாயே க்ருஹரக்ஷித்ரோஶ் ஶப்தஶ்ஶரணமித்யயம், வர்த்ததே) என்கிறபடியே, ஶரணஶப்தமான இது, ரக்ஷிதாவையும், க்ருஹத்தையும், உபாயத்தையும், காட்டக்கடவதேயாகிலும், (ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசக:) என்கிறபடி

---

(கசா) திரு - வா - உ-எ-அ. (கஎ) திரு - வா - உ - எ - எ.

✻ அஹி - பு - ஸம் - ருஅ - ருச.

யே, இக்தஸ்த்தலத்திலே உபாயத்தையே காட்டுகிறது; ஸர்வதர்மங்களையும் விட்டு, தன்னைப்பற்றச்சொல்லுகிற ப்ரகரணமாகையால் (கிடேழாடேசேரவேண்டுகையாலே) என்கை.

ஆனால், கீழ்ச்சொன்ன ஸாதநாந்தரபரித்யாகந்தானே ஸ்வீகாரவஸ்துவின் உபாயத்வத்தைத் தோற்றுவிக்குமதாயிருக்க, ஶரணஶப்தப்ரயோகந்தான் வேணுமோ என்னில், வேணும். ப்ராபகஸமயத்தில்போலே ப்ராப்யஸமயத்திலும் நதிகிஸ்தரணாநந்தரத்தில் ப்லவபரித்யாகம்போலே, ஸாதநாந்தர பரித்யாகம் ஸமாநமாகையாலே, தத்விசிஷ்டமேயாகிலும், ஸ்வீகாரமாத்ரம் வ்யவச்சேதகமாக மாட்டாமையாலே.

அங்ஙனஞ்சொல்லலாமோ, இந்தஉபாயாந்தரத்யாகம் ஸ்வீகாரத்துக்கு அங்கமாக விதிக்கப்படுகின்றதாகையாலே, ஸ்வீகாரத்தினுடைய உபாயத்வத்தைக்காட்ட வற்றாகையால், ஶரணஶப்தப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் இல்லையே என்னில்; அப்படிச் சொல்லவொண்ணாது, ஆர்த்தமாக வருமதிற்காட்டில் ஶாப்தமாகச் சொல்லுமதுயுக்தம் ஆகையாலே. † (ஆக்ஷேபதஃ ப்ராப்தஸ்யாபிதாகிகஸ்யைவ க்ராஹ்யத்வாத்) என்றிறே, பாஷ்யகாரரும் அருளிச்செய்தது.

ஆக, உபாயவாசியான இந்தஶரணஶப்தத்தாலே, இவ்வஸ்துவுக்கு ப்ராப்யதயாஸ்வீகார்யத்வமும், ப்ராபகதயாஸ்வீகார்யத்வமும் உண்டாகையாலே, அதில் ப்ராப்யதயாஸ்வீகாரத்தைவ்யவச்சேதித்ததாயிற்று.

அவ—(நிந) இனி, ஷஷ்ட்டபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (வ்ரஜ) என்று. அதுக்கர்த்தம் அருளிச்செய்கிறார், (புத்திபண்ணு) என்று.

---

(நிந) (வ்ரஜ) புத்திபண்ணு.

---

அவ—(நிச) அதுதன்னைவிஶதீகரிக்கிறார், (கத்யர்த்தமாவது) என்று தொடங்கி.

---

(நிச) கத்யர்த்தமாவது புத்த்யர்த்தமாய், அத்யவஸியென்றபடி.

---

† ஸ்ரீபாஷ் - க - க - க.

வ்யா—அதாவது, * (வ்ரஜகதௌ) என்கிறதாதுவிலே கத்யர்த்தமாய், * (கத்யர்த்தாபுத்த்யர்த்தா:) என்கிறந்யாயத்தாலே, (கத்யர்த்தமாவது புத்த்யர்த்தமாய், அத்யவஸி என்றபடி) என்கை.

"இந்தபுத்தியாகிறது,—த்யாஜ்யகோடியில் உத்தீர்ணமாய், உபாய கோடியில் அநநுப்ரவிஷ்டமாய், ப்ராபகாந்தர பரித்யாகபூர்வகமாய், பகவத்ரக்ஷகத்வாது மதிரூபமாய், சைதந்யகார்யமாய், ப்ரார்த்தநாகர்ப்பமாய், பகவந் முகவிகாஸஹேதுவாய், வ்யபிசாரவிளம்பவிதுரமா யிருப்பதொரு அத்யவஸாயாத்மக ஜ்ஞானவிசேஷம்" என்று, பரந்தபடியில் இவரருளிச்செய்தவிது இவ்விடத்திலே அநுஸந்த்தேயம்.

அவ—(நிரு) ஸாமாந்யேந கதிவாசியானவிது, மாநஸவாசிக காயிகரூபமான கதித்ரயத்தையும் காட்டவற்றாயிருக்க, மாநஸமான அத்யவஸாயமாத்ரத்திலே ஒதுக்குகிறதென்னென்ன அருளிச்செய்கிறார். (வாசிக காயிகங்களும்) என்று தொடங்கி.

---

(நிரு) வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களா யிருக்கச்செய்தேயும், * ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலேமாநஸமானஅநுஷ்ட்டாநத்தைச்சொல்லுகிறது.

---

வ்யா—அதாவது, (கஅ) "சிந்தையாலுஞ் சொல்லாலுஞ் செய்கையினாலும்" என்கிறபடியே, கரணத்ரயத்தாலும் உண்டானஸ்வீகாரம் அதிகாரபூர்த்திக்கு உடலாகையாலே வரணோக்திரூபமான (வாசிகமும்), அஞ்சல்யாதி ரூபமான (காயிகமும்) இந்தஸ்வீகாரத்துக்கு (அபேக்ஷிதங்களா யிருக்கச்செய்தேயும், *"ஜ்ஞாநாந்மோக்ஷம்" ஆகையாலே) அவையிரண்டையுமொழிய, (மாநஸமான அநுஷ்டாந) மாத்ரத்தைச் சொல்லுகிறதென்கை, ஆக, ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்தாராயிற்று.

அவ—(நிகு) இனி, பூர்வார்த்தத்தால் சொல்லுகிற அர்த்தத்தை அநுவதித்து நிகமிக்கிறார், (ஆக, த்யாஜ்யத்தைச்சொல்லி) என்று தொடங்கி.

---

* தாது - ப்வா,

(கஅ) திரு-வா-சா-நி-கக.

(௫௬) ஆக, த்யாஜ்யத்தைச்சொல்லி, த்யாகப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, உபாய நைரபேக்ஷ்யஞ்சொல்லி, உபாயத்வஞ்சொல்லி, உபாயஸ்வீகாரம் சொல்லுகிறது.

---

வ்யா—அதாவது, (ஆக,) பூர்வார்த்தத்தால் (ஸர்வதர்மாந்) என்று (த்யாஜ்யத்தைச் சொல்லி,) (பரித்யஜ்ய) என்று (த்யாகப்ரகாரத்தைச்சொல்லி), (மாம்) என்று (பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி,) (ஏகம்) என்று (உபாய நைரபேக்ஷ்யஞ்சொல்லி), (ஶரணம்) என்று (உபாயத்வஞ்சொல்லி), (வ்ரஜ) என்று (உபாயஸ்வீகாரம் சொல்லுகிறது) என்கை.

அவ—(௫௭) அநந்தரம், உத்தரார்த்தத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாகக்கோலி, அதில் ப்ரதமபதத்தை உபாதாநம்பண்ணுகிறார் (அஹம்) என்று. இவ்வுத்தரார்த்தத்தில் ஈஶ்வரன்செய்தருளுகிற அம்ஶத்தை அருளிச்செய்கிறார், (ஸ்வக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்) என்று.

---

(௫௭) (அஹம்) ஸ்வக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்.

---

வ்யா—அதாவது, அதிகாரிக்ருத்யமிறே, பூர்வார்த்தத்தில் சொல்லிற்று, உபாயபூதனான தன்னுடைய க்ருத்யத்தை அருளிச்செய்கிறது இதிலேயிறே.

அவ—(௫௮) இனி, இப்பதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (ஸர்வஜ்ஞனாய்) என்றுதொடங்கி.

---

(௫௮) ஸர்வஜ்ஞனாய், ஸர்வஶக்தியாய், ப்ராப்தனான நான்.

---

வ்யா—அதாவது, *(யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) என்கிறபடியே ஸர்வத்தையும் அறியுமவனாய், ‡(பராஸ்யஶக்திர்விவிதைவச்ரூயதே) என்கிறபடியே, எல்லாஸாமர்த்யத்தையும் உடையனாய், ஶேஷியாகையாலே (ப்ராப்தனா) யிருக்கிற (நான்) என்கை.

---

* முண் - உப - ௧ - ௧. ‡ ஶ்வே - உப - ௬.

அவ—(௫௯) அல்லாத குணங்கள் எல்லாங்கிடக்க, இந்தகுண விஸேஷங்களை இவ்வளும் ஸப்தங்காட்டுகிற இதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார், (இவன் கீழ்நின்றநிலையும்) என்றுதொடங்கி.

(௫௯) இவன் கீழ் நின்ற நிலையும், மேல் போக்கடி அறிகைக்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக் கும் ஏகாந்தமான குணவிஸேஷங்களையும் தன்பேருகச் செய்து தலைக்கட்டுகைக்கீடான பந்தவிஸேஷத்தையும் காட்டுகிறது.

வ்யா—அதாவது, இச்சேதநனுக்கு அநிஷ்டநிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளைப் பண்ணுமளவில் இவன் பூர்வத்தில் (நின்றநிலையும், மேல்போக) த்தக்கவழியும் (அறிகைக்கும், அறிந்தபடியே) அவற் றைச் (செய்து தலைக்கட்டுகைக்கும்) தக்கவையாயிருந்துள்ள ஸர் வஜ்ஞத்வ ஸர்வஸக்தித்வங்களாகிற (குணவிஸேஷங்களையும்),இவன் கார்யஞ்செய்யு மிடத்தில் இவனுக்காக அன்றிக்கே, (தன்பேருகச் செய்து தலைக்கட்டுகைக்கீடான) ஸேஷித்வரூப (பந்தவிஸேஷத் தையும்) ப்ரகாஸிப்பிக்கிறது என்கை.

(மாம்) என்கிற இடத்தில், ஆஸ்ரயணத்துக்கு ஏகாந்தமான குணவிஸேஷங்கள் ப்ரகாஸித்தாப்போலே, "அஹம்" என்கிறவிட த்திலும் கார்யகரத்வத்துக்கு ஏகாந்தமான குணவிஸேஷங்கள் ப்ரகா ஸிக்குமிறே. வாத்ஸல்யாதிகள் இல்லாதபோது ஆஸ்ரயணங் கூடா தாப்போலே, ஜ்ஞாநஸக்த்யாதிகள் இல்லாதபோது கார்யகரத்வம் கடியாமையாலே. இவ்விடத்தில் ஜ்ஞாநஸக்திகளும், ப்ராப்தியுஞ் சொன்ன இதுபூர்த்திக்கும் உபலக்ஷணம்.

அவ—(௬0) இப்பதத்தில் (மாம்) என்கிற இடத்தில், ஸாரதி யாய்நின்ற பாரதந்த்ர்யத்துக்கு எதிர்தட்டான தன்ஸ்வாதந்த்ர் யத்தை ப்ரகாஸிப்பித்தமையை அருளிச்செய்கிறார், (தனக்காகக் கொண்ட) என்றுதொடங்கி.

(௬0) தனக்காகக்கொண்ட ஸாரத்ய வேஷத்தை அவனையிட்டுப் பாராதே தன்னையிட்டுப்பார்த்து; அந்

சினவச்சந்த்ர தானான தன்மையை (அஹம்) என்று காட்டுகிறான்.

---

வ்யா—அதாவது, (மாம்) என்று, ஸாரத்யவேஷத்தோடே நிற்கிறதன்னைப்பற்றச் சொன்னபோது, அர்ஜுநன் தன்னுடைய ரக்ஷணார்த்தமாக ஏறிட்டுக (கொண்ட ஸாரத்ய வேஷத்தை) ஸர்வாதிகனானவன் இப்படித் தாழநின்றது, தன்குணத்தாலேயிறே, என்று (அவனையிட்டுப்பாராதே) நமக்கிழிதொழில்செய்து ஸாரதியாய் நிற்கிறவனன்றோ என்று (தன்னையிட்டுப்பார்த்து), ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப்பற்று என்னாநின்றான், இதென்னாகக் கடவது என்று (அஞ்சின அச்சந்த்ர), ஸ்வாதீந த்ரிவிதசேதநாசேதந ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகளைக்கொண்டு நிரங்குச ஸ்வதந்த்ரனாயிருக்கிற தன்னுடைய யதாவஸ்த்திதவேஷத்தை (அஹம்) என்று தர்ஸிப்பிக்கிறான் என்கை.

அவ—(சூக) ஏவம்பூதனானவன் பரதந்த்ரனானதும், தனக்கு ஸ்வரூபமாய்ச் செய்ததன் றென்னு மிடத்தை அருளிச்செய்கிறார், (கீழில்) என்றுதொடங்கி.

---

(சூக) கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லைநிலமிறே.

---

வ்யா—அதாவது, (கீழ்), ஸாரதியாய்நின்ற பாரதந்த்ர்யமும், நினைத்தது செய்யுமளவில் தனக்கொரு நிவாரகரில்லாதபடியான (இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய) ஸீமாபூமியிறே, என்கை.

அவ—(சூஉ) அநந்தரம், த்விதீயபதத்தை உபாதாநம்பண்ணுகிறார், (த்வா) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (அஜ்ஞநாய்) என்றுதொடங்கி.

---

(சூஉ) (த்வா). அஜ்ஞனாய், அஶக்தனாய், அப்ராப்தனாய், என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை.

---

வ்யா—அதாவது, உன்கார்யங்கள் அறிகைக்கு தக்க ஜ்ஞாநமில்லாதவனாய், அதுதான் உண்டானாலும் உன்னுடைய ரக்ஷணத்தில் உனக்கு ப்ராப்தியில்லாதவனாய், இப்படியிருக்கையாலே ஸர்வ

தர்மங்களையும் விட்டு என்னையே நிரபேக்ஷோபாயமாக பரிக்ரஹித்திருக்கிற (உன்னை) என்கை.

அவ—(௬௩) அநந்தரம், த்ருதீயபதத்தை உபாதாநம்பண்ணுகிறார், (ஸர்வபாபேப்ய:) என்று. இதுவும், பாபமும், பஹுவசநமும் ஸர்வஶப்தமுமாய், த்ரிப்ரகாரமாய் இருக்கையாலே, இம்மூன்றையும் உட்கொண்டு இப்பதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (மத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்கள்) என்றுதொடங்கி.

---

(௬௨) (ஸர்வபாபேப்ய:) மத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்கள் என்று யாவையாவை சிலபாபங்களைக் குறித்து அஞ்சுகிறாய் அவ்வோபாபங்கள் எல்லாவற்றில் நின்றும்.

---

வ்யா—அதாவது, பாபமாகிறது, இஷ்டவிரோதியாயும் அநிஷ்டஹேதுவாயும் இருக்குமதாகையாலும்; மோக்ஷப்ரகரணமாகையாலே, இவ்விடத்தில் இஷ்டவிரோதிகளாகிற பகவல்லாப விரோதிகளாகையாலும், அதில்ஜ்ஞாநவிரோதியும், ருசிவிரோதியும், உபாயவிரோதியும் பண்டேநிவ்ருத்தமாகையாலும், இனி உள்ளது ப்ராப்தி விரோதியாகையாலே, நீயென்னை ப்ராபிக்கைக்கு (ப்ரதிபந்தகங்கள் என்று யாவையாவை சிலபாபங்களை) உத்தேசித்து பயப்படுகிறாய், அந்தவந்த (பாபங்களெல்லாவற்றில் நின்றும்) என்கை.

அவ—(௬௪) அதில் பஹுவசந விவக்ஷிதங்களை அருளிச்செய்கிறார், "(பொய்நின்ற ஞானமும்) என்றுதொடங்கி.

---

(௬௪) "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே, அவித்யா கர்மவாஸநா ருசி ப்ரக்ருதிஸம்பந்தங்களைச் சொல்லுகிறது.

---

வ்யா—அதாவது, (௧௦௦) "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்" என்று, உத்பத்தி விநாஶாதி யோகத்தாலே, அஸத்ய ஶப்தவாச்யமான அசேதந விஷயத்தில் ஆத்மஜ்ஞாநமும், அந்ததேஹாத்மாபிமாந மடியான ஸாம்ஸாரிகதுஷ்கர்ம

---

(௧௦௦) திரு - விரு - க.

ப்ரவ்ருத்தியும், அந்தகர்மமடியாக வரக்கடவதான மாம்ஸாஸ்ருதாதி மலரூபதேஹ ஸம்பந்தமும்" என்றுஞ் சொல்லுகிறபடியே, (அவித்யையும்), (கர்ம)மும், (வாஸநை)யும், (ருசி)யும், (ப்ரக்ருதி ஸம்பந்த)முமாகிற இவற்றைச் (சொல்லுகிறது) என்கை,

இவற்றில் அவித்யையாவது, ஜ்ஞாநாநுதயரூபமாய், அந்யதாஜ்ஞாநரூபமாய், விபரீதஜ்ஞாந ரூபமாயும் மூன்றுவகைப்பட்ட அஜ்ஞாநம்.

(கர்மம்) ஆவது புண்யபாபம்; மோக்ஷத்தைப்பற்ற பாபத்தோபாதிபுண்யமும் த்யாஜ்யமாம், * (புண்யபாபேவிதூய)என்னக்கடவதிறே.

(வாஸ)னையாவது அஜ்ஞாநவாஸனையும், கர்மவாஸனையும், ப்ரக்ருதி ஸம்பந்தவாஸனையும். ருசியும் விஷயபேதத்தாலே பஹுவிதையாயிருக்கும். (ப்ரக்ருதிஸம்பந்தம்) ஆவது, ஸ்தூல ஸூக்ஷ்மரூபமா யிருந்துள்ள அசித்ஸம்பந்தம்.

அவ—(சுநு) இனி, ஸர்வஶப்தவிவக்ஷிதத்தை அருளிச்செய்கிறார், (த்ருணச்சேத) என்று தொடங்கி.

---

(சுநு) த்ருணச்சேத கண்டூயநாதிகளைப்போலே ப்ரக்ருதிவாஸனையாலே அநுவர்த்திக்குமவையென்ன, லோகாபவாத பீதியாலும், கருணையாலும், குலக்ரமத்தாலும், செய்யுமவையென்ன; எல்லாவற்றையும் நினைக்கிறது.

---

வ்யா—அதாவது, துரும்புநறுக்குகை, தினவுநின்ற விடம் சொறிகை தொடக்கமானவைபோலே, அபுத்திபூர்வகமாக ப்ரக்ருதி வாஸனையாலே அநுவர்த்திக்கும் உத்தராகங்களென்ன; செய்யாதபோது "லோகம் நம்மை அபவாதஞ்சொல்லுமே" என்கிற, பயத்தாலும் நம்மைக்கண்டு லௌகிகர் இவற்றைத் தவிருவர்களாகில் அவர்களுக்கு விநாஶமாமே! ஐயோ! என்கிற க்ருபையாலுஞ் செய்யும் நித்யநைமித்திக கர்மங்களென்ன; ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கி த்யக்தோபாயங்களிலே அந்வயித்தல், புநப்ரபத்தி பண்ணுதல் (செய்யுமவையென்ன எல்லாவற்றையும் நினைக்கிறது) என்கை.

---

* முண் - உப - ந - க.

அவ—(௬௬) ஸாதநபுத்த்யா செய்யாதவையும் வஸ்துசத்யா ஸாதநகோடியிலே அந்வயிக்குமென்னுமத்தை ஶங்காபூர்வகமாக அருளிச்செய்கிறார், (உந்மத்த) இத்யாதியாலே.

(௬௬) உந்மத்த ப்ரவ்ருத்திக்கு க்ராமப்ராப்திபோலே த்யஜித்த உபாயங்களிலே இவை அந்விதங்களாமோ வென்று நினைக்கவேண்டா.

வ்யா—அதாவது, ※ (உந்மாதஶ்சித்தவிப்ரமः) என்கிறபடியே, சித்தவிப்ரமம் பிறந்தானொருவன், "இன்னவூருக்குப் போகிறோம்" என்கிற நினைவின்றிக்கே யொருவழியே போகாநின்றால், அவ்வழிக்கோரூரோடே ஸம்பந்தமுண்டா யிருக்கையாலே, அவ்வூரிலே சென்று சேருமாபோலே, ஸாதநபுத்திரஹிதமாக லோகாபவாத பீத்யாதிகளாலே செய்யப்படுகிற இவை, விட்ட (உபாயங்களிலே அந்விதங்களாமோ வென்று நினைக்கவேண்டா), அந்விதங்களாயே விடுமென்றபடி.

"ஆந்ருஶம்ஸ்ய ப்ரதாநராய் அநுஷ்டித்தாலும், ஏறிட்டகட்டி ஆகாஶத்திலே நில்லாதப்போலே, அவையு மொருபலத்தோடே ஸந்திப்பிக்கக்கடவது; ஆகையாலே அவையும் பாபஶப்தவாச்யமாகக்கடவது" என்றிறே, தனிஶ்லோகத்திலிவர்தாமே அருளிச்செய்தது.

அவ—(௬௭) அதுதானேயாகிறது, புநःப்ரபத்திக்கு தோஷமேதென்ன அருளிச்செய்கிறார், (கலங்கி) என்றுதொடங்கி.

(௬௭) கலங்கியுபாய புத்த்யாபண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடொக்கும்.

வ்யா—அதாவது, ஸக்ருதநுஷ்டாநமொழிய புநரநுஷ்டானத்தை ஸஹியாதப்ரபத்தி ஸ்வபாவத்தை அறியாதே(கலங்கி)அநிஷ்டநிவ்ருத்திக்காகவாதல்,இஷ்டப்ராப்திக்காக வாதல்,(உபாயபுத்த்யா) மீண்டு (பண்ணும் ப்ரபத்தியும்) † (அதபாதகபீதஸ்த்வம்) என்று, உபாயாந்தரம்போலே பாதகஸமம் என்கை.

அவ—(௬௮) அநந்தரம், சதுர்த்தபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (மோக்ஷயிஷ்யாமி) என்று, அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (முக்தனும்படி பண்ணக்கடவேன்) என்று.

※ அம - நாட்ய - ௨.௦௦. † விஷ்ணுதர்ம ௬௬-௭௧.

(கஅ) (மோக்ஷயிஷ்யாமி) முக்தனும்படி பண்ணக் கடவேன்.

வ்யா—அதாவது, இவற்றில் நின்றும் விடப்பட்டவனும்படி பண்ணக்கடவேன் என்கை.

அவ—(கக) இனி, ஸிஜார்த்தத்தை அருளிச்செய்கிறார், (ஸிச்சாலே) என்று தொடங்கி.

(கக) ஸிச்சாலே நானும்வேண்டா, நீயும்வேண்டா, அவ்வதன்னடையே விட்டுப் போங்காணென்கிறான்.

வ்யா—அதாவது, "இஷ்யாமி" என்கிற (ஸிச்சாலே) ஸ்வயங் கர்த்தா வாகையன்றிக்கே, தான் ப்ரயோஜக கர்த்தாவாய், விடுவிக் கக்கடவனென்கையாலே, (நானும்) இதுக்கொரு (யத்நம்பண்ண வேண்டா,) நீயும் இதுக்கு ப்ரார்த்திக்க (வேண்டா,) நீயென்னை யாஸ்ரயித்த ராஜகுல மாஹாத்ம்யத்தாலே உன்னைக்கண்டு தானே பயப்பட்டு, (கூ0உ) "காணேவொருங்கிற்றுங் கண்டிலமால்" என் கிறபடியே, போனவழி தெரியாதபடி (தந்நடையேவிட்டுப் போங்கா ணென்று) அருளிச்செய்கிறான் என்கை.

அவ—(எ0) இப்படி அருளிச்செய்ததின் கருத்தை வெளியிடு கிறார், (என்னுடைய) வென்று தொடங்கி.

(எ0) என்னுடைய நிக்ரஹபலமாய் வந்தவை நானி ரங்கினால் கிடக்குமோ என்கை.

வ்யா—அதாவது, பாபங்களாகிறன, குப்பையில் ஆமணக்குப் போலே யெழுந்து, பாம்புபோலே மிடற்றைப் பிடிப்பதொன்றன் றிறே; சேதநன்பண்ணின கர்மங்கள் க்ஷணத்வம்ஸிகளாகையாலே, அப்போதே நசித்துப்போம், அஜ்ஞனாகையாலே கர்த்தாவான இவ னும் மறந்துபோக ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் ஒன்றொழியாம லுணர்ந் திருந்து ப்ராப்தகாலங்களிலே தப்பாமல் நிறுத்தநுபவிப்பிக்கிற (என்னுடைய நிக்ரஹ) ரூபமாகையாலே, அந்த நிக்ரஹபலமாய் (வந்தவை) நிக்ரஹத்துக்கு ப்ரதிகோடியான அநுக்ரஹத்தை

(கூ0உ) பெரி - திரு - அ - ருச.

(நான்பண்ணினால்) அவ்விஷயத்தில் பின்னை (கிடக்குமோ என்கை) இதுக்குக்கருத்து என்றபடி.

அவ—(௭௧) தந்நடையே விட்டுப்போம் என்கிற இடத்தில் அபிப்ரேதத்தை அருளிச்செய்கிறார், (அநாதிகாலம்) என்று தொடங்கி.

---

(௭௧) அநாதிகாலம் பாபங்களைக் கண்டு நீ பட்ட பாட்டை அவை தான் படும்படி பண்ணுகிறேன்.

---

வ்யா—அதாவது, (அநாதி)யான காலமெல்லாம் து:காவஹமான (பாபங்கள்) வந்து மேலிடப்புக்கால், அவற்றைக் (கண்டு) நீ நடுங்கின நடுக்கமெல்லாம் மதாஸ்ரயண ராஜகுல மாஹாத்ம்யமுடைய உன்னைக் (கண்டு அவைதான்) குடல்சரிந்து (நடுங்கும்படி பண்ணக்கடவேன் என்கை.

"அவைதானே விட்டுப்போம்படி பண்ணுகையாவது, இவை நமக்குமுன்பு உண்டாய்க் கழிந்தது என்று தோற்றாதபடி போக்குகை; அதாகிறது, இது ஸ்ம்ருதிவிஷயமானாலும் தன்னுடைய ஸ்வாபாவிக வேஷத்தைப்பார்த்து ஸ்வப்நங்கண்டாபோலே யிவை நமக்கு வந்தேறியாய்க் கழிந்ததென்றிருக்கையும், ஸ்ம்ருதியாலே து:கம் அநுவர்த்தியாதிருக்கையும்" என்று தனிஸ்லோகத்தில் இவர்தாமே அருளிச்செய்தது இவ்விடத்தில் அநுஸந்தேயம்.

அவ—(௭௨) "மோக்ஷயிஷ்யாமி" என்கிற உத்தமனிலபிப்ரேதமான ஓரர்த்த விஶேஷத்தை அருளிச்செய்கிறார், (இனி) என்று தொடங்கி.

---

(௭௨) இனி உன்கையிலும் உன்னைக்காட்டித்தாரேன். என்னுடம்பி லழுக்கை நானே போக்கிக்கொள்ளேனோ.

---

வ்யா—அதாவது, இத்தனைகாலமும் நங்கார்யத்துக்கு நாங்கடவோம் என்று, நீதிரிகையாலே, தன்கார்யம் தானேசெய்து கொள்ளுகிறான் என்றிருந்த இத்தனைபோக்கி, எனக்கு நீ ஶரீரதயாஶேஷம் என்றறிந்து என்பக்கலிலே ந்யஸ்தபரனான பின்பு உன்னுடைய பாபவிமோசநார்த்தமானயத்நம் நீ பண்ணிக்கொள்ளென்று (உன் கையிலும் உன்னைக்காட்டித்தாரேன்); எனக்கு ஶரீரபூதனான உன்னுடைய அவித்யாரூபமாலிந்யத்தை ஶரீரியான (நானே போக்கிக் கொள்ளேனோ) என்கை.

(என்னுடம்பிலழுக்கை நானேபோக்கிக் கொள்வேனோ) என்றது, யத்நபலித்வங்கள் இரண்டும் தன்னதென்று தோற்றுகைக்காக ஆகையால், உன்னுடைய விரோதியில் கிடப்பதொன்றில்லை என்றபடி.

“விரோதி நிவ்ருத்தியும், அபிமதப்ராப்தியும் இரண்டும் பலமாயிருக்க ஒன்றைச் சொல்லுவானென்னென்னில், ஒன்றைச் சொன்னால் மற்றை அது தந்நடையே வருகையாலே சொல்லிற்றில்லை; *(மாமேவைஷ்யஸி) என்று, கீழில் உபாயத்துக்குச் சொன்ன பலமொழிய இவ்வுபாயத்துக்கு வேறுபலம் இல்லாமையாலே சொல்லிற்றில்லை என்னவுமாம்; ஆனால், விரோதிநிவ்ருத்தி தன்னைச் சொல்லுவானென்னென்னில், அது அதிகமாகையாலே சொல்லிற்று. விரோதி நிவ்ருத்திபிறந்தால் பலம் ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கையாலே தனித்துச்சொல்ல வேண்டாவிறே,” என்று, ஸங்க்ரஹேண ஸ்ரியஃபதிரஹஸ்யத்திலும், விஸ்தரேணபரந்தபடி தனிஶ்லோகங்களிலும் அருளிச்செய்த ஶங்காபரிஹாரங்கள் இவ்விடத்திலே அநுஸந்தேயம்.

அவ—(௭௩) அநந்தரம், சரமபதத்தை உபாதாநம் பண்ணுகிறார், (மாஶுச:) என்று. அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், (நீயுன்கார்யத்திலே) என்றுதொடங்கி.

---

(௭௩) (மாஶுச:) நீயுன் கார்யத்திலே அதிகரியாமையாலும், நான் உன்கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும் உனக்கு ஶோகநிமித்தம் இல்லைகாண் என்று அவனுடைய ஶோகநிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கிறான்.

---

வ்யா—அதாவது, (நீயுன்கார்யத்திலே) அதிகரித்து நின்றாயாகில் நங்கார்யத்துக்கு என்செய்வோம் என்று கரைந்து ஶோகிக்க ப்ராப்தம்; (நான் உன்கார்யத்திலே யதிகரி)யாதிருந்தேனாகில் நங்கார்யத்தில் இவன் உதாஸீநனாயிராநின்றான், நாம் எங்ஙனே உஜ்ஜீவிக்கப் புகுகிறோம் என்று, ஶோகிக்க ப்ராப்தம்; இங்ஙனன்றிக்கே, யத்நபலித்வங்கள் இரண்டும் உனக்கில்லாதபடியான ஸ்வரூப பாரதந்த்ர்யத்தை உணர்ந்து, (நீ) உன்னுடைய ரக்ஷண (கார்யத்திலே

---

* ஸ்ரீகீதை - ௧௮ - ௬௫.

அதிகரியா) தொழுகையாலும், உன்னுடைய ரக்ஷணத்தில் யத்ந பலித்வங்கள் இரண்டும் என்னதாம்படி ஸ்வாமியான (நான்) உன் பக்கத்தில் தடையறுக்கையாலே, உன்னுடைய ரக்ஷண (கார்யத்திலே) அதிகரித்துக்கொண்டு போருகையாலும், உனக்கு (ஶோகிக்கைக்கு நிமித்தம் இல்லைகாண்) என்று, முன்பு ஶோகாவிஷ்டனாய் நின்ற (அவனுடைய ஶோக)த்தினுடைய (நிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கிறான்) என்கை.

இத்தால் (அஹம், த்வா), என்கிற பதங்களாலே சொல்லப்பட்ட ரக்ஷ்யரக்ஷகபூதரான இருவருடைய ஸ்வபாவத்தையும் அநுவதித்துக்கொண்டு, ஶோகாபநோதநம் பண்ணினபடியை அருளிச் செய்தாராயிற்று.

அவ—(எச) இனிமேல், நிவர்த்தகனான தன்னுடையவும், நிவர்த்யங்களான பாபங்களினுடையவும் ஸ்வபாவங்களைச் சொல்லி, ஶோகாபநோதநம் பண்ணினபடியை அருளிச்செய்கிறார், (நிவர்த்தகஸ்வரூபத்தை) என்றுதொடங்கி.

---

(எச) நிவர்த்தக ஸ்வரூபத்தைச்சொல்லி, நிவர்த்யங்கள் உன்னைவந்து மேலிடாதென்றுசொல்லி, உனக்கு ஶோகநிமித்தம் இல்லைகாண் என்கிறான்,

---

வ்யா—அதாவது, "அஹம்" என்று, ஸர்வஜ்ஞத்வாதிகுணவிஸிஷ்டனாய்க்கொண்டு விரோதி (நிவர்த்தக)னாயிருக்கிற தன் (ஸ்வரூபத்தைச்சொல்லி), "த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று (ணிச்சாலே) (நிவர்த்யங்க)ளான பாபங்கள் உன்னைக்கண்டு தானேயஞ்சி ஓடிப்போமொழிய, என்னையே உபாயமாக ஸ்வீகரித்திருக்கிற (உன்னை வந்துமேலிடாது) என்னுமிடம் (சொல்லி), அநந்தரம், (மாஶுச:) என்கையாலே, இப்படியானபின்பு (உனக்கு ஶோகிக்க) (நிமித்தமில்லை) என்கிறான் என்கை.

அவ—(எ௩) இத்தலையில் விரோதியைப் போக்குகைக்குத் தானொருப்பட்டு நிற்கிறபடியை அறிவித்து, இவனுடைய ஶோகத்தைப் போக்குகிறமையை அபியுக்தோக்தியை நிதர்ஶநமாக்கிக்கொண்டு அருளிச்செய்கிறார், (எத்தினால்) என்றுதொடங்கி.

---

(எ௩) "எத்தினாலிடர்க்கடற் கிடத்தி யேழைநெஞ்சமே" என்கிறான்.

வ்யா—அதாவது, திருமழிசைப்பிரான் தம்முடைய திருவுள்ளத்தைக்குறித்து, ஸர்வேஶ்வரன் இத்தலையில் விரோதியைப்போக்கி அடிமைகொள்வதாக என்றுகொடிவந்து புகுந்திருக்கிறபடியைச் சொல்லி, இனி எதுக்காக நீ துக்கஸாகரத்திலே அழுந்துகிறாய், என்றாப்போலே, ஈஶ்வரனும் இப்போது இத்தலையில் ஸகலபாபங்களையும் போக்குவதாகத் தானே ஏறிட்டுக்கொண்டமையை யறிவித்து, இனி எதுக்காக ஶோகிக்கிறாயென்று இவனைக்குறித்து அருளிச்செய்கிறான் என்கை.

அவ—(௭௯) இனி, இவனுடையஶோகம் மறுவலிடாமல் போக்குகைக்கு உறுப்பான ஒருபகவதபிப்ராய விஶேஷத்தை அருளிச்செய்கிறார், (பாபங்களை நான்பொறுத்து) என்றுதொடங்கி.

---

(௭௯) பாபங்களை நான்பொறுத்து புண்யமென்று நினைப்பிடாநிற்க நீ ஶோகிக்கக்கடவையோ.

---

வ்யா—அதாவது, நீசெய்த (பாபங்களை நான்) முந்துற என்னுடைய க்ஷமாவிஷயமாக்கி, அவ்வளவு மன்றிக்கே, பின்னை உன்பக்கல் எனக்குண்டான வாத்ஸல்யத்தாலே (௧0௪) "செய்தகுற்றம் நற்றமாகவேகொள்" (௧0௫) "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்கிறபடியே, அவைதன்னைப்பாபமாக நினையாதே (புண்யம் என்று நினைப்பிடாநிற்க), இனி, (நீஶோகிக்கக்கடவையோ) என்கை. ஆக, இவ்வுத்தரார்த்தத்தில் அஞ்சுபதத்தாலும், நிவர்த்தக ஸ்வரூபத்தையும், நிவர்த்யாஶ்ரயத்தையும், நிவர்த்யங்களான பாபங்களையும், அவற்றினுடைய நிவ்ருத்திப்ரகாரத்தையும், தத்கார்யமான ஶோகநிவ்ருத்தியையும் சொல்லிற்றாயிற்று.

இனி, இந்தஶ்லோகார்த்தத்தில் ருசியொருவனுக்குண்டாகையில் உள்ளவருமையையும், இந்தஶ்லோகந் தனக்கின்னதிலே நோக்கென்னுமத்தையும், இதில் விஶ்வாஸோத்பத்தியின் அருமையையும், ஈஶ்வரன்தான் முதலிலே இத்தை உபதேஶியாமைக்கு ஹேதுவையும், வேதபுருஷன் உபாயாந்தரங்களை விதிக்கைக்கு ஹேதுவையும், உபாயாந்தரங்களை ஸ்வரூபேண த்யஜிக்குமளவில் தோஷம் இல்லை

---

(௧0௩) திரு - சந் - வி ௧௧௫. (௧0௪) திரு - சந் - வி - ௧௧௧.
(௧0௫) பெரி - ஆ - திரு - மொ - ௪ - ௧ - ௨.

என்னுமத்தையும், அவைதான் முகாந்தரேணாக்விதங்கள் ஆகை யாலே ஸ்வரூபேணத்யக்தங்கள் அன்றென்னுமிடத்தையும், பேற் றுக்கு ஸாதநம் இன்னதென்னுமத்தையும், பலஸித்திக்கு இவன் பக்கல் வேண்டும் அம்ஶத்தையும், ஈஶ்வரனுக்கு இவனுடைய ஸௌக்ருதம் அநிஷ்டம் என்னுமத்தையும், இவ்வர்த்தத்தில் ஆஸ்திக் யாதிகள் உண்டாய்ப் பிழைத்தல், இல்லையாகில் நஶித்தல் இத்தனை என்னுமத்தையும், வ்யவஸாயஹீநன் இதில் அந்வயித்தால் விநாஶ பர்யந்தமாம் என்னுமத்தையும், இதுக்கு அதிகாரிகள் இன்னாரென் னுமத்தையும் அடைவே அருளிச்செய்து தலைக்கட்டுகிறார்.

அவ—(எஏ) அவற்றில் ப்ரதமத்தில் ஒருவனுக்கு ருசிபிறக்கை யில் உள்ள அருமையை தர்ஶிப்பிக்கைக்காக ஓர் ஐதிஹ்யத்தை அரு ளிச்செய்கிறார், (உய்யக்கொண்டார் விஷயமாக) என்று தொடங்கி.

## (எஏ) உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.

வ்யா-அதாவது, தத்த்வநிர்ணயம்பண்ணின (உய்யக்கொண்டார்) பக்திநிஷ்டரா யிருக்கையாலே, அவரை "ப்ரபத்திநிஷ்டராம படி பண்ணவேணும்" என்று, அவருக்கு இந்த ஶ்லோகார்த்தத்தை அருளிச்செய்தவளவிலே, அர்த்த ஸ்த்திதியுமறிந்தாயிருந்தது, ஆகி லும் அத்தைவிட்டு இத்தைப்பற்றத்தக்க ருசி எனக்கில்லை என்ன ; வித்வான் ஆகையாலே அர்த்தத்துக்கிசைந்தாய், பகவத்ப்ரஸாதம் இல்லாமையாலே ருசிபிறந்ததில்லை என்று, அவர் (விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை) நினைப்பது என்கை.

அவ—(எஅ) இனி, இந்த ஶ்லோகத்துக்கு இன்னதிலே நோக் கென்னுமத்தை அருளிச்செய்கிறார், (இதுக்கு ஈஶ்வரஸ்வாதந்த்ர் யத்திலே நோக்கு) என்று.

## (எஅ) இதுக்கு ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கு.

வ்யா—அதாவது, ஶாஸ்த்ரங்கள் எல்லாம் ஒருதலையும், தான் ஒருதலையுமா யிருக்கிற இந்த ஶ்லோகத்துக்கு, ஶாஸ்த்ரவிஹிதமான ஸகலதர்மங்களையும் ஸவாஸநமாக விடுவித்து, இச்சேதநனுக்குத்தா னே நிரபேக்ஷஸாதநமாய், ப்ராப்தி ப்ரதிபந்தகஸகலபாபங்களையும்

தன்னிட்புகட்டு, ஸ்வப்ராப்தியைப் பண்ணிக்கொடுக்கும் ஸ்வாதீந ஸகல ப்ரவ்ருத்திகனான (ஈஶ்வர)னுடைய (ஸ்வாதந்த்ர்யத்திலே) தாத்பர்யம் என்கை.

அவ—(எகூ) இனி, இதில் விஶ்வாஸோத்பத்தியின் அருமையை அருளிச்செய்கிறார், (இதுதான்) என்று தொடங்கி.

---

(எகூ) "இதுதான் அநுவாதகோடியிலே" என்று வங்கிப்புரத்து நம்பிவார்த்தை.

---

வ்யா—அதாவது, இந்த ஶ்லோகந்தான் (அநுவாத)த்தினுடைய (கோடியிலே என்று) ஆப்ததமமான (வங்கிப்புரத்துநம்பி) அருளிச் செய்யும் (வார்த்தை) என்கை.

அவ—(அo) அது எத்தாலே என்ன அருளிச்செய்கிறார், (அர்ஜுநன்) என்று தொடங்கி.

---

(அo) அர்ஜுநன், க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ருஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன் தன்கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும், இவனே நமக்குத் தஞ்சமென்று துணிந்தபின்பு தன்னைப்பற்றச் சொல்லுகையாலே.

---

வ்யா—அதாவது, இதுக்கு அதிகாரியான (அர்ஜுநன்) பால்யமே தொடங்கி (க்ருஷ்ணனுடைய) அகடிதகடநாஸாமர்த்ய ப்ரகாஶகமான அதிமாநுஷ சேஷ்டிதங்களாலும், * ஏஷநாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:—நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்। புண்யாத்வாரவதீபத்ர தத்ராஸ்தே மது ஸூதந:—ஸாக்ஷாத்தேவ: புராணோஸௌ ஸஹி தர்ம:ஸநாதந:। யேசவேதவிதோவிப்ரா: யேசாத்யாத்மவிதோஜநா:—தே வதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம்ஸநாதநம் - பவித்ராணாம்ஹி கோவிந்த: பவித்ரம் பரமுச்யதே - புண்யாநாமபி புண்யோஸௌ மங்களாநாம்ச மங்களம்) † (யத்ரநாராயணோதேவ: பரமாத்மா ஸநாதந:—தத்ர க்ருத்ஸ்நம் ஜகத்பார்த்த நிர்த்தாங்யாயதநாநிச) ‡ (க்ருஷ்ண

---

* பாரதம் - ஆரண் - அசா - உச, உரு, உகா, உள.

† பாரதம் - ஆ - அஅ - உள. ‡ பாரதம் - ஸபா - உஅ - உரு.

ஏவஹி லோகாகாமுத் பத்திரபிசாப்யய—க்ர்ஷ்ண ஏவஹி க்ர்தேபூத மிதம் விச்வம் சராசரம்) என்றும் இத்யாதிகளாயிருந்துள்ள பராவர தத்த்வ யாதாத்ம்ய வித்துக்களான (ருஷிகள் வாக்யங்களாலும்), பால்யாத்ப்ரப்ருதி புரவாஸதனையோடு, வநவாஸதனையோடு வாஸியற (க்ருஷ்ணன் தன்கார்ய) த்துக்குக்கடவனாய் நோக்கிக் (கொண்டு போருகையாலும்) இவன் சொல்லுகிற உபாயங்கள் எல்லாம் நமக்குத் தஞ்சமன்று, (இவனே நமக்குத்தஞ்சம் என்று) விஶ்வஸித்த (பின்பு), ஆனால் என்னைப்பற்றென்று (சொல்லுகையாலே) என்கை.

அவ—(அக) இது தன்னை முதலிலே உபதேசியாமைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார், (புறம்பு) என்று தொடங்கி.

---

(அக) புறம்புபரந்தது எல்லாம் இவன்நெஞ்சை சோதிக்கைக்காக.

---

வ்யா—அதாவது, * (யச்ச்ரேயஸ்யாந் நிஶ்சிதம் ப்ரூஹி தந்மே ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்) என்ற இவனுக்கு உபாயோபதேசம் பண்ணத்தொடங்குகிற வளவிலே, முதலிலே இத்தை உபதேசியாதே உபாயாந்தரங்களைப் பரக்கநின்று உபதேசித்தது எல்லாம் அவ்வளவிலே பர்யவஸித்துவிடுமோ, அவற்றினுடைய தோஷதர்ஶநத்தாலே இவ்வுபாயோபதேசத்துக்கு அதிகாரியாமோ என்று இவனுடைய ஹ்ருதயத்தைச் (சோதிக்கைக்காக) என்கை.

அவ—(அஉ) அறுவா அவனன்றோ இப்படி ஹ்ருதயஶோதநார்த்தமாக உபாயாந்தரங்களை உபதேசித்தவன், வேதபுருஷன் அவற்றை விதிப்பான் என்னென்ன அருளிச்செய்கிறார், (வேதபுருஷன்) என்று தொடங்கி.

---

(அஉ) வேதபுருஷன் உபாயாந்தரங்களை விதித்தது, நொண்டிப்பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப்போலே, அஹங்காரமமகாரங்களால் வந்தகளிப்பற்று ஸ்வரூப ஜ்ஞாநம் பிறக்கைக்காக.

---

* ஸ்ரீ கீதை - உ - எ. கார்பண்யதோஷோபஹதஸ்வபாவ: ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா:—யச்ச்ரேயஸ்ஸ்யாந்நிஶ்சிதம் ப்ரூஹி தந்மே ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்.

வ்யா—அதாவது, ஆப்ததமனான (வேதபுருஷன்) * (விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத) †(தமித்யாத்மாநம் த்யாயத) ‡(ஆத்மாநமேவலோக முபாஸீத) §(ஆத்மாவாரேத்ரஷ்டவ்யஶ்ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:) இத்யாதிகளாலே, உபாயாந்தரங்களை மோக்ஷ ஸாதநமாக (விதித்தது), பட்டிதின்றுதிரிகிற (பஶுவுக்கு) இடைஞ்சுவசப்படுகைக்காகக் கழுத்திலே (தடி)யைக் (கட்டி விடுவாரைப் போலே, அஹங்கார மமகார) வஶ்யனாய்க் களித்துத்திரிகிற இவனுக்கு, ¶(ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந ஸமாதிபி:) என்கிறபடியே, காயக்லேஶரூபமான கர்மாநுஷ்டாநம், இந்த்ரியஜயம் முதலான அருந்தேவைகளாலே செறப்புண்டு அந்த (க்களிப்புப்) போய் பகவத்பாரதந்த்ர்யமாகிற (ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்கைக்காக என்கை.

அவ—(அரு) ஆனால், இப்படிஸ்வரூபஜ்ஞாநோதய ஹேதுவான இவற்றைவிட்டால் குற்றமாகாதோ என்ன அருளிச்செய்கிறார், (ஸந்யாஸி) என்று தொடங்கி.

---

(அரு) ஸந்யாஸி முன்புள்ளவற்றை விடுமாபோலே இவ்வளவு பிறந்தவன் இவற்றைவிட்டால் குற்றம் வாராது.

---

வ்யா—அதாவது, சரமாஶ்ரமத்திலே அந்விதனானவன் பூர்வாஶ்ரமதர்மங்களை (விடு) கிறாப்போலே, அந்யோபாயங்களினுடைய ஸ்வரூப விரோதித்வாதிகளாலே ஸித்தோபாயத்திலே இழியும்படி (இவ்வள)வான ஜ்ஞாநபாகம் (பிறந்தவன்) இவ்வுபாயாந்தரங்களை (விட்டால்) தோஷமாகாது என்றபடி.

அவ—(அசா) இவைதான் ஆகாராந்தரத்தாலே அந்விதங்கள் ஆகையாலே இவற்றில் இவன் தனக்கு ஸ்வரூபத்யாகம் இல்லை என்னுமதை அருளிச்செய்கிறார், (இவன்றான் இவை தன்னை நேராகவிட்டிலன்) என்று.

---

(அசா) இவன்றான் இவை தன்னை நேராகவிட்டிலன்.

---

* ப்ரு-சா-உக. † முண்ட-உ-உ-சு. ‡ ப்ரு-க-ச-கரு. § ப்ரு-சு-சா-ரு. ¶ லக்-க்வக்ரிஸ்ப்ருதி.

வ்யா—அதாவது, ஸாதநாந்தர பரித்யாக பூர்வகமாக ஸித்த ஸாதந பரிக்ரஹம்பண்ணின இவ்வதிகாரிதான்; கர்மஜ்ஞாநாதிகள் ஆகிற இவை தன்னை ஸ்வரூபேண த்யஜித்திலன் என்கை.

அவ—(அரு) அதெங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார், (கர்மம்) என்றுதொடங்கி.

---

(அரு) கர்மம் கைங்கர்யத்திலேபுகும், ஜ்ஞாநம் ஸ்வரூப ப்ரகாஶத்திலே புகும், பக்திப்ராப்ய ருசியிலேபுகும், ப்ரபத்தி ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநத்திலே புகும்.

---

வ்யா—அதாவது, ஸ்வவர்ணாஶ்ரமோசிதமாக இவன் அநுஷ்டிக்கும் விஹித (கர்மம்,) ஸாதநபுத்த்யாவன்றிக்கே ஆந்ருஶம்ஸ்யத்தாலே பரார்த்தமாக அநுஷ்டிக்கையாலே, ஈஶ்வரனுக்கு மிகவும் உகப்பாகையாலே, தத்ப்ரீதி ஹேதுவாகப் பண்ணும் (கைங்கர்யத்திலே) அந்தர்ப்பவிக்கும்.

(கOச) "நுண்ணறிவு" என்கிறபடியே, ஸ்வஸ்வரூபஜ்ஞாந பூர்வகமாக பரஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கைக்கு உறுப்பான ஸூக்ஷ்ம (ஜ்ஞாநம்,) ஸாதநபுத்தி கழிந்தவாறே ஸ்வரூபத்தினுடைய (ப்ரகாஶத்திலே) அந்தர்ப்பவிக்கும். † (பக்த்யாத்வநந்யயா ஶக்ய:) என்கிறபடியே, பகவத்ப்ராப்திக்கு ஸாதநமான (பக்தி) அந்த ஸாதநபுத்திபோனவாறே போஜநத்துக்கு க்ஷுத்துப்போலே (ப்ராப்ய)மான கைங்கர்யத்துக்கு பூர்வக்ஷணத்திலே யநுவர்த்திக்கக்கடவதான (ருசியிலே) அந்தர்ப்பவிக்கும்.

ஸித்தோபாய வரணரூபையான (ப்ரபத்தி), ஏகபதத்திலே சொல்லுகிறபடியே, ஸாதநபாவம் கழிந்தவாறே அத்யந்த பாரதந்த்ரதயா அநந்யஶரணமா யிருந்துள்ள (ஸ்வரூப) த்தினுடைய (யாதாத்ம்யஜ்ஞாநத்திலே) அந்தர்ப்பவிக்கும் என்கை.

அவ—(அசா) பக்திப்ரபத்திகள் இரண்டையும் கழித்தால் இவன் தனக்குப் பலஸாதகமாவதேது என்ன அருளிச்செய்கிறார், (ஒருபலத்துக்கு) என்றுதொடங்கி.

---

(கOச) திரு - வா - ரு - எ - க.   † கீதை - கக - ருச.

(அகூ) ஒருபலத்துக்கு அரியவழியையும், எளிய வழியையும் உபதேசிக்கையாலே; இவை இரண்டும் ஒழிய பகவத்ப்ரஸாதமே உபாயமாகக் கடவது.

வ்யா—அதாவது, பகவத்ப்ராப்தியாகிற (ஒருபலத்துக்கு) (ஜந் மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந ஸமாதிபி:—நராணாம் க்ஷீணபாபாநாம் க்ர்ஷ்ணே பக்தி:ப்ரஜாயதே) என்கிறபடியே, அநேகஜந்மங்களிலே கர்மஜ்ஞாநாதிகளாகிற அங்கங்களாலே ஸாதிக்கப்படுமதாகையாலே, (அரி) தாயிருந்துள்ள பக்திமார்க்கத்தையும், "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று, ஸகலப்ரவ்ருத்தி நிவ்ருத்திபூர்வகமாக ஸ்க்ருதநுஷ்டேயமாகையாலே, (எளி) தாயிருந்துள்ள ப்ரபத்தி மார்க்கத்தையும் உபதேசிக்கையாலே, ஸாதநகௌரவ லாகவங்களில் தாத்பர்யமின்றிக்கே தத்தத்வ்யாஜேந பலப்ரதனாக நின்றுள்ள அவனுடைய ப்ரஸாதமே ப்ரதாநமாகையாலே, பக்திப்ரபத்திகளாகிற இவையிரண்டுமொழிய பகவானுடைய ப்ரஸாதம் உபாயமாகக்கடவது என்கை.

அவ—(அள) ஆனாலும் பேற்றுக்கு இவன்பக்கலிலும் ஏதேனுமுண்டாக வேண்டாவோவென்ன அருளிச்செய்கிறார், (பேற்றுக்கு) என்றுதொடங்கி.

(அள) பேற்றுக்கு வேண்டுவது விலக்காமையும், இரப்பும்.

வ்யா—அதாவது, பலஸித்திக்குச் சேதநன்பக்கல் உண்டாக வேண்டுவது, ஸ்வயத்நத்தாலே அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காதொழிகையும், அது புருஷார்த்தமாகைக்கு உறுப்பான இரப்பும் என்கை.

அவ—(அஅ) இங்ஙனன்றிக்கே, இவன்பக்கலிலும் சில ஸுக்ருதமுண்டானால் ஆகாதோவென்ன; அது உபாயபூதனுக்கு அநிஷ்டம் என்னுமத்தை அருளிச்செய்கிறார், (சக்ரவர்த்தி திருமகன்) என்று தொடங்கி.

(அஅ) சக்ரவர்த்திதிருமகன் பாபத்தோடே வரிலும் அமையும் என்றான், இவன் புண்யத்தைப் பொகட்டு வரவேணும் என்றான்.

வ்யா—அதாவது, * (ராமோவிக்ரவாந்தர்ம:) என்கிற, சக்ரவர்த்தி திருமகன், † (யதிவாராவணஸ்ஸ்வயம்) என்று, பாபிஷ்டனான ராவணன் தானாகிலும் அழைத்துவாரும் என்கையாலே, பாபம் பேற்றுக்கு ஹேதுவாக நினைக்கைக்குடலல்லாமையாலே, பாபத்தோடே வரினுமமையும் என்றான். ‡ (க்ர்ஷ்ணம்தர்மம்ஸநாதநம்) என்கிற இவன், (ஸர்வதர்மான் பரித்யஜ்ய) என்கையாலே, பேற்றுக்கு ஹேதுவாக நினைக்கைக்கு உடலான, புண்யத்தைப் பொகட்டுவரவேணும் என்றான் என்கை.

ஆகையால், ஸஹாயாந்தர ஸம்ஸர்க்காஸஹனான உபாயபூதனுக்கு இவன்பக்கல் ஸுக்ருதம் அநிஷ்டம் என்று கருத்து.

அவ—(அகூ) இவ்வர்த்தத்தில் இழிந்தவனுக்கு ஆஸ்திகனை உஜ்ஜீவித்தல், நாஸ்திகனை நசித்தல் ஒழிய மத்யமஸ்த்திதியில்லை என்னுமத்தைப் பூர்வாசார்ய வசநத்தாலே அறிவிக்கிறார், (ஆஸ்திகனை) என்றுதொடங்கி.

(அகூ) "ஆஸ்திகனை இவ்வர்த்தத்தில் ருசி விஸ்வாஸங்களுடையனை உஜ்ஜீவித்தல், நாஸ்திகனை நசித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை" என்று பட்டர்க்கு எம்பாரருளிச் செய்தவார்த்தை.

வ்யா—அதாவது, இவ்வர்த்தத்தில் அந்விதனானவன் பகவத்ப்ரபாவத்தால் "இதுஸத்யம்" என்று, (ஆஸ்திகனை) யிவ்வர்த்தில் (ருசி)யும், "இதுதப்பாது", என்கிற விஸ்வாஸமுமுடையனை உஜ்ஜீவித்தல்; ஶாஸ்த்ரங்களெல்லா மொருதலையும் இதுவொரு தலையுமாய் இப்படி யிருப்பதொன்றுண்டோவென்று, (நாஸ்திகனை) யித்தையனாதரித்து (நசித்த) லித்தனை (யொழியநடுவொருநிலை) யில்லை என்று ஸகல ஶாஸ்த்ரவித்தமரான (பட்டருக்கு) ஆப்ததமரான (எம்பாரருளிச் செய்தவார்த்தை) என்கை.

அவ—(கூ0) வ்யவஸாயஹீனனுக்கு இதிலந்வயம் விநாஶத்துக்குடலாம் என்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார், (வ்யவஸாயம்) என்றுதொடங்கி.

* ரா - அ - ௩௰ - க. † ரா - யுத் - கஅ - ௩௫.

‡ பார - ஆர - அசு - உசு.

(கூ0) வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அந்வயம், ஆமத்தில் போஜநம்போலே.

வ்யா—அதாவது, இதில்சொல்லுகிற த்யாகஸ்வீகாரங்களுக்கீடான (வ்யவஸாயமில்லாதவனுக்கு,) இதிலுண்டான (அந்வயம்,) அஜீர்ணதசையில் பண்ணின (போஜநம்,) மரணஹேதுவாமா போலே விநாசஹேதுவாய் பர்யவஸிக்கும் என்கை.

அவ—(கூக) இதுதனக்கு அதிகாரிகள் இன்னாரென்னுமத்தை அருளிச்செய்கிறார், (விட்டுசித்தர் கேட்டிருப்பரென்கிறபடியே அதிகாரிகள் நியதர்) என்று.

(கூக) "விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்கிறபடியே, அதிகாரிகள் நியதர்.

வ்யா—அதாவது, (கூ0எ) "செம்மையுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்மைப் பெருவார்த்தைவிட்டு சித்தர்க்கேட்டிருப்பர்" என்று, கரணத்ரயத்தாலும் செவ்வியராய், அதுதன்னை அர்த்தக்ரியா காரியாய்க்கொண்டு கோயிலிலே சாய்ந்தருளினவர்தாம், அர்ஜுநவ்யாஜத்தாலே திருத்தேர்த்தட்டிலே நின்றருளிச்செய்த யதார்த்தமுமாய், சீரியதுமாய், ஸுலபமுமான "மாமேகம்ஶரணம் வ்ரஜ" என்கிறவார்த்தையை பெரியாழ்வார்கேட்டு, தந்நிஷ்டரா யிருப்பர்" என்கிறபடியே, இவ்வர்த்தத்துக்கு அதிகாரிகள் இது கேட்டால் இதின்படியே நியதராயிருக்குமவர்களென்கை.

அவ—(கூஉ) இவ்வர்த்தநிஷ்டரான ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்தியில் இதுக்கு அர்த்தமாக அநுஸந்திக்கப் படுமவற்றை அருளிச்செய்து இதுதன்னை நிகமிக்கிறார். (வார்த்தையறிபவர்) என்றுதொடங்கி.

(கூஉ) "வார்த்தையறிபவர்" என்கிறபாட்டும், "அந்தரஞ்சி" என்கிறபாட்டும் இதுக்கு அர்த்தமாக அநுஸந்தேயம்.

பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

முமுக்ஷுப்படி முற்றிற்று.

---

(கூ0எ) நா - தி - கூ - கூ.

வ்யா—அதாவது, (கOஅ) "வார்த்தையறிபவர் பேர்த்தபிறப் பொடு நோயொடுமூப்பொ டிறப்பவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரறநீக்கித்தன்றாளின்கீழ்ச்சேர்த்தவன் செய்யுஞ் சேமத்தை யெண்ணித் தெளிவுற்று மாயவற்கா ளன்றியாவரோ" என்று, "மாமேகம் ஶரணம்வ்ரஜ - ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற நல்வார்த்தையை அறியுமவர்கள், பரணிக்கூடு பரந்தாப் போலே இவ்வாத்மாவைச் சூழப்பொதிந்துகிடக்கிற ஜந்மங்களோ டும், அவைபுக்கவிடத்தே புகக்கடவதான வ்யாதியோடும், அங்ஙனே யாகிலும் சிறிதுநாள் செல்லாதபடி இடிவிழுந்தாப்போலே வரும் ஜரையோடும், அங்ஙனேயாகிலும் இருக்கவொண்ணாதபடி இவ னுக்கு அநபிமதமான விநாஶமுமாகிற விவற்றை விரகர்நெடுஞ் சுவர் தள்ளுமாபோலே தள்ளி, அவைபோனவநந்தரம் வரக்கடவ தானகைவல்யமாகிற மஹாதுக்கத்தை ஸவாஸநமாகப்போக்கி, பாத ரேகைபோலே தன்திருவடிகளின் கீழே சேரும்படிபண்ணி, புநரா வ்ருத்தியறும்படி அவன்பண்ணும் ரக்ஷையை அநுஸந்தித்து வ்ய வஸிதராய்க்கொண்டு தங்களுக்காஶ்ரய ணீயனாய் விரோதிநிவர்த்தக னான ஆஶ்சர்யபூதனுக்கொழிய வேறொருவர்க்காளாவரோவென்று, நம்மாழ்வாரருளிச்செய்த "வார்த்தையறிபவர்" என்கிறபாட்டும்,

(கOகூ) "முத்தனார் முகுந்தனார்-ஒத்தொவ்வாதபல் பிறப்பொ ழித்து நம்மையாட்கொள்வான்-அத்தனாகியன்னை யாகியாளு மெம் பிரானுமாய் புகுந்து - நம்முள்மேவினார் ஏழைநெஞ்சமே எத்திறாலி டர்கடற்கிடத்தி" என்று, ஹேயப்ரத்யநீகராகையாலே அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தராய், முக்தி பூமிப்ரதரானவர் ஸகல தேஹவர்த்திக ளான ஆத்மாக்களும் ஜ்ஞாநைகாகாரதயாவொத்து, தேவாதிபேதத் தாலே ஒவ்வாமலிருக்கும் பலவகைப்பட்ட ஜந்மங்களைப்போக்கி, நித்ய ஸம்ஸாரிகளாய்ப்போந்த நம்மை நித்யஸூரிகள் கொள்ளும் அடிமையைக் கொள்ளுகைக்காக, ஹிதமேப்ரவர்த்திப்பிக்கும் பிதா வாயும், ப்ரியமேப்ரவர்த்திப்பிக்கும் மாதாவாயும், அடிமைகொள் ளக்கடவ நம்முடைய ஸ்வாமியாயும் இப்படி ஸர்வவித பந்துவா யும், நம்முடைய தண்மையையும், தம்முடைய பெருமையையும் பாராதே, நம்முடைய ஸர்வபாரத்தையும் தாமே யேறிட்டுக்

(கOஅ) திரு - வா - ா - ரு - கC.
(கOகூ) திரு - சந் - விரு - ககரு.

கொண்டு செய்வாராக ஹேயமான நம்முள்ளேபுகுந்து ஒருநீராகப் பொருந்தினார்; அறிவிலியான நெஞ்சே, நம்முடைய ஹிதம் அறிகைக்கு நாம் ஸர்வஜ்ஞராயோ, அவன் அஜ்ஞனாயோ, ஹிதத்தைப் ப்ரவர்த்திப்பிக்கைக்கு நாம் ஶக்தராயோ, அவன் அஶக்தனாயோ, கார்யஞ்செய்து கொள்ளுகைக்கு நாம் ப்ராப்தராயோ, அவன் அப்ராப்தனாயோ, தன்மேன்மைபாராதே தாழநின்று உபகரிக்குமவனாயிருக்க எத்தாலே நீ து:கஸாகரத்தில் கிடக்கிறது என்று, திருமழிசைப்பிரானருளிச்செய்த "அத்தனாகி" என்கிறபாட்டும் இந்த ஶ்லோகத்துக்கு அர்த்தமாக அநுஸந்தேயமென்கை.

ஆக, இத்தால் ஸ்வீகாராங்கதயா த்யாஜ்யமான தர்மவிஶேஷங்களையும், அந்த தர்மங்களினுடைய த்யாகப்ரகாரத்தையும், அந்த தர்மத்யாக பூர்வகமாகப் பற்றும் விஷயத்தினுடைய ஸௌலப்யாதி குணயோகத்தையும், அக்குணவிஶிஷ்ட வஸ்துவினுடைய ஸஹாயாஸஹத்வலக்ஷணமான நைரபேக்ஷ்யத்தையும், நிரபேக்ஷ வஸ்துவினுடைய உபாயபாவத்தையும், அத்தை உபாயத்வேந ஸ்வீகரிக்கையையும், ஸ்வீக்ருதமான உபாயத்தினுடைய ஜ்ஞாநஶக்த்யாதி குணயோகத்தையும், அக்குண விஶிஷ்டவஸ்துவிலே ந்யஸ்தபரனான அதிகாரியையும், அதிகாரிக்கு விரோதியான பாபஸமூஹத்தையும், அப்பாபவிமோசந ப்ரகாரத்தையும், அப்பாப விமோசகனைப்பற்றின அதிகாரியுடைய நைர்ப்பர்யத்தையுஞ் சொல்லிற்றாயிற்று.



பிள்ளை லோகாசார்யர் திருவடிகளேஶரணம்.

ஜீயர் திருவடிகளே ஶரணம்.

முமுக்ஷுப்படிவ்யாக்யாநம்

முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முமுக்ஷுப்படி வ்யாக்யாநத்திலடங்கிய தமிழ்ப்பாசுரங்கள்.

(க) பெரியதிருமொழி அ - பத்து கO - திருமொ - ங - பாசுரம்.
மற்றுமோர்தெய்வமுளதென்றிருப்பாரோ
டுற்றிலேன் உற்றது முன்னடியார்க்கடிமை
மற்றெல்லாம்பேசிலும்நின் திருவெட்டெழுத்தும்
கற்று நான் கண்ணபுரத் துறையம்மானே.

(உ) பெரியதிருமொழி சு - பத்து உ - திருமொ - உ பாசுரம்.
மறந்தேனுன்னை முன்னம்மறந்த மதியின்மனத்தால்
இறந்தேனெத்தனையும் மதனாலிடும்பைக் குழியிற்
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமானுன் திருமார்பா
சிறந்தேன் நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே.

(ங) பெரியதிருமொழி கO - பத்து சு - திருமொ - க - பாசுரம்.
எங்கானுமீதொப்பதோர் மாயமுண்டே
நரநாரணனாயுலகத்தறநூல்
சிங்காமைவிரித்தவனெம்பெருமான்
அதுவன்றியுஞ் செஞ்சுடரும்நிலனும்
பொங்கார்கடலும் பொருப்பு நெருப்பும்
நெருக்கிப்புகப்பொன் மிடறத்தனைபோ
தங்காந்தவன்காண் மினின்றாய்ச்சியரா
லளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே.

(ச) திருவாய்மொழி க - பத்து கூ - திருவா - அ - பாசுரம்.
நாவினுள்நின்று மலருஞ்ஞானக்கலைகளுக்கெல்லாம்
ஆவியுமாக்கையுந்தானே அழிப்போடளிப்பவன்றானே
பூவியறற்றடந்தோளன் பொருபடையாழிசங்கேந்துங்
காவிநன்மேனிக் கமலக்கண்ணனென் கண்ணினுளானே.

(ரு) திருவாய்மொழி ங - பத்து ங - திருவா - ங - பாசுரம்.
அண்ணல்மாயனணிகொள் செந்தாமரைக்
கண்ணன்செங்கனிவாய்க்கருமாணிக்கந்
தெண்ணிறச்சுனை நீர்த்திருவேங்கடத்
தெண்ணில் தொல்புகழ்வானவரீசனே.

(சு) திருவிருத்தம் க - பாசுரம்.
பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்
இன்னின்றநீர்மையினியாமுறாமை உயிரளிப்பான்
என்னின்றயோனியுமாய்ப் பிறந்தாயிமையோர்தலைவா
மெய்ந்நின்றுகேட்டருளாய் அடியேன்செய்யும்விண்ணப்பமே.

(எ) திருவாய்மொழி க - பத்து உ - திருவா - கO - பாசுரம்.
எண்பெருக்கந்நலத் - தொண்பொருளீறில
வண்புகழ்நாரணன் - திண்கழல்சேரே.

(அ) திருவாய்மொழி க - பத்து க0 - திருவா - அ - பாசுரம்.

செல்வநாரணனென்ற சொற்கேட்டலும்
மல்குங்கண்பனி நாடுவன்மாயமே
அல்லுநன்பகலு மிடைவீடின்றி
நல்கியென்னை விடான் நம்பிநம்பியே.

(கூ) திருவாய்மொழி க0 - பத்து கூ - திருவா - க - பாசுரம்.

சூழ்விசும்பணிமுகில் தூரியமுழக்கின
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின
எழ்பொழிலும் வளமேந்தியவென்னப்பன்
வாழ்புகழ்நாரணன் றமரைக்கண்டுகந்தே.

(க0) திருப்பல்லாண்டு ச - பாசுரம்.

எடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்தெங்கள் குழாம்புகுந்து
கூடுமனமுடையீர்கள்வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ
நாடுநகரமுநன்கறிய நமோநாராயணாயவென்று
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டுகூறுமினே.

(கக) பெரியாழ்வார் திருமொழி ரு-பத்து க-திரு-ங பாசுரம்.

நன்மைதீமைகளொன்றுமறியேன் நாரணனென்னுமித்தனையல்லால்
புன்மையாலுன்னைப்புள்ளுவம் பேசிப்புகழ்வானன்றுகண்டாய்திருமாலே
உன்னுமாறுன்னையொன்றுமறியே னோவாதேநமோநாரணாவென்பன் [யே.
வன்மையாவதுன்கோயிலில்வாழும் வைட்டணவனென்னும் வன்மைகண்டா

(கஉ) பெருமாள் திருமொழி க-பத்தி உ-திருமொ ச-பாட்டு.

தோய்த்ததண்டயிர்வெண்ணெய் பாலுடனுண்டலுமுடனாய்ச்சிகண்
டார்த்ததோளுடையெம்பிரானென்னரங்கனுக்கடியார்களாய்
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்தழும்பத்தொழு
தேத்தியின்புறுந்தொண்டர் சேவடியேத்திவாழ்த்துமென்னெஞ்சமே.

(கங) பெருமாள் திருமொழி க-பத்து ங-திருமொழி கக-பாசுரம்.

திடர்விளங்குகரைப் பொன்னிநடுவுபாட்டுத்
திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்
கடல்விளங்குகருமேனி யம்மான் றன்னைக்
கண்ணாரக்கண்டுகக்குங் காதல்தன்னால்
குடைவிளங்குவிறற்றானைக் கொற்றவொள்வாள்
கூடலர்கோன்கொடைக்குல சேகரன்சொற்செய்த
நடைவிளங்குதமிழ்மாலை பத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ் நண்ணுவாரே.

(கச) நாலாந்திருவந்தாதி க-பாசுரம்.

நான்முகனைநாராயணன் படைத்தான்நான்முகனும்
தான்முகமாய்ச்சங்கரனைத் தான்படைத்தான் - யான்முகமாய்
அந்தாதிமேலிட்டறிவித்தே னாழ்பொருளைச்
சிந்தாமற்கொள்மி னீர்தேர்ந்து.

(கரு) திருச்சந்தவிருத்தம் எஎ-பாசுரம்.

எட்டுமெட்டுமெட்டுமா யோரேழுமேழுமேழுமாய்
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை
எட்டினாயபேதமோடிறைஞ்சி நின்றவன்பெயர்
எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே.

(கரு) பெரிய திருமொழி க-பத்து க-திருமொ க-பாசுரம்.

வாடினேன்வாடிவருந்தினேன் மனத்தால்பெருந்துயரிடும்பையிற்பிறந்து
கூடினேன்கூடியிளையவர்தம்மோடவர் தருங்கலவியேகருதி
ஓடினேனோடியுய்வதோர்பொருளாலுணர் வெனும்பெரும்பதந்தெரிந்து
நாடினேன்நாடிநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்.

(கஎ) சிறிய திருமடல் ருO-பாசுரம்.

நாராயணாவோமணிவண்ணா நாகணையாய்
வாராயென்றாரிடரை நீக்காயெனவெகுண்டு.

(கஅ) முதல் திருவந்தாதி ருஎ-பாசுரம்.

அயனின்றவல்வினையை யஞ்சினேனஞ்சி
உயநின்திருவடியேசேர்வான் - அயனின்ற
நன்மாலைகொண்டு நமோநாராணாவென்னுஞ்
சொன்மாலை கற்றேன்தொழுது.

(ககூ) முதல் திருவந்தாதி கூரு-பாசுரம்.

நாவாயிலுண்டே நமோநாரணாவென்
றோவாதுரைக்கு முறையுண்டே - மூவாத
மாக்கதிக்கட் செல்லும்வகையுண்டேயென்னொருவர்
தீக்கதிக்கட் செல்லுந்திறம்.

(உO) இரண்டாந்திருவந்தாதி க-பாசுரம்.

அன்பேதகளியாவார்வமே நெய்யாக
இன்புருகுசிந்தையிடுதிரியா - நன்புருகி
ஞானச்சுடர்விளக்கேற்றினேன் நாரணர்க்கு
ஞானத்தமிழ் புரிந்தநான்.

(உக) இரண்டாந்திருவந்தாதி உO-பாசுரம்.

பழிபாவங்கையகற்றிப் பல்காலும்நின்னை
வழிவாழ்வார்வாழ்வராமாதோ - வழுவின்றி
நாரணன்றன்நாமங்கள் நன்குணர்ந்துநன்கேத்தும்
காரணங்கள் தாமுடையார்தாம்.

(உஉ) இரண்டாந்திருவந்தாதி அக-பாசுரம்.

பகற்கண்டேன்நாரணனைக் கண்டேன்கனவில்
மிகக்கண்டேன்மீண்டவனைமெய்யே - மிகக்கண்டேன்
ஊன்றிகழுநேமியொளிதிகழுஞ் சேவடியான்
வான்திகழுஞ் சோதிவடிவு.

(உரு) மூன்றாந்திருவந்தாதி அ-பாசுரம்.

நாமம்பலசொல்லி நாராயணாவென்று
நாமங்கையாற்றொழுது நன்னெஞ்சே - வாமருவி
மண்ணுலகமுண்டுமிழ்ந்தவண்டறையுந்தண்டுழாய்க்
கண்ணனையே காண்கநங்கண்.

(உச) திருவாய்மொழி க-பத்து க - திருவா க - பாசுரம.

உயர்வறவுயர் நலமுடையவன்யவனவன்
மயர்வறமதிநல மருளினன்யவனவன்
அயர்வறுமமரர்க ளதிபதி யவனவன்
துயரறுசுடரடி தொழுதெழென்மனனே.

(உரு) பெரியதிருமொழி க - பத்து க - திருமொ சு - பாசுரம்

குலந்தருஞ்செல்வந்தந்திடுமடியார் படுதுயராயினவெல்லாம்
நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும் அருளொடுபெருநிலமளிக்கும்
வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயினசெய்யும்
நலந்தருஞ்சொல்லை நான்கண்டு கொண்டேன்நாராயணாவென்னும் நாமம்.

(உசு) பெரியதிருமொழி சு - பத்து க0 - திருமொ சு - பாசுரம்

கானவெண்குங்குரங்கும் முசுவும்படையாவடலரக்கர்
மானமழித்துநின்றவென்றியம்மா னெனக்கென்றும்
தேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமம்
நானுஞ்சொன்னேன் நமருமுரைமின்நமோநாராயணமே.

(உஎ) பெரியதிருமொழி அ - பத்து க0 - திருமொ ௩ - பாசுரம்

முதலாவதைபார்த்துக்கொள்ளவும்.

(உஅ) திருச்சந்தவிருத்தம் ௬௪ - பாசுரம்.

நின்றதெந்தை [illegible] பாடகத்து
அன்றுவெஃகணைக்கிடந்த தென்னிலாதமுன்னெலாம்
அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன்
நின்றதுமிருந்ததுங்கிடந்தது மென்னெஞ்சுளே.

(உகூ) திருவிருத்தம் க - பாசுரம்.

ஆறுவதைப்பார்த்துக்கொள்ளவும்.

(௩0) திருவாய்மொழி சு - பத்து க0 - திரு க0 - பாசுரம்.

அகலகில்லேனிறையுமென்றலர்மேல் மங்கையுறைமார்பா
நிகரில்புகழாயுலகமூன் றுடையாயென்னையாள்வானே
நிகரிலமரர்முனிக்கணங்கள் விரும்புந்திருவேங்கடத்தானே
புகலொன்றில்லாவடியேனுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

(௩க) திருப்பாவை கஎ - பாசுரம்.

அம்பரமே தண்ணீரே சோறேயறஞ்செய்யும்
எம்பெருமான்நந்தகோபாலா வெழுந்திராய்
கொம்பனார்க்கெல்லாங் கொழுந்தேகுலவிளக்கே
எம்பெருமாட்டி யசோதாயறிவுறாய்
அம்பரமூடறுத்தோங்கியுலகளந்த
உம்பர்கோமானேயுறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச் செல்வாபலதேவா
உம்பியும்நீயுமுறங்கேலோ ரெம்பாவாய்.

(௩உ) திருவாய்மொழி ச - பத்து க - திரு ரு - பாசுரம்.

பணிமின்திருவருளென்னு மஞ்சீதப்பைம்பூம்பள்ளி
அணிமென்குழலாரின்பக்கலவியமுதுண்டார்
துணிமுன்புநாலப்பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர்
மணிமின்னுமேனிநம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினே.

(௩௩) நான்காந்திருவந்தாதி ௬அ - பாசுரம்.

திறம்பேல்மின்கண்டீர்திருவடிதன்நாமம்
மறந்தும்புறந்தொழாமாந்தர் - இறைஞ்சியும்
சாதுவராய்ப்போதுமின்களென்றான்நமனுந்தன்
தூதுவரைக்கூவிச்செவிக்கு.

(நுச) திருவாய்மொழி ச - பத்து அ - திரு கO - பாசுரம்.

உடம்பினாற் குறைவில்லாவுயிர் பிரிந்தமலைத்துண்டங்
கிடந்தனபோற்றுணிபலவாவசுரர் குழாந்துணித்துகந்த
தடம்புனலசடைமுடியன்றனியொருகூறமர்ந்துறையும்
உடம்புடையான்கவராதவுயிரினாற்குறைவிலமே.

(நுரு) பெரியதிருமொழி அ - பத்து கூ - திருமொ ந - பாசுரம்

விடையேழன்றடர்த்து வெகுண்டுவிலங்கலுறப்
படையாலாழி தொட்டபரமன்பரஞ்சோதி
மடையார்நீலம்மல்கும்வயல்சூழ்கண்ணபுரமொன்
றுடையானுக்கடியேனொருவர்க்குரியேனோ.

(நுசு) முதல்திருவந்தாதி சுஎ - பாசுரம்.

பெயருங்கருங்கடலேநோக்குமாறொண்பூ
உயருங்கதிரவனேநோக்கும் - உயிரும்
தருமனையேநோக்குமொண்டாமரையாள்கேள்வன்
ஒருவனையேநோக்குமுணர்வு.

(நுஎ) திருவாய்மொழி க - பத்து உ - திரு க - பாசுரம்.

வீடுமின்முற்றவும் - வீடுசெய்தும்முயிர்
வீடுடையானிடை - வீடுசெய்மினே.

(நுஅ) திருவாய்மொழி உ - பத்து கூ - திரு கூ - பாசுரம்.

யானேயென்னை யறியகிலாதே
யானேயென்றனதே யென்றிருந்தேன்
யானேநீயென்னுடைமையுநீயே
வானேயேத்துமெம்வானவரேறே.

(நுகூ) திருவாய்மொழி ரு - பத்து அ - திரு அ - பாசுரம்.

களைவாய்துன்பங்களையா தொழிவாய்களைகண்மற்றிலேன்
வளைவாய்நேமிப்படையாய்குடந்தைக்கிடந்தமாமாயா
தளராவுடலமெனதாவிசரிந்துபோம்போது
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப்போதவிசைநீயே.

(சO) திருப்பாவை உகூ - பாசுரம்.

சிற்றஞ்சிறுகாலேவந்துன்னைச்சேவித்துப்
பொற்றாமரையடியேபோற்றும்பொருள்கேளாய்
பெற்றம்மேய்த்துண்ணுங்குலத்திற்பிறந்துநீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகா
திற்றைப்பறைகொள்வானன்று காண்கோவிந்தா
எற்றைக்குமேழேழ்பிறவிக்குமுன்றன்னோ
டுற்றோமேயாவோ முனக்கேநாமாட்செய்வோம்
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்.

(சக) திருவாய்மொழி சு - பத்து ரு - திரு க - பாசுரம்

துவளின்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலந்தொழும்
இவளைநீரினியன்னை மீருமக்காசையில்லைவிடுமினோ
தவளவொண்சங்குசக்கரமென்றுந்தாமரைத்தடங்கணென்றுங்
குவளையொண்மலர்கண்கணீர்மல்கநின்றுநின்றுகுமிறுமே.

(சஉ) திருவாய்மொழி ௩ - பத்து ௩ - திரு ௬ - பாசுரம்.
வேங்கடங்கண்மெய்மேல் வினைமுற்றவுந்
தாங்கள்தங்கட்கு நல்லனவேசெய்வார்
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாங்கடமையதுசுமந்தார்கட்கே.

(சங) திருவாய்மொழி ௰ - பத்து அ - திரு எ - பாசுரம்.
உண்டுகளித்தேற்கும்பரென்குறைமேலைத்
தொண்டுகளித்தந்திதொழுஞ்சொல்லுப்பெற்றேன்
வண்டுகளிக்கும்பொழில் சூழ்திருப்பேரான்
கண்டுகளிப்பக்கண்ணுள்நின்றகலானே.

(சச) பெரியதிருமொழி அ - பத்து ௰ - திருமொ ௩ - பாசுரம்.
முதலாவதைப் பார்த்துக்கொள்க.

(சரு) திருவாய்மொழி உ - பத்து க - திரு எ - பாசுரம்.
எனக்கேயாட்செய்யெக்காலத்துமென்றென்
மனக்கேவந்திடைவீடின்றிமன்னித்
தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே
எனக்கேகண்ணனையான்கொள்சிறப்பே.

(சசு) திருவாய்மொழி க - பத்து ௬ - திரு எ - பாசுரம்.
காட்கரையேத்துமதனுட்கண்ணனென்னும்
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும்
ஆட்கொள்வானொத்தென்னுயிருண்டமாயனால்
கோட்குறைபட்டதென்னுருயிர்கோளுண்டே.

(சஎ) பெரியதிருவந்தாதி ருங - பாசுரம்.
ஒன்றுண்டுசெங்கண்மால்யானுரைப்பதுன்னடியார்க்
கென்செய்வனென்றேயிருத்திநீ - நின்புகழில்
வைகுந்தஞ்சிந்தையிலும்மற்றினிதோநீயவர்க்கு
வைகுந்தமென்றருளும்வான்.

(சஅ) திருவாய்மொழி அ - பத்து ௩ - திரு ௰ - பாசுரம்.
கலக்கமில்லாநற்றவமுனிவர் கரைகண்டோர்
துளக்கமில்லாவானவரெல்லாந்தொழுவார்கள்
மலக்கமெய்தமாகடல்தன்னைக்கடைந்தானை
உலக்கநாம்புகழ்கிற்பதென்செய்வதுரையீரே.

(சகூ) பெரியதிருமொழி க - பத்து க - திருமொ ௬ - பாசுரம்.
எம்பிரானெந்தையென்னுடைச்சுற்றமெனக்கரசென்னுடைவாழ்நாள்
அம்பினாலரக்கர்வெருக்கொள நெருக்கியவருயிர்செகுத்தவெம்மண்ணல்
வம்புலாஞ்சோலைமாமதிட்டஞ்சைமாமணிக்கோயிலேவணங்கி
நம்பிகாளுய்யநான்கண்டுகொண்டேன்நாராயணாவென்னும்நாமம்.

(ரு௰) முதல்திருவந்தாதி ருங - பாசுரம்.
சென்றாற்குடையாமிருந்தாற்சிங்காசனமாம்
நின்றால்மரவடியாம்நீள்கடலுள் - என்றும்
புணையாம்மணிவிளக்காம்பூம்பட்டாம்புல்கும்
அணையாந்திருமாற்கரவு.

(ருக) பெருமாள்திருமொழி ச - திருமொ ௬ - பாசுரம்.
செடியாயவல்வினைகள்தீர்க்குந்திருமாலே
நெடியானேவேங்கடவாநின்கோயில்வாசல்

அடியாரும்வானவருமரம்பையருங்கடந்தியங்கும்
படியாய்க்கிடந்துன்பவளவாய்காண்பேனே.

(௫உ) திருவாய்மொழி ௩ - பத்து ௩ - திரு க - பாசுரம்.

ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி
வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்
தெழிகுரலருவித்திருவேங்கடத்
தெழில்கொள்சோதியெந்தைதந்தைதந்தைக்கே.

(௫௩) திருவிருத்தம் கஎ - பாசுரம்.

எழுவதும்மீண்டே படுவதும்பட்டெனையூழிகள்போய்க்
கழிவதுங்கண்டுகண்டெள்கலல்லாலிமையோர்கள்குழாந்
தொழுவதுஞ்சூழ்வதுஞ்செய்தொல்லை மாலைக்கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்குமுண்டோகண்கள்துஞ்சுதலே.

(௫௪) முதல்திருவந்தாதி கக - பாசுரம்.

பழுதேபலபகலும்போயினவென்றஞ்சி
அழுதேனரவணைமேற்கண்டு - தொழுதேன்
கடலோதங்காலலைப்பக்கண்வளருஞ்செங்கண்
அடலோதவண்ணரடி.

(௫௫) திருவாய்மொழி ௩ - பத்து ௩ - திரு க - பாசுரம்.

(௫உ) - வதைப்பார்த்துக்கொள்க.

(௫௬) திருவாய்மொழி கூ - பத்து ௩ - திரு எ - பாசுரம்.

ஆகஞ்சேர் நரசிங்கமதாகியோர்
ஆகம்வள்ளுகிராற்பிளந்தானுறை
மாகவைகுந்தங்காண்பதற்கென்மனம்
ஏகமெண்ணுமிராப்பகலின்றியே.

(௫எ) திருவாய்மொழி கூ - பத்து கூ - திரு கூ - பாசுரம்.

ஆவிதிகைக்கவைவர் குமைக்குஞ்சிற்றின்பம்
பாவியேனைப்பலநீகாட்டிப்படுப்பாயோ
தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே
கூவிக்கொள்ளுங்கால்மின்னங்குறுகாதோ.

(௫அ) திருநெடுந்தாண்டகம் கூ - பாசுரம்.

அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்தன்
அஞ்சிறைப்புட்டனிப்பாகனவுணர்க்கென்றுஞ்
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன்
றானுகந்தவூரெல்லாந்தந்தாள்பாடி
நிலம்பரந்துவருங்கலுழிப்பெண்ணையீர்த்த
நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்திப்
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப்
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே.

(௫கூ) திருக்குறுந்தாண்டகம் ககூ - பாசுரம்.

பிண்டியார்மண்டையேந்திப்பிறர்மனைதிரிதந்துண்ணும்
உண்டியான்சாபந்தீர்த்தவொருவனூருலகமேத்தும்
கண்டியூரரங்கம்மெய்யங்கச்சிபேர்மல்லையென்று
மண்டினாருய்யிலல்லால்மற்றையார்க்குய்யலாமே.

(கூய) திருவாய்மொழி கூ - பத்து ய - திரு ய - பாசுரம்.

(௩ய) வதைப்பார்த்துக்கொள்க.

(கூக) பெரியாழ்வார் திருமொழி உ - பத்து உ - திருமொ ௩ - பாசுரம்.

தந்தம்மக்களழுதுசென்றாற்றாய் மாராவார்தரிக்ககில்லா
வந்துநின்மேல்பூசல்செய்யவாழவல்லவாசுதேவா
உந்தையாருன்றிறத்தரல்லருன்னை நானொன்றுரப்பமாட்டேன்
நந்தகோபனணிசிறுவா நான்சுரந்தமுலையுணாயே.

(கூஉ) திருநெடுந்தாண்டகம் கஅ - பாசுரம்.

கார்வண்ணன்றிருமேனிகண்ணும்வாயுங்
கைத்தலமுமடியிணையுங்கமலவண்ணம்
பார்வண்ணமடமங்கைபத்தர்பித்தர்
பனிமலர்மேற்பாவைக்குப்பாவஞ்செய்தேன்
ஏர்வண்ணவென்பேதையென்சொற்கேளா
ளெம்பெருமான்றிருவரங்கமெங்கேயென்னும்
நீர்வண்ணன்னீர்மலைக்கே போவேனென்னு
மிதுவன்றோநிறைவழிந்தார்நிற்குமாறே.

(கூ௩) மூன்றாந்திருவந்தாதி ௩ - பாசுரம்.

மனத்துள்ளான் மாகடல்நீருள்ளான்மலராள்
தனத்துள்ளான்றண்டுழாய்மார்பன்-சினத்துச்
செருநாகச்செற்றுகந்த தேங்கோதவண்ணன்
வருநரகந்தீர்க்குமருந்து.

(கூச) பெரியதிருமொழி அ - பத்து ய - திருமொழி க - பாசுர.

வண்டார்பூமாமலர்மங்கைமணநோக்க
முண்டானேயுன்னையுகந்துகந்துன்றனக்கே
தொண்டானேற்கென்செய்கின்றாய்சொல்லுநால்வேதங்
கண்டானேகண்ணபுரத்துறையம்மானே.

(கூரு) திருவாய்மொழி ௩ - பத்து ய - திரு அ - பாசுரம்

அல்லலிலின்பமளவிறந்தெங்குமழகமர்சூழொளியன்
அல்லிமலர்மகள்போகமயக்குகளாகியும்நிற்குமம்மான்
எல்லையில்ஞானத்தன ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களுஞ்செய்
எல்லையில்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றியானோர்துக்கமிலனே.

(கூசா) பெரியாழ்வார் திருமொழி ௩ - பத்து ய - திரு மொ சா-பாசுர.

மின்னொத்தநுண்ணிடையாய் மெய்யடியேன விண்ணப்பம்
பொன்னொத்தமானொன்றுபுகுந்தினிதுவிளையாட
நின்னன்பின்வழிநின்றுசிலைபிடித்தெம்பிரானேகப்
பின்னேயங்கிலக்குமணன்பிரிந்ததுவோரடையாளம்.

(கூஎ) பெரியதிருமொழி ரு - பத்து அ - திருமொழி உ - பாசுர.

வாதமாமகன்மர்க்கடம்விலங்கு
மற்றோர்சாதியென்றொழிந்திலையுகந்து
காதலாதரங்கடலினும்பெருகச்செய்
தகவினுக்கில்லைகைம்மாறென்று
கோதில்வாய்மையினாயொடுமுடனே
யுண்பனானென்றவொண்பொருளெனக்கும்
ஆதல்வேண்டுமென்றடியிணையடைந்தே
னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே.

(௬௮) மூன்றாந்திருவந்தாதி ௱ - பாசுரம்.

சார்வுநமக்கென்றுஞ்சக்கரத்தான்றண்டுழாய்த் -
தார்வாழ்வரைமார்பன்றான்முயங்கும் - காரார்ந்த
வானமருமின்னிமைக்கும்வண்டாமரைநெடுங்கட்
டேனமரும்பூமேற்றிரு.

(௬௯) பெரியாழ்வார் திருமொழி ௩ - ௰ - ௭ - பாசுரம்.

(௬௬) வகைப்பார்த்துக்கொள்க.

(௭௰) பெரிய திருமொழி ௨ - பத்து ௫ - திருமொழி ௬ - பாசுரம்.

கிடந்தானைத்தடங்கடலுட்பணங்கள்மேவிக்
கிளர்பொறியமறிதிரியவதனின்பின்னே
படர்ந்தானைப்படுமதத்தகளிற்றின்கொம்பு
பறித்தானைப்பாரிடத்தையெயிறுகீற
விடந்தானைவளைமருப்பிலேனமாகி
யிருநிலனும்பெருவிசும்புமெய்தாவண்ணங்
கடந்தானையெம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே.

(௭௧) பெரிய திருவந்தாதி ௫௮ - பாசுரம்.

மாலேபடிச்சோதிமாற்றேலினியுனது
பாலேபோற்சீரில்பழுத்தொழிந்தேன் - மேலால்
பிறப்பின்மைபெற்றடிக்கீழ்க்குற்றேவலென்று
மறப்பின்மையான்வேண்டும்மாடு.

(௭௨) திருவாய்மொழி ௫ - பத்து ௧ - திரு ௭ - பாசுரம்.

அம்மானாழிப்பிரானவனெவ்விடத்தான்யானார்
எம்மாபாவியர்க்கும்விதிவாய்க்கின்றுவாய்க்குங்கண்டீர்
கைம்மாதுன்பொழித்தாயென்றுகைதலைபூசலிட்டே
மெய்ம்மாலாயொழிந்தேனெம்பிரானுமென்மேலானே.

(௭௩) திருவாய்மொழி ௫ - பத்து ௧ - திரு ௭ - பாசுரம்.

(௬௰) வகைப்பார்த்துக்கொள்க.

(௭௪) முதல்திருவந்தாதி ௪௪ - பாசுரம்.

தமருகந்ததெவ்வுருவமவ்வுருவந்தானே
தமருகந்ததெப்பேர்மற்றப்பேர் - தமருகந்த
தெவ்வண்ணஞ்சிந்தித்திமையாதிருப்பரேல்
அவ்வண்ணமாழியானாம்.

(௭௫) திருவாய்மொழி ௮ - பத்து ௩ - திரு ௬ - பாசுரம்.

பணியாவமரர்பணிவும்பண்புந்தாமேயா
மணியாராழியுஞ்சங்கமுமேந்துமவர்காண்மின்
தணியாவெந்நோயுலகிற்றவிர்ப்பான்றிருநீல
மணியார்மேனியோடென்மனஞ்சூழவருவாரே.

(௭௬) திருவாய்மொழி ௩ - பத்து ௧ - திரு ௧ - பாசுரம்.

முடிச்சோதியாயுனதுமுகச்சோதிமலர்ந்ததுவோ
அடிச்சோதிநீநின்றதாமரையாயலர்ந்ததுவோ
படிச்சோதியாடையொடும்பல்கலனாய்நின்பைம்பொற்
கடிச்சோதிகலந்ததுவோதிருமாலேகட்டுரையே.

(எஎ) பெரியதிருமொழி க - பத்து அ - திருமொழி ௩ - பாசுர .
நின்றமாமருதிற்றுவீழநடந்தநின்மலனேமியான்
என்றும்வானவர்கைதொழுமிணைத்தாமரையடியெம்பிரான்
கன்றிமாரிபொழிந்திடக்கடிதாநிரைக்கிடர்நீக்குவான்
சென்றுகுன்றமெடுத்தவன்திருவேங்கடமடைநெஞ்சமே.

(எஅ) பெரியாழ்வார் திருமொழி ௪-பத்து கூ-திருமொழி உ-பாசு ம்.
தன்னடியார்திறத்தகத்துத்தாமரையாளாகிலுஞ்சிதகுரைக்குமேல்
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்றுசெய்தாரென்பர்போலும்
மன்னுடையவிபீடணற்காய்மதிளிலங்கைத்திசைநோக்கிமலர்க்கண்வைத்த
என்னுடையதிருவரங்கற்கன்றியுமற்றொருவர்க்காளாவரே.

(எகூ) திருவாய்மொழி க - பத்து உ - திரு ௰ - பாசுரம்.

(எ) வதைப்பார்த்துக்கொள்க.

(அ௰) மூன்றாந்திருவந்தாதி ருஎ - பாசுரம்.
பொலிந்திருண்டகார்வானில்மின்னேபோற்றோன்றி
மலிந்துதிருவிருந்தமார்பன் - பொலிந்து
கருடன்மேற்கொண்டகரியான்கழலே
தெருடன்மேற்கண்டாய்தெளி.

(அக) பெரியாழ்வார் திருமொழி ௪-பத்து ௩- திருமொ ரு - பாசு ம்.
பலபலநாழஞ்சொல்லிப்பழித்தசிசுபாலன்றன்னை
அலவலமைதவிர்த்தவழகனலங்காரன்மலை
குலமலைகோலமலைகுளிர்மாமலைகொற்றமலை
நிலமலைநீண்டமலைதிருமாலிருஞ்சோலையதே.

(அஉ) திருவாய்மொழி எ- பத்து ரு - திரு ௩ - பாசுரம்.
கேட்பார்கள்கேசவன்கீர்த்தியல்லால்மற்றுங்கேட்பரோ
கேட்பார்செவிசுடுகீழ்மைவசைவுகளேவையுஞ்
சேட்பார்பழம்பகைவன்சிசுபாலன்திருவடி
தாட்பாலடைந்ததன்மையறிவாரையறிந்துமே.

(அ௩) திருவாய்மொழி கூ - பத்து ரு - திரு கக - பாசுரம்.
சிந்தையாலுஞ்சொல்லாலுஞ்செய்கையினாலுந்தேவபிரானையே
தந்தைதாயென்றடைந்தவண்குருகூர்ச்சடகோபன்
முந்தையாயிரத்துள்ளிவைதொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன
செந்தமிழ்ப்பத்தும்வல்லாரடிமைசெய்வார்திருமாலுக்கே.

(அ௪) பெரியதிருமொழி ரு -பத்து அ - திருமொழி க - பாசுரம்.
ஏழையேதலன்கீழ்மகனென்னா
திரங்கிமற்றவர்க்கின்னருள்சுரந்து
மாழைமான்மடநோக்கியுன்றோழி
யும்பியெம்பியென்றொழிந்திலையுகந்து
தோழன்நீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள்வந்தடியேன்மனத்திருந்திட
வாழிவண்ணநின்னடியிணையடைந்தே
னணிபொழிற்றிருவரங்கத்தம்மானே.

(அரு) திருவாய்மொழி கூ-பத்து ௰ - திரு ௰ - பாசுரம்.

(கூ௰) வதைப்பார்த்துக்கொள்க.

(அகூ) திருப்பாவை உகூ - பாசுரம்.

(௪௰) வதைப்பார்த்துக்கொள்க.

(அஎ) திருவாய்மொழி உ - பத்து கூ - திரு ச - பாசுரம்.

(சரு) வதைப்பார்த்துக்கொள்க.

(அஅ) திருவாய்மொழி கூ - பத்து ரு - திரு ச - பாசுரம்.

மருந்தே நங்கள்போகமகிழ்ச்சிக்கென்று
பெருந்தேவர்குழாங்கள்பிதற்றும்பிரான்
கருந்தேவனெம்மான்கண்ணன் விண்ணுலகம்
தருந்தேவனைச்சோரேறற்கண்டாய்மனமே.

(அகூ) பெரியாழ்வார் திருமொ ச - பத்து கூ - திரு மொ உ-பாசுரம்.

(எஅ) வதைப்பார்த்துக்கொள்க.

(கூ௰) திருவாய்மொழி ரு - பத்து கூ - திருமொழி ௰ - பாசுரம்.

கடல்வண்ணன் கண்ணன் விண்ணவர்கருமாணிக்கமெனதாருயிர்
படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர்பண்டுநூற்றுவர்
அடவருபடைமங்கவைவர் கட்காகிவெஞ்சமத்தன்றுதேர்
கடவியபெருமான்கனைகழல்காண்பதென்றுகொல்கண்களே.

(கூக) திருவாய்மொழி ரு - பத்து எ - திரு ௰ - பாசுரம்.

ஆறெனக்குநின்பாதமேசரணாகத்தந்தொழிந்தாயுனக்கோர்கைம்
மாறுநானொன்றிலேனெனதாவியுமுனதே
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும்மலிதண்சிரீவரமங்கை
நாறுபூந்தண்டுழாய்முடியாய்த்தெய்வநாயகனே.

(கூஉ) திருவாய்மொழி உ - பத்து எ - திரு கூ - பாசுரம்.

மதுசூதனையன்றிமற்றிலேனென்றெத்தாலுங்கருமமின்றித்
துதிசூழ்ந்தபாடல்கள்பாடியாடநின்றூழியூழிதொறும்
எதிர்சூழல்புக்கெனைத்தோர்பிறப்புமெனக்கேயருள்செய்ய
விதிசூழ்ந்ததாலெனக்கேலெம்மான்றிருவிக்கிரமனையே.

(கூங) திருவாய்மொழி அ - பத்து அ - திரு ரு - பாசுரம்.

உணர்விலும்பரொருவனையவனதருளாலுறற்பொருட்டென்
உணர்வினுள்ளேயிருத்தினேனதுவுமவனதின்னருளே
உணர்வுமுயிருமுடம்புமற்றுலப்பிலனவும்பழுதேயாம்
உணர்வைப்பெறவூர்ந்திறவேறியானுந்தானாயொழிந்தானே.

(கூச) திருவாய்மொழி ரு - பத்து அ - திரு ரு - பாசுரம்.

என்னான்செய்கேன்யாரேகளைகணென்னையென்செய்கின்றாய்
உன்னாலல்லால்யாவராலுமொன்றுங்குறைவேண்டேன்
கன்னார்மதில்சூழ்குடந்தைக்கிடந்தாயடியேனருவாணாள்
சென்னாளெந்நாளந்நாளுனதாள்பிடித்தேசெலக்காணே.

(கூரு) திருவாய்மொழி கூ - பத்து க - திருமொழி எ - பாசுரம்.

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம்மாநிலத்தெவ்வுயிர்க்குஞ்
சிற்றவேண்டாசிந்திப்பேயமையுங்கண்டீர்களந்தோ
குற்றமன்றெங்கள்பெற்றத்தாயன்வடமதுரைப்பிறந்தான்
குற்றமில்சீர்கற்றுவைகல்வாழ்தல்கண்டீர்குணமே.

(கூகூ) திருவாய்மொழி உ - பத்து எ - திரு அ - பாசுரம்.

வாமனனென்மரகதவண்ணன்றாமரைக்கண்ணினன்
காமனைப்பயந்தாயென்றென்றுன்கழல்பாடியேபணிந்து
தூமனத்தனனாய்ப்பிறவித்துழதிநீங்கவென்னைத்
தீமனங்கெடுத்தாயுனக்கென்செய்கேனென்சிரீதரனே.

(கூஎ) திருவாய்மொழி உ - பத்து எ - திரு எ - பாசுரம்.
திருவிக்கிரமன்செந்தாமரைக்கண்ணனெம்மான்செங்கனிவாய்
உருவிற்பொலிந்தவெள்ளைப்பளிங்குநிறத்தனனென்றென்றுள்ளிப்
பரவிப்பணிந்துபல்லூழியூழிநின்பாதபங்கயமே
மருவித்தொழுமனமேதந்தாய்வல்லைகாணென்வாமனனே.

(கூஅ) திருவாய்மொழி கூ - பத்து ரு - திரு கக - பாசுரம்.

(அங) வகைப்பார்த்துக்கொள்க.

(௱) திருவிருத்தம் க - பாசுரம்.

(கூ) வகைப்பார்த்துக்கொள்க.

(௱உ) பெரியதிருவந்தாதி ருச - பாசுரம்.
வானோமறிகடலோமாருதமோதீயகமோ
கானோவொருங்கித்துங்கண்டிலமால் - ஆனீன்ற
கன்றுயரத்தாமெறிந்துகாயுதிர்த்தார்தாள்பணிந்தோம்
வன்றுயரையாவார்மருங்கு.

(௱௩) திருச்சந்தவிருத்தம் ககரு - பாசுரம்.
அத்தனாகியன்னையாகியாளுமெம்பிரானுமாய்
ஒத்தொவ்வாதபல்பிறப்பொழித்துநம்மையாட்கொள்வான்
முத்தனார்முகுந்தனார்புகுந்துநம்முண்மேவினார்
எத்திறலிடர்க்கடற்கிடத்தியேழைநெஞ்சமே

(௱ச) திருச்சந்தவிருத்தம் கக௧ - பாசுரம்.
வைதுநின்னைவல்லவாபழித்தவர்க்குமாறில்போர்
செய்துநின்றுசெற்றதீயில்வெந்தவர்க்கும்வந்துன்னை
எய்தலாகுமென்பராதலாலெம்மாயநாயினேன்
செய்தகுற்றநற்றமாகவேகொள்ஞாலநாதனே.

(௱ரு) பெரியாழ்வார் திருமொழி ச - பத்து கூ - பாசுரம்.

(எஅ) வகைப்பார்த்துக்கொள்க.

(௱கூ) திருவாய்மொழி ரு - பத்து எ - திரு க - பாசுரம்
நோற்றநோன்பிலேன்நுண்ணறிவிலேனாகிலுமினியுன்னைவிட்டொன்றும்
ஆற்றகிற்கின்றிலேனரவினணையம்மானே
சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர்சிரீவரமங்கலநகர்
வீற்றிருந்தவெந்தாயுனக்குமிகையல்லேனங்கே.

(௱எ) நாச்சியார் திருமொழி கக - திருமொழி ய - பாசுரம்.
செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த
மெய்ம்மைப்பெருவார்த்தைவிட்டுசித்தர்கேட்டிருப்பர்
தம்மையுகப்பாரைத்தாமுகப்பரென்னுஞ்சொல்
தம்மிடையேபொய்யானால் சாதிப்பாராரினியே.

(௱அ) திருவாய்மொழி வா எ - ரு - ய - பாசுரம்.
வார்த்தையறிபவர்மாயவற்காளன்றியாவரோ
போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடிறப்பவை
பேர்த்துப்பெருந்துன்பம்வேரறநீக்கித்தன்றாளின்கீழ்ச்
சேர்த்தியவன்செய்யுஞ்சேமத்தையெண்ணித்தெளிவுற்(

(௱கூ) திருச்சந்தவிருத்தம் - ககரு - பாசுரம்.

௱௩) வகைப்பார்த்துக்கொள்க.

ஸ்ரீயார் திருவடிகளே சரணம்.

முற்றும்.

